# சங்க இலக்கியப் புற நூல்களில் அரசர்களின் ஆளுமை

அண்ணாமலைப் பல்கலைக்கழகத் தமிழியல்துறையில்
முனைவர்ப் பட்டத்திற்காகப் பணிக்கப்பெறும் ஆய்வேடு


ஆய்வாளர்

**கோ. சரண்ராஜ்**

சுழல் எண்: 172506005

நெறியாளர்

முனைவர் **வ. கணபதிராமன்**

இணைப் பேராசிரியர்

தமிழியல்துறை

அண்ணாமலைப்  பல்கலைக்கழகம்

அண்ணாமலை நகர் – 608 002


2021

# நெறியாளர் சான்றிதழ்

**முனைவர் வ. கணபதிராமன்**
இணைப் பேராசிரியர், தமிழியல் துறை
அண்ணாமலைப் பல்கலைக்கழகம்
அண்ணாமலை நகர் - 608 002.

இடம் : அண்ணாமலைநகர்
நாள் :

---

**அற இலக்கியப் பதிவுகளில் இல்லறமும் துறவறமும்** என்னும் தலைப்பில் **கி. தங்கப்பாண்டி** என்பவர், 2017-2020 ஆம் கல்வியாண்டில் அண்ணாமலைப் பல்கலைக்கழகத் தமிழியல்துறையில் முனைவர்ப் பட்ட ஆய்வாளராக இருந்து செய்யப்பட்ட இவ் ஆய்வு அவரது சொந்த முயற்சியால் உருவானது என்றும், இவ் ஆய்வின் மீது வேறு எந்தப் பட்டமும் ஆய்வாளருக்கு அளிக்கப் பெறவில்லை என்றும் சான்றளிக்கிறேன்.

**(முனைவர் ந. வெங்கடேசன்)**
**பேராசிரியர் மற்றும் தலைவர்**

**(முனைவர் மூ. பாலசுப்பிரமணியன்)**
**நெறியாளர்**

# முடிவுரை

**"சங்க இலக்கியப் புறநூல்களில் அரசர்களின் ஆளுமை"** என்னும் தலைப்பில் ஒவ்வொரு இயலிலும் இறுதியில் கண்ட மெய்மைகள் ஆய்வு முடிவுரையாக தரப்பட்டுள்ளது.

புறவாழ்க்கை என்ற முதல் இயலில் அகவாழ்வில் பெறப்படக்கூடிய இன்பத்திற்கு காரணம் புறத்தே நிகழும் புறச்செயல்களே ஆகும் என்பதை எடுத்துக்காட்டுகிறது.

புறநால்கள் மக்களின் வீரம், புலமை அவற்றை வெளிப்படுத்தும் திறனை தெளிவுப்படுத்தி புலவர்கள் பாடியுள்ளதை கண்டறிந்துள்ளது.

அரசனது ஒழுக்கம், கடைப்பிடிக்கப்படும் செங்கோல் ஆட்சிமுறை, பாரம்பரிய ஆட்சி செம்மை போன்றவற்றை புறநால்கள் வாயிலாக ஆராயந்துள்ளது.

அரசரின் கடனாக மக்களின் குடி ஓம்புதல், நீர் வளத்தினை மேம்படுத்தி, துன்பமின்றி செல்வ நிலையில் நாட்டைக் காத்த விதத்தினை எடுத்துக்காட்டியுள்ளது.

வீரம் என்பது அனைவருக்கும் வேண்டும். சங்ககாலத்தில் நாட்டுக்காக பெண் செய்த வீரச் செயல்களை எடுத்துக்காட்டியுள்ளது.

'உழவுக்கும் தொழிலுக்கும் வந்தனை செய்வோம்' என்பது போல உழவுத்தொழிலின் மேன்மையினையும், பிறத் தொழில்களையும் புறப்பாடல்கள் வழி ஆராய்ந்துள்ளது. வாணிபம் செய்த நிலையினையும் அரசு வரிப்பெற்ற முறைப் பற்றியும் அறிந்துகொள்ள முடிகின்றது.

கலைகள் பல உண்டு. மக்களின் நாகரிக பண்பாட்டினை எடுத்துரைக்கும் வகைகளில் அமைந்த கலை நுட்பத்திறன்களை இவ் இரண்டாம் இயல் உரைத்துள்ளது.

அரசர்கள் மட்டுமின்றி உழைக்கும் மக்கள் யாவரும் தான் உழைத்த உழைப்பில் பெற்ற ஊதியத்திலிருந்து தம்மால் இயன்ற பொருளை இரவலருக்கு வழங்கியதையும் கொடைத் தன்மை யாவரும் செயல்படுத்திடும் முறையையும் விளக்கியுள்ளது.

தனி மனித வாழ்வைப் பொது வாழ்வில் மேம்படச் செய்வது புறவாழ்க்கை எனலாம். மனிதனின் வீரம், கொடை, புகழ், தொழில், வணிகம், கலை போன்றவற்றின் சிறப்புகளை பிறருக்கும், உலகத்தார்க்கும் புலப்படுத்தும் விதமாக அமைந்துள்ளது.

தன்னை விட வலிமை குறைந்தவரோடு போரிடுதல் அக்காலத்தில் அறமாகப் போற்றப்படவில்லை. தன்னை ஒத்த வலிமை உடையவரோடு போரிடுவதே அறமாக இருந்தது. மனிதனாய்ப் பிறந்த ஆண்மகன் தன் புகழை வீரத்தினால் நிறுவவேண்டும் என்று ஆண்மகனுக்கு இலக்கணம் கூறுவதாய் பாடல் அமைந்துள்ளது. மன்னர் நால்வகைப் படையுடன் பொலிந்தனர். கடற்படை கொண்டு கடலிலும் தம் ஆணையைச் செலுத்தினர் என்பதும் விளங்குகின்றது.

பாரியின் மகளை வேண்டி பெண்கேட்டபொழுது பாரி மன்னன் பெண் கொடுக்க மறுக்கின்றான். ஆகையால் மகள் மறுத்தல் என்னும் துறையாகின்றது. வலிமையான அம்பு செலுத்தும் வில்லாற்றல் பெற்றதால் ஓரி வல்வில் ஓரி என்னும் சிறப்பினைப் பெற்றான் என்பதனை அறியமுடிகின்றது.

ஆண்களுக்குக் குழந்தைப் பருவத்திலேயே அணிவிக்கப்படும் ஐம்படைத்தாலி போன்ற வீரக்குறியீடுகள் வீரத்தை உணர்த்துகின்றது. தமிழகத்தை ஆண்ட முடியுடை மூவேந்தரும் தம் ஒப்புயர்வற்ற வீரச் செயல்களால் உலகப் புகழ் பெற்று வாழ்ந்தனர். வீரத்தின் திருவுருவங்களாகவே விளங்கினர்.

கரிகாற்சோழன் உலகத்தை ஒரு குடையின் கீழ் வைத்து ஆண்டவன். குடி மக்களின்பால் குறையாத அன்பு கொண்டவன். அறங்கூறும் நூல்களை அறிந்து அம்முறையைப் பின்பற்றி ஆட்சி செய்தவன். கரிகாற் சோழன் வெண்ணி என்ற இடத்திலே சேரனையும், பாண்டியனையும் போரிலே தோற்கடித்து வெற்றிமாலை சூடினான்.

பாண்டியன் நெடுஞ்செழியன் சேரன், சோழன், திதியன், எழினி, எருமையூரன், இருங்கோவேண்மான், பொருநன் என்னும் ஏழு மன்னர்களையும் போரிலே புறமுதுகிட்டோடும்படி செய்தவன். தலையாலங்கானம் என்ற இடத்திலே இந்த எழுவருடன் போர் புரிந்து வெற்றி பெற்றான்.

பெரும்பாணாற்றுப்படையின் பாட்டுடைத் தலைவன் தொண்டைமான் இளந்திரையன் ஆவான். இவன் காஞ்சியைத் தலைநகராகக் கொண்டு ஆண்டான். பதிற்றுப்பத்தின் இரண்டாம் பத்தில் குமட்டுர் கண்ணனாரால் பாடப்பெற்ற சிறப்புமிக்கவன் இமயவரம்பன். இவ்வரசரது பெயரே இவனது வீரத்தை, வெற்றியைப் பறைசாற்றுகிறது.

தகரூர் போரில் பெற்ற வெற்றியால் 'தகரூர் எறிந்த பெருஞ்சேரல் இரும்பொறை' என்று போற்றப்பட்ட இரும்பொறை கல்வி, கேள்வி, கொடை தன்மையிலே சிறந்தவன். போர்க் கோலத்துடன் குழந்தையைப் பார்த்தால் குழந்தையும் வீரம் மிகுந்ததாகக் காணப்படும் என்ற நம்பிக்கை சங்ககால மன்னர்களிடையே இருந்துள்ளது. ஆடவர் மட்டுமல்லாது மகளிரும் மறமேம்பாடு மிக்கவராய் திகழ்ந்து வந்திருக்கின்றனர் என்பதை புறநூல்கள் நன்கு விளக்கி இருக்கிறது.

உழிஞை, நொச்சிப் போர்கள் மதிலினை அடிப்படையாகக் கொண்டு நிகழ்வன. பகைவருடைய மதிலைக் கைப்பற்றக் கருதி அதனை வளைத்தல் உழிஞைத்திணை. பகைவருடைய தாக்குதலினின்றும் தம்முடைய மதிலைக்

காத்தல் நொச்சித்திணை. தமிழர் தொல்காப்பிய காலந்தொட்டே போர்க்கருவிகளைக் கையாள்வதிலும், அவற்றை வடிவமைத்துக் கொள்வதிலும் பழக்கமுடையவராக இருந்துள்ளனர்.

சங்ககாலத் தமிழர் போர்க்கருவிகளைப் பெரும்பாலும் இரும்பால் ஆக்கி கொண்டனர். அவற்றைப் புதிதாக உருவாக்கிட, சீர் செய்ய உலைக்கூடங்களை அவர்கள் அமைத்துக் கொண்டனர். தொல்காப்பியர், புறத்திணையியலில் கூறியுள்ள சூத்திரங்களில் 20 சூத்திரங்கள் போர் முறையைப் பற்றியே விவரித்துக் கூறுகிறார்.

தமிழ் மன்னர்கள் ஒருவருக்கொருவர் போர் தொடுக்கின்றபோது அவர்கள் மக்களுக்குச் செய்கின்ற அழிவை தொல்காப்பியர் "எரிபரந்தெடுத்தல்" என்ற ஒரு துறையாகக் காட்டிச் சொல்கிறார். சங்ககாலப் பெண்கள் மனத்திண்மையுடையவராய் விளங்கினர். தம் புதல்வரின் விழுப்புண் கண்டு மகிழ்ந்த வீரத்தாயார் பலர் தமிழ்நாட்டில் இருந்தனர்.

சங்க கால மக்கள் பிறர்க்கென வாழ்தலும், நன்றி மறவாமையுடன் இருந்துள்ளனர். போரிலும், அரசாட்சியிலும் அறமானது சிறப்பாகக் கையாளப்பட்டுள்ளது. சங்க காலத்தில் மக்கள் மனிதநேயத்தோடும், அறநெறியோடும் வாழ்ந்துள்ளனர். மறப்போரிலே மகளிரும் பங்கு கொண்டனர்.

சங்ககாலத்தில் விருந்தோம்பல் பண்பு சிறப்பாக விளங்கியுள்ளது. சங்ககாலத்தில் வாழ்ந்த காவலரும், பாவலராகத் திகழ்ந்து நிலைபேறு உடைய பாடல்களைப் புனைந்துள்ளனர்.

சங்ககால மக்கள் பலவகையான கலைகளில் தேர்ச்சி பெற்றவர்களாகத் திகழ்ந்துள்ளனர். சங்க எட்டுத்தொகை இலக்கியங்களில் புறஇலக்கியங்களாகிய

பதிற்றுப்பத்து, புறநானூறு ஆகிய நூல்களில் அரசர்களின் மாண்புகளை அறியமுடிகிறது.

மன்னர்கள் தலைமையில் நடைபெறும் அரசினை முடியரசு என்கிறார்கள். இதுவே சங்கச் சமுதாயத்தில் நிலவிய ஆட்சி. சீறூர் மன்னன் தான் மக்களுள் ஒருவர் என்ற நிலையில் ஆட்சி புரிந்தான். குறுநில மன்னர்கள் - மக்கள் பிரதிநிதிகளாகவும், வள்ளல்களாகவும் இருந்துள்ளனர். வேந்தர்கள் - அரசர்க்காகத்தான் மக்கள் என்ற நிலையில் ஆண்டனர்.

அரசர்கள் வேளாண்மைக்கு முக்கியத்துவம் அளித்தல், வரி விதிப்பு, ஏற்றுமதி இறக்குமதிக்கு முக்கியத்துவம், புலவர்கள் கற்றோரின் அறிவுரைக் கேட்டல், சேமித்துவைத்த பொருளை வறட்சிக் காலத்தில் மக்களுக்கு அளித்தல் போன்ற உத்திகளைக் கையாண்டுள்ளனர் என்பதை அறிய முடிகின்றது.

அரசு இயங்க பொருள் தேவை, அரசிற்கு வருவாய் பல வழிகளில் கிடைத்ததை அறியமுடிகின்றது. நிலவரி, சொத்துவரி, வணிகவரி, தொழில்வரி, சுங்கவரி, தண்டப்பணம், உப்பள வருமானம் போன்ற பல வழிகளில் அரசு வரியைப் பெற்றதை அறியமுடிகின்றது. மேலும், புரவு, திரை, கொண்டி போன்றவையும் இருந்துள்ளது.

அரசு பெறும் வரி மக்களின் வளத்திற்கேற்ப அமைந்திருந்தது. கொடுக்கும் ஆற்றலுக்கேற்ற வரியினைப் பெற்றான். அந்த வரிகள் முழுவதும் மக்கள் நலன் சார்ந்த பணிகளுக்கே பயன்படுத்தப்பட்டன.

சங்க காலத்தில் குடி மக்களின் நலன்கருதி அரசனே விசாரித்துத் தீர்ப்பு வழங்கினான். அந்நிலையில் அவனுடைய அரசவையே அறங்கூறு அவையமாகத் திகழ்ந்தது.

குடிமக்களுக்குப் பாதுகாப்பளிப்பது அரசின் கடமையாகும். இந்தப் பாதுகாப்பைப் பெற்ற குடிகள் அரசனுக்கு விளைச்சலில் பாகத்தையும், வணிகத்தில் சுங்கத்தையும் வழங்கியதை அறிய முடிகின்றது.

வேந்தர்கள் தன் வாழ்வின் தலையாய கடமையாகத் திறனைக் கொண்டிருந்தனர். எளியவர் முதல் புலவர்கள் வரை வேண்டிய நேரத்தில் மன்னனைச் சந்தித்துப் பரிசில் பெற்றனர்.

சங்க சமூகத்தில் வேந்தன் அறநெறி தவறாமலும், கருணையோடும், வேறுபாடின்றியும், மக்களின் மனதறிந்து ஆட்சி செலுத்தியதால் மக்கள் செல்வச் செழிப்புடன் வாழ்ந்தனர் என்பது புலனாகின்றது.

# ஆய்வாளர் உறுதிமொழி

**கி. தங்கப்பாண்டி**
முனைவர்ப் பட்ட ஆய்வாளர்
தமிழியல்துறை
அண்ணாமலைப் பல்கலைக்கழகம்
அண்ணாமலை நகர் - 608 002.

இடம் : அண்ணாமலைநகர்
நாள் :

**அற இலக்கியப் பதிவுகளில் இல்லறமும் துறவறமும்** என்னும் தலைப்பில் 2017-2020 ஆம் கல்வியாண்டில் அண்ணாமலைப் பல்கலைக்கழகத் தமிழியல்துறையில் முனைவர்ப்பட்ட ஆய்வாளராக இருந்து செய்யப்பட்ட இவ் ஆய்வு எனது சொந்த முயற்சியால் உருவானது என்றும், இதற்கு முன்னர் வேறு எந்தவொரு ஆராய்ச்சிப் பட்டத்திற்காகவும் இவ் ஆய்வேடு அளிக்கப் பெறவில்லை என்றும் உறுதியளிக்கின்றேன்.

**(முனைவர் மூ. பாலசுப்பிரமணியன்)**
**நெறியாளர்**

**(கி. தங்கப்பாண்டி)**
**ஆய்வாளர்**

# நன்றியுரை

**அற இலக்கியப் பதிவுகளில் இல்லறமும் துறவறமும்** என்னும் தலைப்பில் ஆய்வு மேற்கொள்ள அனுமதியளித்த பல்கலைக்கழகத் **துணைவேந்தர்** அவர்கட்கும், **பதிவாளர்** அவர்கட்கும், **தேர்வுக் கட்டுப்பாட்டு அலுவலர்** அவர்களுக்கும், **இயக்குநர்** அவர்களுக்கும் மற்றும் **ஆட்சிமன்றக் குழு உறுப்பினர்** உள்ளிட்ட அனைவருக்கும் எனது நெஞ்சார்ந்த நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

இந்திய மொழிப்புல முதன்மையர் பேராசிரியர் முனைவர் **க. முத்துராமன்** அவர்களுக்கும், ஆக்கமும் ஊக்கமும் நல்கிய பேராசிரியர் முனைவர் **அ. சிவபெருமான்** அவர்களுக்கும், தமிழியல் துறைத்தலைவர் பேராசிரியர் முனைவர் **ந. வெங்கடேசன்** அவர்களுக்கும், ஆய்வுப் பணியில் வழிகாட்டியாக இருந்து ஆலோசனை வழங்கி தலைப்புத் தேர்வில் இருந்து ஆய்வின் அனைத்துப் பகுதிகளிலும் பங்குகொண்டு நெறிப்படுத்திய எனது நெறியாளர் இணைப் பேராசிரியர் முனைவர் **மூ. பாலசுப்பிரமணியன்** அவர்களுக்கு என்றும் நன்றிக் கடப்பாடுடையேன். தமிழியல்துறையின் அனைத்து **பேராசிரியர்களுக்கும்** நன்றியை உரித்தாக்குகின்றேன்.

என்னை இந்த உலகிற்கு அறிமுகம் செய்த **தாய், தந்தைக்கும்** எனது நன்றியினைக் காணிக்கையாக்குகின்றேன்.

ஆய்விற்கு உதவிய பல்கலைக்கழக **நூலகத்தார்க்கும்** மற்றும் முனைவர்ப் பட்ட ஆய்வாளர் **நண்பர்களுக்கும்** நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

ஆய்வேட்டினை உரிய நேரத்தில் தட்டச்சுச் செய்து நேர்த்தியுடன் அழகுற புறக்கட்டமைப்புச் செய்து கொடுத்த சிதம்பரம், அண்ணாமலைநகர் **ஆனந்த் கணினியகத்தார்க்கும்** எனது நன்றியினை உரித்தாக்குகிறேன்.

**(கி. தங்கப்பாண்டி)**
ஆய்வாளர்

# சுருக்கக் குறியீட்டு விளக்கம்

| | | |
|---|---|---|
| அகத். | - | அகத்திணை |
| அகம். | - | அகநானூறு |
| ஆசாரம். | - | ஆசாரக்கோவை |
| இளம். | - | இளம்பூரணார் |
| இன்னா. | - | இன்னா நாற்பது |
| இனி. | - | இனியவை நாற்பது |
| உ.ஆ. | - | உரையாசிரியர் |
| ஐங். | - | ஐங்குறுநூறு |
| கலி. | - | கலித்தொகை |
| குறள். | - | திருக்குறள் |
| குறிஞ்சி.பா. | - | குறிஞ்சிப்பாட்டு |
| குறுந். | - | குறுந்தொகை |
| சிலம்பு. | - | சிலப்பதிகாரம் |
| சிறு. பஞ்ச. | - | சிறுபஞ்சமூலம் |
| திரி. | - | திரிகடுகம் |
| தொல். | - | தொல்காப்பியம் |
| நற். | - | நற்றிணை |
| நாலடி. | - | நாலடியார் |
| நான்மணி. | - | நான்மணிக்கடிகை |
| நூ. | - | நூற்பா |
| ப. | - | பக்கம் |
| பரி. | - | பரிபாடல் |

| | | |
|---|---|---|
| ப.ஆ. | - | பதிப்பாசிரியர் |
| பக். | - | பக்கங்கள் |
| பதி. | - | பதிற்றுப்பத்து |
| பழமொழி. | - | பழமொழி நாறூறு |
| பா. | - | பாடல் |
| புறத். | - | புறத்திணை |
| புறம். | - | புறநானூறு |
| பொருள். | - | பொருளதிகாரம் |
| மணி. | - | மணிமேகலை |
| முதுமொழி. | - | முதுமொழிக்காஞ்சி |
| மேலது. | - | மேலே குறிப்பிட்ட நூல் |

# பொருளடக்கம்

# முன்னுரை

மனிதனின் நாகரிக வளர்ச்சிகளுள் மிகச் சிறந்தது மொழியாகும். மனிதனின் மனக் கருத்தைப் பேச்சு வடிவிலும் எழுத்து வடிவிலும் புலப்படுத்திப் பயன்படும் மொழி இல்லையாயின் நாகரிகம் இல்லை. எனவேதான், மொழியை நாகரிகக் கருவி எனக் கருதுகின்றனர். இம்மொழியின் வடிவே இலக்கியம் எனப்படும். மனித வாழ்வின் சிறப்புகளுள் ஒன்றாகக் கருதப்பெறும் மொழியால் தான் இலக்கியம் அமைகின்றது. எனவேதான் பிற கலைகளைவிட இலக்கியம் பெரிதெனவும் சிறந்தது எனவும் கருதப்படுகின்றது.

உலக சமுதாயத்தை வடிவமைப்பதிலும், இயக்குவதிலும், மாற்றியமைப்பதிலும், புதுமைகளைப் புகுத்துவதிலும் இலக்கியம் முக்கிய இடத்தைப் பெறுகின்றது. சமுதாயத்தினைச் சமைப்பது, வளர்ப்பதும் அதன் விருப்பு, வெறுப்பு, நம்பிக்கை, சடங்கு, பண்பாடு, பழக்கவழக்கம் போன்றவற்றைப் புலப்படுத்துவதும் போற்றிப் பேணிக் காப்பதும் இலக்கியமாகும்.

சங்க கால மக்களின் பண்பாடு, பழக்கவழக்கங்கள், நம்பிக்கைகள், கொடைத்தன்மை, புலவர்களைப் போற்றும் திறம், பழந்தமிழர்கள் கடைபிடித்த மரபுகள், போரில் அறத்தைக் கடைப்பிடித்தல் போன்றப் பல்வேறு கூறுகளை சங்க புறப்பாடல்களின் மூலம் காணப்படுகிறது. இத்தகைய சூழல் குறித்து இவ் ஆய்வேடு ஆராய்கிறது.

**ஆய்வு நோக்கம்**

சங்க காலத்து அரசர்கள் பற்றி இதுகாறும் வெளிவந்த ஆய்வுகளில் பல செய்திகள் காணப்பட்டாலும், அரசர்கள், மக்கள், புலவர்கள் போன்றோர்களின்

மாண்புகள் பற்றிய செய்திகளைக் கண்டுணரும் முயற்சிக்குத் துணைபுரியும் வகையில் ஆய்வு நோக்கம் அமைந்துள்ளது.

**ஆய்வுத் தலைப்பு**

**"சங்க இலக்கியப் புறநூல்களில் அரசர்களின் ஆளுமை"** என்பது இவ்ஆய்வுத் தலைப்பாகும்.

**ஆய்வுக் கருதுகோள்**

தன்னலத்திற்கு மிகுதியும் இடம் தராத, பொது நலத்தினை அதிகம் பேணுவதில் அரசர்கள் இணைந்து செயல்பட்ட திறத்தினைத் தெளிவாகப் புலப்படுத்தும் நோக்கில் ஆய்வுக் கருதுகோள் அமைக்கப்பெற்றுள்ளது.

**ஆய்வு முன்னோடிகள்**

சங்க இலக்கியத்தில் பல்வேறுபட்ட ஆய்வுகள் நிகழ்ந்துள்ளன. இவ்வாய்வுகளில் அரசர்களின் மாண்புகள் தொடர்பான சோ.ந. கந்தசாமியின் "புறத்திணை வாழ்வியல்", கு.வெ. பாலசுப்பிரமணியனின் "சங்க இலக்கியத்தில் புறப் பொருளும்" என்ற நூலும் இவ்வாய்வின் முன்னோடிகளாகும்.

**ஆய்வு அணுகுமுறை**

ஆய்வின் வளர்ச்சிக்கும், சிறப்பிற்கும் உகந்ததாய் அமைவது அதில் பின்பற்றப்படும் அணுகுமுறைகளாகும். இவ்வாய்வில் விளக்கமுறை, பகுப்புமுறை ஆகிய அணுகுமுறைகள் பின்பற்றப்பட்டுள்ளன.

**ஆய்வின் எல்லை**

பத்துப்பாட்டு, எட்டுத்தொகை என்னும் பதினெட்டு நூல்களில் இடம்பெற்ற புறச்செய்திகள் நிரம்பிய பாட்டுக்கள் மட்டும் இங்கு ஆய்வுக்கு உட்படுத்தப்படுகின்றன.

சிறுபான்மை, பிற பாடல்களில் காணப்படும் புறச்செய்திகளும் பொருத்தம் நோக்கி எடுத்துக்கொள்ளப்படுகின்றன. இங்ஙனம் ஆய்வின் எல்லை வகுத்துக் கொள்ளப்படுகிறது.

**ஆய்வின் முதன்மை ஆதாரங்கள்**

சங்க இலக்கிய நூல்களைப் பத்துப்பாட்டு, எட்டுத்தொகை நூல்களில் காணப்படும் அரசர்கள் ஆட்சிமுறைத் தொடர்பான செய்திகளைக் கொண்ட பாடல்கள் அனைத்தும் இவ்வாய்வின் முதன்மை ஆதாரங்களாகும்.

**ஆய்வின் துணைமை ஆதாரங்கள்**

சங்க இலக்கியத்தில் அரசர்களின் ஆட்சி, கொடைப்பண்புகள் தொடர்பாக வெளிவந்த ஆய்வுக் கட்டுரைகள், ஆய்வுக் கோவைகள், இதழ்கள், ஆய்வுத் தொடர்பான பிற நூல்கள் இவ் ஆய்வின் துணைமை ஆதாரங்களாக எடுத்துக் கொள்ளப்பட்டுள்ளன.

**ஆய்வேட்டின் அமைப்பு**

இவ்வாய்வேடு முன்னுரை, முடிவுரை நீங்களாக நான்கு இயல்களாக பகுக்கப்பட்டுள்ளது. அவை,

**இயல்-1:** புறவாழ்க்கை நெறிகள்

**இயல்-2:** புற நூல்களில் அரசர்களின் மறவாழ்க்கை

**இயல்-3:** புற இலக்கியங்களில் அரசர்களின் மாண்புகள்

**இயல்-4:** புற இலக்கியங்களில் அரசாட்சியும் பொருளாதாரமும்

## இயல் விளக்கங்கள்

### இயல்-1: புறவாழ்க்கை நெறிகள்

புறவாழ்க்கை நெறிகள் எனும் முதல் இயலில் புற வாழ்க்கை என்பது போர்க்களத்தில் நடத்துகின்ற வீரச் செயல்கள் மட்டுமன்று. உள்ளார்ந்து நோக்கும் போது பிறரை வாழ்த்தும் முறை, விருந்தோம்பல், கடமையுணர்வு, செய்நன்றி அறிதல், உரிமைப் பாராட்டதல் போன்றப் பல்வேறு வாழ்வியல் உண்மைகளை எடுத்தியம்புவதாக இவ்வியலில் ஆராயப்பட்டுள்ளது.

### இயல்-2: புற நூல்களில் அரசர்களின் மறவாழ்க்கை

புற நூல்களில் அரசர்களின் மறவாழ்க்கை எனும் இரண்டாம் இயலில் வீரம் என்பது கல்வி, அஞ்சாமை, ஈகை, மானம் ஆகியவை பற்றித்தோன்றுமேனும் அஞ்சா நெஞ்சுடன் போர்க் களத்தில் காட்டும் ஆண்மையினையே அது சிறப்பாக உணர்த்துகின்றது. தமிழகம் அத்தகைய வீரத்தின் விளைநிலமாக விளங்கியது என்பதை மறவாழ்க்கை மூலம் அறியமுடிகிறது.

### இயல்-3: புற இலக்கியங்களில் அரசர்களின் மாண்புகள்

புற இலக்கியங்களில் அரசர்களின் மாண்புகள் எனும் மூன்றாம் இயலில் உலகுடன் ஒன்றி வாழ்தல், அரசியல் நிலை, தனிமனித ஒழுக்கம், இறத்தல் இழிவு, இன ஒற்றுமை, பிறர் நலம் பேணல், செய்நன்றி அறிதல், மக்கள் நிலையறிந்து வரி விதித்தல் போன்ற நிலைகளன்களின் அடிப்படையில் இவ்வியல் ஆராய்கின்றது.

### இயல்-4: புற இலக்கியங்களில் அரசாட்சியும் பொருளாதாரமும்

புற இலக்கியங்களில் அரசாட்சியும் பொருளாதாரமும் எனும் நான்காம் இயலில் தமிழ்க்குடியின் அரசியல் அரசாட்சி பழமை வாய்ந்தது. நாகரீகச் சிறப்பு வாய்ந்த பழந்தமிழரிடையே தொல்பழங்காலம் முதலாக அரசு என்னும் அமைப்பு

இருந்து வந்துள்ளது. ஆறுகள் பாய்ந்து வளம் செழிந்த மருதப் பகுதிகளில் ஏற்பட்ட உழவுத் தொழில் வளர்ச்சியும் வணிகப் பெருக்கமும் பேரரசு உருவாகத் துணை புரிந்தன. மேலும் பொருளாதாரத்தில் மேம்பாடு உள்ளவர்களாகவும் திகழ்ந்தார்கள் என்பதை ஆராயும் வண்ணமாக இவ்வியல் திகழ்கின்றது.

**முடிவுரை**

ஆய்வேட்டின் ஒவ்வொரு இயலிலும் இடம்பெற்றுள்ள ஆய்வு முடிவுகள் தொகுத்துத் தரப்பட்டுள்ளன. ஒவ்வொரு இயலின் முடிவிலும் கண்ட ஆய்வு முடிவுகளில் இன்றியமையாதனவற்றை எடுத்து முடிவுரைப் பகுதியில் கொடுக்கப்பட்டுள்ளன.

**துணைநூற்பட்டியல்**

ஆய்வுக்குப் பயன்படுத்தப்பட்ட முதன்மைச் சான்றுகள், துணைமைச் சான்றுகள், அகராதிகள், கலைக்களஞ்சியம் போன்றவை அகர வரிசைப்படுத்தப்பட்டு துணைநூற்பட்டியலாகத் தரப்பட்டுள்ளன.

**பின்னிணைப்புகள்**

இதழ்களில் வெளியான ஆய்வாளரின் ஆய்வுக்கட்டுரைகள் இணைக்கப்பட்டுள்ளன.

# இயல் - 1

# புறவாழ்க்கை நெறிகள்

## முன்னுரை

மனித வாழ்க்கையை அகம் என்றும் புறம் என்றும் இருகூறுப்படுத்தி, அவ்விரு கூறுகட்குரிய திணைகள் வகுத்து இருவேறு உயரிய நாகரிக வாழ்வியலை வாழ்ந்த பெருமை பண்டைத் தமிழர்க்கே உரியது எனலாம். அக வாழ்க்கையோடு தொடர்புடையது புற வாழ்க்கை. ஏனெனில், இல்லறம் சிறப்புடன் இருந்தால்தான் சமுதாயம் சார்ந்த நாடு சிறப்பானதாக அமையும் என்பது பண்டையோர்க் கருத்து. இனி, சமூகத்திற்கு பெருமை சேர்க்கும் புற வாழ்வியல் செய்திகளை ஆராய்வதே இவ் இயலின் நோக்கமாகும்.

## புற இலக்கியம்

புற வாழ்க்கை என்பது போர்க்களத்தில் நடத்துகின்ற வீரச்செயல்கள் மட்டுமன்று. தன்னுடைய வாழ்க்கையை நடத்துவதற்காக ஒருவர் மேற்கொள்ளக்கூடிய எல்லா விதமான போராட்டங்களும், முயற்சிகளும் அதன் பயனும் புறவாழ்க்கை எனக் கருதப்படுகின்றன.

"சமுதாயத்தில் நிகழும் ஒவ்வொரு நிகழ்வுகளும் மக்களுக்கு பாடமாக அமைகின்றது. தாம் வாழ்கின்ற சமுதாயத்திலிருந்து சந்திக்கும் சிக்கல்களிலிருந்து எவ்விதம் கடந்து முன்னேறுவது என்ற தேடுதலில் விழிப்புணர்வு பெறுகின்றனர். இந்த பட்டறிவிலிருந்து மக்கள் பெற்றுக் கொள்கின்ற படிப்பினைகள் அனைத்தும் அவர்களுடைய புற வாழ்க்கையை மேம்படுத்திக் கொள்வதற்கும், அக வாழ்க்கையின் இன்பங்களை உறுதிப்படுத்திக்

கொள்ளவும் உதவுகின்றன என்பதில் ஐயமில்லை”[1] என முனைவர் கு. இராசரெத்தினம் அவர்கள் தன் ஆய்வில் எடுத்துரைக்கிறார்.

அவ்விதம் தாம் வாழ்ந்த வாழ்வின் அடிப்படையில் பெற்ற அனுபவங்களையும் உலகியலில் தான் கேட்டுணர்ந்த வாழ்வியல் உண்மைகளையும் சற்றும் மிகைப்படுத்தாமல் எதிர்க்காலச் சமுதாயம் உணர்ந்து, தம் வாழ்வியலை அமைத்துக் கொள்ள ஆன்றோர் பெரும் புலவர்கள் தங்கள் பாடல்களில் பதிவுச் செய்துள்ளனர். இதன் வாயிலாக, புற வாழ்வியல் உண்மைகளைக் கண்டறிய முடிகின்றது.

தமிழரின் வரலாறுகளையும், பழம்பெருமைகளையும் மன்னன் முதல் சாதாரண மானிடன் வரை அவர்களுடைய பழக்கவழக்கங்களையும் அறிந்துக் கொள்வதற்கு சிறந்த கருவியாக புறம் சார்ந்து கருத்தமைந்த இலக்கியங்கள் முதன்மையாக விளங்குகின்றன எனலாம்.

புறப்பாடல் என்றால் வெறும் போர், வீரம், கொடை முதலியவற்றை மட்டும் கூறும் என்று கருதிவிட முடியாது. உள்ளார்ந்து நோக்கும் போது பிறரை வாழ்த்தும் முறை, விருந்தோம்பல், கடமையுணர்வு, செய்ந்நன்றி அறிதல், உரிமை பாராட்டல் போன்ற பல வாழ்வியல் உண்மைகளை பொதித்து வைத்திருக்கின்றது.

எட்டுத்தொகையில் இரு நூல்கள் புறம் சார்ந்தவைகளாக அமைகின்றன. அவை,

1. புறநானூறு
2. பதிற்றுப்பத்து

‘பரிபாடல்’ என்பது அகம், புறம் சார்ந்த நூலாக அமைகின்றது.

மூவேந்தர்கள் ஆண்ட நாடு என்று போற்றிய போதிலும், சேர மன்னர்களின் வீரம், கொடை, வாழ்க்கை நிலைகளை போர்ச் சிறப்புகளை பற்றி இயம்புவது பதிற்றுப்பத்து பாடல்களாகும். தமிழகத்தின் மூவேந்தர்கள், குறுநில மன்னர்கள் அவர்கள் நிகழ்த்திய தலைமைப் போர் நிகழ்வுகள், மக்கள் பழக்கவழக்கங்கள் போன்றவற்றை எடுத்துரைப்பதால் முதன்மைச் சான்ற புறப்பொருள் இலக்கியங்கள் விளங்குகின்றது.

புறப்பொருளை உணர்த்தக் கூடிய இலக்கிய பாடலின் வழியாக நாட்டை ஆளும் தலைவன் மக்களுக்கு உயிர் போன்றவன் என்பதை உணர்த்துகின்றது. மக்களினம் முழுவதும் உறவினராக எண்ணி வாழ வேண்டும். அரசனின் கடமை, நாட்டைக் காக்கும் முறைமை, ஆடை வகைகள், தொழில்கள், புலவர்களின் மனத்திண்மை, இசைக்கலைகள் ஆக்கம் பெற்ற நிலை இவை போன்ற பல கருத்துகளை புற நூல்களில் காணமுடிகின்றது. அரசாங்க ஒழுக்கம், ஒற்றுமை, அருள், துறவு, வாய்மை, கற்பு, நட்பு எண்ணிறந்த பண்புகள்,

"நயனும் வாய்மையும் நன்னர் நடுவும்
இவனின் தோன்றிய இவை எனஇரங்க"[2]

அன்பு, நடுநிலைமை போன்ற பண்புகளும் உலகில் வாழும் ஒவ்வொரு மனிதனுக்கும் இருக்க வேண்டிய பண்புகளாக சுட்டிக்காட்டி விளங்க வைக்கின்றது புற இலக்கியம்.

**அரசாட்சி முறை**

'அரசு' என்பதற்கு "ஒரு குறிப்பிட்ட மக்கள் கூட்டம் அடங்கிய ஒரு வகை சமுதாய அமைப்பு"[3] என்று விளக்கம் தருகிறது, வாழ்வியற் களஞ்சியம். மனிதன் இயற்கையில் ஓர் அரசியல் விலங்கு. அவன் இயற்கையாகவே ஓர் அரச அமைப்பைப் பெற்றிருப்பதே அவனுக்குரிய பண்பாகும் என்பா அரிஸ்டாடில்.

'தனிப்பட்டவர்களின் வலியாலும் திறத்தாலும் அரசுகள் உருவாகின்றன' எனக் கூறுவார் மாக்கிய வெல்லி.

குடும்பம், ஊர், நாடு என்ற படிமுறை வளர்ச்சியில் அரசு என்ற அமைப்பே சமுதாய மதிப்பையும், நோக்கத்தையும் காட்டும் உயரிய நிறுவனமாகும். காரல் மார்க்ஸ், 'அரசு என்பது ஒரு வர்க்க நிறுவனம் என்றும், பாட்டாளிகள் அதனைத் தமக்குரியதாக மாற்றியமைத்துப்பின் வர்க்கமற்ற சமுதாயத்தை உருவாக்க வேண்டும் என்றும் கூறுவார்.

"மக்கள் வாழ்வைத் தூய்மைப்படுத்தி அவர்கள் அறநிலை பெறுதற்குத் துணைபுரியவே அரசியல் முதன்முதல் ஏற்பட்டது"[4] என்று திரு.வி.க. அவர்கள் குறிப்பிடுகிறார்.

எழுதப்பட்ட அரசியற் சட்டங்களோ மேற்கொள்ள வேண்டிய இயற்றப்பட்ட சட்டங்களோ இல்லாத நிலையில் அறத்தின் வலிவும், கனிவும் புரிந்து சங்ககால மன்னர்கள் ஆட்சிபுரிந்து தமிழகத்தையே அறம் விளைநிலமாகப் பண்படுத்தியிருப்பது பெருமைக்குரியதாக அமைகின்றது.

1. அரசர் ஒழுக்கத்தை எடுத்துக்காட்டுதல்
2. புலவர்கள் அறிவுரை வழங்குதல்
3. அரசர் தாமே அறநெறி கூறுதல்

என்பதன் வழிகளில் அரசாட்சி முறைகளை இலக்கியங்கள் புலப்படுத்துகின்றன.

**அரசர் ஒழுக வேண்டிய குணங்கள்**

சங்ககாலத்தில் அரசன் எனும் ஒருவரிடமே அனைத்து அதிகாரங்களும் குவிந்திருக்கின்ற முடியாட்சி என்றாலும், குடியாட்சியின் சிறப்புக் கூறுகள்

குவிந்திருக்கின்றன. நிலவுலகை ஆளும் மன்னன் மக்களை உயிராகக் கொண்டு ஆளுவதால் வேள்வியும் வேண்டுமோ என்பதை,

> "வைய மன்னுயி ராகவும் மன்னுயிர்
> உய்யத் தாங்கு முடலன்ன மன்னனுக்கு
> ஐய மின்றி யறங்கட வாதருள்
> மெய்யி னின்றபின் வேள்வியும் வேண்டுமோ"[5]

என்ற பாடல் வழி நில உலகை உயிராக நினைத்து உடல் போன்று விளங்கும் மன்னன் செய்த அறத்தினால் வேள்வியும் வேண்டுமோ என மன்னன் தன் கடமையை செயல்படுத்துவதை கம்பராமாயணம் மொழிவது போல, குடிமக்களின் தந்தையாக கருதப்பட்டதோடு, உண்ணும் உணவு, பருகும் நீர் இவற்றின் முக்கியத்துவத்தோடு அமைந்துவிடாது. எனினும் வேந்தனின் இயக்கமே முதன்மையானது அரசன் அறிந்து செயல்படக் கூடிய கடமையும் அதுவே என்பதை,

> "நெல்லு முயிரன்றே: நீரு முயிரன்றே
> மன்னன் உயிர்த்தே மலர் தலை உலகம்
> அதனால், யான் உயிர் என்பது அறிகை
> வேல் மிகு தானை வேந்தற்குக் கடனே"[6]

என பழந்தமிழர் கருதியதை எடுத்துக்காட்டுகின்றது.

தொல்காப்பியம் அரசனின் கடமைகள் என ஐந்திணைக் குறிப்பிடுகின்றது.

> "ஐவகை மரபின் அரசர் பக்கமும்"[7]

ஓதல், வேட்டல், ஈதல், படை வழங்குதல், குடிஓம்புதல் என ஐந்து கடமைகளுக்கான பொருளை உரைக்கிறார் உரையாசிரியர் இளம்பூரணர்.

கடமை உணர்வுடன் ஆண்டத் தன்மையால் "அறநெறி முதற்றே அரசின் கொற்றம்"[8] என்ற அறநெறியைத் தலைக் கொண்டு வழுவாது ஆட்சி புரிந்துள்ள மன்னர்களைப் பற்றிக் காணமுடிகின்றது.

நம்மவர் எனக்கொண்டு அவரது தீய செயல்களைப் பொறுத்தலும் அறமன்று. அயலாரெனக் கருதி அவர் குணங்களைக் கொள்ளாது மறத்தலும் அறமன்று. நடுநிலை நின்று அறத்தைக் காத்தலே சிறப்புடைய செயலாகும். ஞாயிற்றைப் போன்று வெம்மையான ஆற்றலையுடைய ஆண்மையும், திங்களைப் போன்று குளிர்ந்த பெரிதான மென்மைப் பண்பும், வானத்து மழையைப் போன்று வழங்கும் வள்ளன்மையும் என்ற இந்த மூன்று பண்புகளும் உடையவரே சிறந்தவர் என்பதை,

"மாரி பொய்ப்பினும், வாரிகுன்றினும்,
இயற்கை அல்லன செயற்கையில் தோன்றினும்
காவலர்ப் பழிக்கும், இக்கண் அகல் ஞாலம்"[9]

என்னும் பாடலில் மன்னன் மக்களுக்கு தார்மீகப் பொறுப்பேற்றுக் கொள்ளும் நிலைகள் பெருகி நிற்பதை உய்த்துணர முடிகின்றது. தனக்கும் பழி நேர்ந்திடாது, தன் மக்களுக்கும் தீங்கு வந்திடாது என்றுக் காப்பதை,

"குடி பழி தூற்றும் கோலேன் ஆகுக"[10]

என்ற வரிகளில் பழி நிலை வராமல் குடிமக்களைத் "தன்னுயிர் போலத் தழ்இ?"[11] என காக்கவே மன்னர்கள் அரசாட்சி செய்ய விழைந்தனர் என்பதை உணர்த்துகின்றது.

மேலும், வேந்தர்களிடத்து, "ஆறு முட்டுறாது அறம் புரிந்தொழுகும்"[12] என அறநிலை கடவாத பண்பு மிகுந்து காணப்படுவதை அறியமுடிகின்றது.

ஆளப்படும் மக்களின் உலகத் தலைவன் மன்னனே என்பதால் தனது பண்பட்ட நடவடிக்கைகளின் மூலம் தன் நாட்டு மக்களுக்கு,

"நன்னடை நல்கல் வேந்தருக்குக் கடனே"[13]

என்ற அடிகளில் நேரிய நெறியின் கடமையும் மன்னனுக்கு வகுத்தளிக்கப்பட்டுள்ள கடமை உணர்வை வெளிப்படுத்துகின்றது.

ஒரு செயலை செய்தபின் ஏதேனும் பிழை உண்டானால் அதற்கு இரங்குவோம். ஆனால் அவ்வாறு தவறு இழைக்காது திட்பமுடைய செய்கையை உடையவன் மன்னன் என்பதை,

"செய்து இரங்கா வினை, சேண் விளங்கும் புகழ்"[14]

என முன் ஒரு செயல் செய்து பின் அது செய்தமைக்கு வருந்தாதபடி நிலை அறிந்து செயல்புரிதல் வேண்டும். அவ்வாறு அல்லாது செய்து விட்டு அந்நிலைக்கு இரங்குவது செய்யற்க என,

"எற்றென் றிரங்குவ செய்யற்க செய்வானேல்
மற்றன்ன செய்யாமை நன்று"[15]

என்னும் வரிகளில் திட்டமிட்டு செயல்புரிய வேண்டிய நிலையினைக் குறளின் கருத்தினோடு எடுத்துரைக்கின்றது. கண்ணை இமைக்காப்பது போல, மன்னன் தன் குடிமக்களின் உயர்வைக் கருத்தில் கொண்டு நடுநிலைமையுடன் நீதி காத்து ஆளவேண்டும். நாட்டை ஆளும் அரசன் தாம் செய்யும் செயலை உரிய நேரத்தில் செய்ய வேண்டிய செயல்திறனை எடுத்துக்காட்டுகிறது.

**பாரம்பரிய மன்னராட்சி**

நடுவுநிலைமைப் பொருந்தித் தடையின்றி நிலவுலகம் முழுவதையும் ஆண்டோருடைய மரபைக் காத்த மன்னன் என்பதை,

"கொடிது கடிந்து, கோல் திருத்தி,
படுவது உண்டு, பகல் ஆற்றி
இனிது உருண்ட சுடர் நேமி
முழுது ஆண்டோர் வழி காவல்"[16]

என்று புறப்பாடல் முன்னோர்களின் வழி அரசாண்ட முறைமையை எடுத்துரைக்கின்றது. தந்தைக்கு பின் தனயன் என்ற வழிவழி வந்த முடியாட்சி நிலையினை,

"மூத்தோர் மூத்தோர்க் கூற்றம் உய்த்தென,
பால் தர வந்த பழவிறல் தாயம்
எய்தினம் ஆயின், எய்தினம் சிறப்பு"[17]

என்று சோழன் நலங்கிள்ளி என்னும் மன்னனால் அரசுரிமை தந்தை வழியில் மகனாகப் பிறந்தோன் அடைவது பழந்தமிழர் மரபாக உள்ளது. ஆயினும் திறமையுடையவன் அடைதலே சிறப்புத் தக்கது என குறிக்கப்படுகிறது. முடியாட்சி ஆயினும், மன்னர் குடித் தழுவியே கோலோச்சினர். மன்னனும் குடிப்பிறப்பும் ஒழுக்கமும் அன்பும் அருளும் ஆற்றலும் ஒருங்கே வாய்க்கப் பெற்றவனாய் தம் மூத்தோர் சென்ற செங்கோல் நெறியினின்றும் பிறழாது அரசாட்சி முறையை,

"அறம் துஞ்சும் செங்கோல்"[18]

"மெலிவில் செங்கோல்"[19]

என செங்கோல் முறை குறிக்கப்படுகின்றது. இதிலிருந்து நீதியாளனான மன்னன் நடப்பு உண்மைகளை எல்லாம் உணர்ந்து பழி ஏற்படாதவாறு விழிப்போடு நாடு

காவலை நடத்தி செல்லுவதால் நீதி நிலைப் பெறும் என்பதை அறிவுறுத்துகின்றதை,

"அறம்புரிந் தன்ன செங்கோல் நாட்டத்து
முறை வேண்டு பொழுதின் பதன் எளியோர் ஈண்டு
உறை வேண்டு பொழுதில் பெயல் பெற்றோரே"[20]

என புறப்பாடல் வழி அறவோனே வந்திருந்து நன்கு ஆய்ந்து முடிவு கூறினால் செங்கோல் ஆட்சி நாட்டிடத்து நிலவுதல் வேண்டும். மழைத்துளிகளை வேண்டிய நேரத்தில் பெற்ற உழவர்களை போல மக்கள் மகிழ்வர். எனவே, படைமுகத்து வெற்றியும், உழவுத் தொழிலின் பெருக்கத்தின் பயனையும் நன்முறையில் பெறக்கூடிய வகையில் அரசநியதி அமைய வேண்டும் என்பதை முன்னோர் ஆண்ட அரசுநெறி புலப்படுத்துகிறது.

ஆட்சிக்குத் தடையாக நிற்கும் செயல்களை அகற்றியும், தன் குடும்பம் மக்களை காப்பாற்றும் எண்ணத்தினையும் கொண்ட முன்னோர்களின் வழித்தோன்றலான இயமவரம்பன் வெற்றிச் சிறப்பினைக் குறிப்பிடும்போது,

"சினனே, காமம் கழி கண்ணோட்டம்,
அச்சம் பொய்ச்சொல் அன்பு மிக உடைமை
தெறல் கடுமையொடு பிறவும் இவ்வுலகத்து
அறம்தெரி திகிரிக்கு வழியடை ஆகும்
தீது சேண் இகந்து, நன்று மிகப்புரிந்து
கடலும் கானமும் பல பயம் உதவ
பிறர் பிறர் நலியாது, வேற்றுப் பொருள் வெஃகாது,
கை இல் அறிவினர் செவ்விதின் நடந்து தம்
அமர்துணைப் பிரியாது, பாத்து உண்டு, மாக்கள்

மூத்த யாக்கையொடு பிணி இன்று கழிய
ஊழி உய்த்த உரவோர் பம்பல்”[21]

என்று பதிற்றுப்பத்து பாடல் மூலம் சினம், காமம், அளவற்ற கண்ணோட்டம், அச்சம், பொய்கூறல், பொருள் மீது பற்றுவைத்தல், அளவுக்கு மிஞ்சிய தண்டனை அளித்தல் போன்றவை ஆட்சி செலுத்தும் அரசனுக்கு தடைக்கற்களாக அமையும். எனவே தமைகளை அகற்றி, நன்மை செய்து கடல்சார்ந்த காடு, நிலங்களின் பயனைப் பெறும் வண்ணம் செயல்புரிந்தனர். தங்குடி மக்கள், மனைவி பாதுகாத்து பகுத்துண்டு வாழ்ந்த முன்னோர்களின் செயல்பற்றி குறிப்பிடுவதின் மூலம் முன்னோர் வழிமுறைபப்படி ஆண்ட அரசினையும், வழி வழி வந்த அரசாட்சி முறையின் உரிமையினையும் காணமுடிகின்றது.

**புலவர்கள் உணர்த்தும் மனிதநேயம்**

புலவர் மன்னர்களுக்கிடையே உள்ள நட்பு அளப்பரியது. அதன் காரணமாகவே மன்னர்களை வழிநடத்தும் வலிமை பெற்றிருந்தனர். மூவேந்தர்களால் ஆளப்பெற்ற இந்நாட்டில் தங்களது ஆண்மையை நிலைநாட்டவும், எல்லையை விரிவுச் செய்யவும், புகழைப் பரப்பவும் வீரத்தை விதைக்கவும் தங்களுக்குள் பகைமைக் கொண்டு போர்ப் புரிந்தனர். இப்போர்களில் பகைவர்களை அழிப்பதைக் காட்டிலும் மக்களைக் காக்கும் மனமுடையோராய் திகழ்ந்துள்ளனர்.

ஆண்மை என்பது குணத்தால் மேன்மை பெற்ற தகுதியைக் கொண்டு இயங்குகின்றது. தன்னைச் சார்ந்தவர்களுக்குத் துன்பம் நேருமிடத்து அவருக்கு உதவி செய்வது ஆண்மையின் குணம் என்பதை,

"...................................... சேர்ந்தோர்க்கு

உறும் இடத்து உவக்கும் உதவி ஆண்மையும்"[22]

என்ற வரிகளில் அறியமுடிகின்றது. தளர்ச்சி இல்லாத உள்ளமே ஆண்மைக்கு அழகாகும் அது எவ்வகையிலும் பின்னடையாமல் முன்னே செல்லும் அறிவினது. அதனால் தான்,

"கேள்கேடு ஊன்றவும் கிளைஞர் ஆரவும்

கேள்அல் கேளிர் கெழீஇயினர் ஒழுகவும்

ஆள்வினைக்கு எதிரிய ஊக்கமொடு புகல் சிறந்து"[23]

என்ற இலக்கியத்தின் இன்றியமையாத நோக்கம் மனிதநேயம் எனலாம். மனிதர்கள் ஒருவரோடு ஒருவர் ஒத்துழைப்போடு வாழ்ந்தும், மகிழ்ச்சி, துன்பங்களில் பங்கிட்டும் காணமுடிகின்றது. தனிமனிதர்களின் பகை உணர்ச்சிகளை அவர்களது வாழ்விலிருந்து அகற்றியும், மனித உரிமைகளை நிலைநாட்டும் வகையில் புலவர்கள் சமூக நடப்புகளை உற்றுக் கவனித்து மன்னனுக்கு மட்டுமல்லாது, சராசரி மனிதனுக்கும் நற்பண்பினை நல்கிடும் வகையில் பாடல்கள் அமைந்துள்ளதை அறிய முடிகின்றது.

சமூக விரிவாக்கத்தின் காரணமாகவும், மண்ணாசை, பொன்னாசை, புகழை காரணமாகவும் போர்கள் நிகழ்த்தப்பட்டுள்ளன. ஆற்றல் நிறைந்த மன்னர்களுக்கு ஆக்கம் சேர்க்கும் வகையில் அறிவுரைகளை வழங்கிய, கருங்குழலாதனார், கபிலர், ஔவையார், காவிரிப்பூம்பட்டினத்து காரிக் கண்ணனார், கோவூர்கிழார், ஆலத்தூர் கிழார், உறையூர் ஏணிசேரி முடமோசியார் போன்ற புலவர்கள் பாடல்களின் வழி போரினால் மக்கள் பெற்ற துன்பம் அறிந்து போர்நிறுத்த முயற்சியில் ஈடுப்பட்டதை அறியமுடிகின்றது. போரில் தோற்ற நிலையில் உள்ள நாடுகளின் நிலைக் குறித்து கூறியதை,

"ஈன்றோள் நீத்த குழவிபோல"[24]

மேலும்,

"மணமுழா மறப்ப, பண் யாழ் மறப்ப,
இருங்கண் குழவி கவிழ்ந்து இழுது மறப்ப"[25]

என்ற நிலையில் போரிட்டு தோற்றதின் காரணமாக, மன்னன் உயிர் நீத்தான் என்றால் அவனது நாடும் செயலற்று வருந்தும் நிலையை, தாயின்றி அழும் குழவி போன்றது என்று நாட்டின் நிலைமையை நுட்பமான முறையில் எடுத்தியம்புவதைக் காணமுடிகின்றது.

ஒரு மன்னனானவன் வீரம் மட்டுமன்று "அறிவும் ஈரமும் பெருங் கண்ணோட்டமும்"[26] கொண்டவனாக அமைதல் வேண்டும் என்கின்றனர்.

ஒரு குழந்தையைப் பேணி வளர்ப்பது போல, ஓர் அரசன் தன் நாட்டு மக்களைப் பேணிக்காத்து வருதல் வேண்டும். நீதிக்கு இசைவான ஆட்சியும் இதுதான் என்று வலியுறுத்துகின்றனர்.

அன்பு காட்ட வேண்டிய போது அன்பு காட்டியும், அடித்து திருத்த வேண்டிய போது அடித்து திருத்தியும் குழந்தையின் நலத்தைப் பேணுவது தாயின் இயல்பாகும். அத்தன்மையினைப் போல அரசனும் தன் நாட்டு மக்களிடம் அன்பு காட்ட வேண்டிய நேரத்திலே அன்பு காட்டியும், அவர்களுள் பிழை செய்தாரை வெறுக்க வேண்டிய போது வெறுத்தும் வருதல் வேண்டும் என்பதை,

"அருளும் அன்பும் நீக்கி, நீங்கா
நிரயம் கொள்பவரொடு ஒன்றாது, காவல்
குழவிக் கொள்பவரின் ஓம்புமதி"[27]

என்று புறப்பாடலில் யாவராலும் விரும்பத்தக்கதும், அருமை உடையதுமான மனிதநேயத்தினை வலியுறுத்துகின்றனர்.

தன்கண் எதிரே நண்பர் போல தோன்றி அன்பில்லாத உட்பகைக் கொண்ட பகைவரிடம் கனவில் கூட பொய்கூறுதலை அறியாத உயர்ப்பண்பு உடைய சேரர்,

"புரைவது நினைப்பின் புரைவதோ இன்றே
பெரிய தப்புநா ராயினும், பகைவர்
பணிந்து திறை பகரக் கொள்ளுநை ஆதலின்"[28]

என்ற பாடலால் பகைவர்க்கு அருளும் மனிதநேய உணர்வினை இமயவரம்பன் நெடுஞ்சேரலாதன் கொண்டிருந்ததை,

"வையா மாலையர் வசையுநர்க் கறுத்த
பகைவர் தேஎத்து ஆயினும்
சினவாய் ஆகுதல் இறும்பூதால் பெரிதே"[29]

என்ற இடத்தில் களங்காய் கண்ணி நார்முடிச் சேரல் பகைவர் (ஏசிய)வசை பொழிந்தபோதும் சினங்கொள்ளாத மனிதநேய உணர்வை அறியமுடிகின்றது. அக்கால அரசர்கள் அறம்பாடியப் புலவர்களைத் தங்களினும் மேலானவர்களாகக் கருதியும், அவர்கள் எண்ணத்திற்கு ஏற்றவாறு வழிநடந்தும் உள்ளதைக் கண்டுணர முடிகிறது.

**ஆட்சி மாண்பு**

ஆட்சிக்கு இருவகை கட்டுப்பாடுகள் உள்ளன. ஒன்று ஆட்சிக்கு ஆட்சி அடங்கியோரை அருளோடும் அன்போடும் பேணிகாத்து அருளுகின்ற கருணை. மற்றொன்று உட்பகை, புறப்பகை ஆகியன கடிதல். இவ்வகைகளில் அரசின்

கடமை தளர்வது கூடாது. இந்த இரண்டு நீதிகளையும் உணர்ந்து பேணி வாழ்ந்தவர்கள் தமிழரசர்கள் என்பதை,

"நாள், கோள், திங்கள், ஞாயிறு, கனை அழல்
ஐந்து ஒருங்கு புணர்ந்த விளக்கத்து அனையாய்"[30]

என்னும் பாடலில் பகைவர் பிழை செய்தால் அப்பிழையைப் பொறுத்தலில் நிலத்தைப் போன்றும், இரக்கம் செய்வதில் நீரைப் போன்றும் அளித்தற்கேற்ப மனவலிமையில் வாளியைப் போன்றும், உசாவுதலில் விசும்பினைப் போன்றும் இருந்து ஒளி போல விளங்க வேண்டும் என்று அறிவுறுத்துகின்றதை,

"தண்டா ஈகைத் தகைமாண் குடுமி
தண்கதிர் மதியம் போலவும் தெறுசுடர்
ண்கதிர் ஞாயிறு போலவும்
மன்னிய பெருமநீ நிலமிசை யானே"[31]

என்று மதிபோலவும், ஞாயிறு போலவும் நிலத்தின் கண் நடுநிலைமையுடன்ஆட்சி செய்ய வேண்டும் என்று காரிக்கிழார் அறிவுறுத்துகிறார்.

மன்னனின் நிழலில் வாழ்வோர்க்கு நாஞ்சில் அன்றி வேறு படை அறியார் என உழவின் மேன்மையை அறிவுறுத்தியதை,

"சோறு படுக்குந் தீயோடு
செஞ் ஞாயிற்றுத் தெறலல்லது,
பிறிது தெற லரியார் நின்னிழல் வாழ்வோரே
திருவில் அல்லது கொலைவில் லறியார்
நாஞ்சி லல்லது படையும் அறியார்"[32]

என்னும் பாடலில் உழவு செழித்தால் நாடு செழிக்கும் என்பதை உணர்ந்து உழுப்படைக்கு முதலிடம் அளித்து நாற்படையினைக் கொண்டு ஆளும் மன்னனின் ஆட்சி மாண்பினை எடுத்துரைக்கின்றது. மேலும்,

"உணவு எனப்படுவது நிலத்தோடு நீரே
நீரும் நிலனும் புணரியோர் ஈண்டு
உடம்பும் உயிரும் படைத்திசினோரே"[33]

நிலத்தையும் நீரையும் ஒன்று சேர்த்தவர் இவ்வுலகில் உடலையும் உயிரையும் படைத்தவராவர். அவரே உலகுள்ளவரை நிலைத்தப் புகழையும் பெறக்கூடியவர் என்று புலவர் குடபுலவியனார் பாண்டியன் நெடுஞ்செழியனுக்கு நீரின் முக்கியத்துவத்தை,

"திங்கள் புத்தேள் திரிதரும் உலகத்து
வல்லார் ஆயினும் வல்லுநர் ஆயினும்
வருந்தி வந்தோர் மருங்கு நோக்கி
அருள வல்லை ஆகுமதி; அருள்இலர்
கொடாஅத துப்பின் நின்பகை எதிர்ந்தோரே"[34]

எனவரும் புறப்பாடலில் திங்களின் இயல்பினைக் கூறி அத்தன்மையினைப் போல் கருணையும், கொடை உள்ளமும் கொண்டு விளங்க வேண்டும் என்று நலங்கிள்ளி இடத்து உறையூர் முதுகண்ணன் சாத்தனார், மன்னனுக்கு வீரத்துடன் அருள் உள்ளமும், கொடை குணமும் வேண்டும் என்பதை வலியுறுத்துகிறார்.

உழவினால் உண்டாகும் பயனை எடுத்துரைக்கும் விதத்தில் உழுத்தொழில் செய்வோரது குடியைப் பாதுகாத்து அதனாலே ஏனைக்குடிகளையும் காப்பாராயின் , நின் பகைவரும் நின் அடியைப் போற்றுவர் என்று, "ஏர்பின்னது உலகம்"[35] எனக் குறள் மொழிகிறது. அது போல,

"பகடு புறந்தருநர் பாரம் ஓம்பி

குடி புறந்தருகுவை ஆயின், நின்

அடி புறந்தருகுவர் அடங்காதோரே"[36]

என்ற பாடலில் புறநானூறு மூலம் உழவர், உழவின் மேன்மையை கிள்ளி வளவனை வெள்ளைக்குடி நாகனார் அறிவுறுத்துகிறார்.

"கூலம் பகர்நர் குடிப்பிறந்தராஅ

குடிபுறந் தருநர் பாரம் ஓம்பி"[37]

என்று இமயவரம்பன் நெடுஞ்சேரலாதனின் குடிகளைப் பாதுகாக்கும் பண்பைப் பாராட்டியுள்ளார். எனவே, நோய்த் துன்பமும், பசித்துன்பமின்றி மக்கள் பல வளங்களைப் பெற்று வாழ்ந்தனர். ஆகவே, மக்களைக் காக்கும் மன்னனது நாட்டில் இயற்கையும் இணைந்து உதவும் என்பது புலப்படுகிறது.

ஆடுகோட்பாடுச் சேரலாதனை, "தன்னைச் சார்ந்தோர்க்கு அரணம்"[38] என்று காக்கைப் பாடினியார் பாராட்டியுள்ளார். அதேசமயம், அறியாமல் போர்புரிந்து தோற்றுக் கப்பம் கட்டும் பகை நாட்டினரையும் அம்மன்னனேதான் காக்க வேண்டும் என வேண்டுகிறார். அவரது வேண்டுகோளை,

"பாடுசால் நன்கலம் தருஉம்

நாடுபுறந் தருதல் நினைக்குமார் கடனே"[39]

என்ற பாடலில் அறியமுடிகின்றது. இதிலிருந்து அக்கால அரசர்கள் தங்கள் நாட்டு மக்களுடன் பகை நாட்டு மக்களையும் காத்த மனிதநேய மாண்பினையும் கண்டுணர முடிகின்றது.

அரசன் அன்பு, அறிவு, ஆற்றல் என்பன உடையவராய் இருத்தல் வேண்டும் . அறிவினால் நாடு காவலுக்குரியன ஓர்ந்து, முறை தவறாது காப்பாற்றுதலும்,

அன்பினால் குடிமக்கள் நலன் கருதி ஆவண செய்தலும், இரவலர்க்கு ஈதலும், படை வலிமையால் பகை அரசனால் உண்டாகும் ஏதத்தைத் தடுத்தலும், போரில் வெற்றிப் பெறுதலும் அம்மன்னன்பால் அமைவதை உணரமுடிகின்றது.

மேலும், பேராற்றலும் வீரமும் நிறைந்த மன்னர்கள், சொல் வன்மை படைத்த புலவர்களின் நற்சொற்களைக் கேட்டு ஒழுகும் ஒழுக்க நெறியை மன்னர்களிடத்தில் காணமுடிகின்றது.

'முடிவுடை வேந்தரும் முடிவில் ஒரு பிடி சாம்பல் ஆவர்' என்பது உலக வழக்கு. தான் புரிந்த ஆட்சியும் சேர்த்த செல்வம் அழியும் தன்மையது என்பதை உணர்ந்து செயல்பட அறிவுறுத்தும் வகையில்,

"நினைக்கும் வருதல் வைகல் அற்றே;
வசையும் நிற்கும்: இசையும் நிற்கும்;
அதனால் வசைநீக்கி இசை வேண்டியும்
நசை வேண்டாது நன்று மொழிந்தும்"[40]

என்னும் பாடலில் இவ்வுலகில் ஒருவர் செய்யும் பழியும் புகழும் நிலைப்பெற்று நிற்கக்கூடியது. எனவே, நல்லறமே செய்து வாழ்வீராக என்று அத்துவன் கீரனைக் காவட்டனார் அறிவுறுத்துகிறார். இதனால் நாடு கொண்ட வேந்தரும் இடுகாடு சென்றனர். ஆனால் அவர்கள் செய்த அறம் நிலைப்பெற்றது. எனவே, அறத்தொடு வாழ்தல் நிலைத்தப் புகழைத் தரும் என்ற அறிவார்ந்த உண்மையைக் கண்டுணர முடிகின்றது.

அரசமுறை கெட்டதின் காரணத்தினால்தான் நாட்டின் பற்பல ஊறுகட்கும் காரணம் என்று பழிப்பது நாட்டு மக்களின் இயல்பு. நீதியாளனான மன்னன் இந்த

உண்மைகளை எல்லாம் உணர்ந்து ஊறுவினை ஏற்படாதவாறு விழிப்போடு நாடு காவலை நடத்திச் செல்லும் தமிழர் நீதியைக் கண்டுணர முடிகின்றது.

**அரசரின் ஆட்சித்திறம்**

எட்டுத்தொகை செய்யுட்களை ஆராயுமிடத்து உண்மையும், உயிர்த்துடிப்பும் ஊடாடி நிற்கும் உணர்ச்சி மிகுந்த பொருளையே பாடற்பொருளாக வரைந்துள்ளனர். இதனால் இன்பம் வந்தபோது நினைத்து தம்மை மறப்பதோ, துன்பம் கண்டபோது துவண்டு விடுவதோ இல்லாமல் தம் கடமையை மக்கள் ஆற்றியிருந்ததனை உணரமுடிகிறது.

அரசன் இறைப்பொருள் கொள்ளும் நெறியை அறிந்துக் கொண்டால் நாடு மிகவும் தழைக்கும் என்று அறிவுடை நம்பி என்ற பாண்டிய மன்னனிடத்து பிசிராந்தையார் கூறும் அறிவு மொழிகள் வரி விதிப்புமுறைக்கு வைக்கும் அதிகாரிகளுக்கு பாடமாக அமைகின்றதை,

"அறிவுடை வேந்தன் நெறியறிந்து கொளினே
கோடி யாத்து நாடுபெரிது நந்தும்"[41]

என்ற வரிகளில் யானையின் உணவுக்கு நெற்பயிரைச் சிறிது சிறிதாகக் கொள்வது போல நாட்டு மக்களிடம் வரியைச் சிறிது சிறிதாகப் பெற வேண்டும் என்பதை விளக்குகின்றது.

வேந்தன் என்பவன் தன் நாட்டில் உள்ள குடிமக்களின் நலத்தினை மையமிட்டே ஆட்சி அமைய வேண்டும் என்பதை காப்பியாற்றுக் காப்பியனார் இதனை,

"தொன்னிலைச் சிறப்பி னின்னிழல் வாழ்நர்க்குக்
கோடற வைத்த கோடாக் கொள்கையும்"[41]

என்ற பாடல்வழி பழமையான நிலைப்பெற்ற சிறப்பினையுடைய களங்காய் கண்ணி நார்முடிச்சேரல் ஆதரவின்கீழ் வாழும் மக்கள் திருந்திய அறக்கோட்பாட்டை உடையவர்களாக கடமையாற்றியதை உணரமுடிகின்றது.

மன்னர்கள் தான் செய்ய வேண்டிய பணிகளைத் திட்டமிட்டு ஒவ்வொரு நாளையும் பகுத்துக்கொண்டு தம் பணிகளைச் செம்மையாக செய்ததை,

"அறவோன் மகனே! மறவோர் செம்மல்
உரைப்பக் கேண்மதி
நின் ஊற்றம் பிறர் அறியாது
பிறர் கூறிய மொழி தெரியா
ஞாயிற்று எல்லை ஆள்வினைக்கு உதவி
இரவின் எல்லை வருவது நாடி
உரை ........................................"[43]

என்ற பாடல் வழி, ஓர் அரசன் தன் வலிமையை பிறர் அறியவிடக் கூடாது. அதுபோல பிறர்கூரிய சொற்களில் உள்ள உண்மைப் பொருளைத் தள்ளிவிடாமல் தெரிந்துக் கொள்ள வேண்டும். பகற்பொழுதிலே செய்ய வேண்டிய செயல்களை செய்து முடிக்க வேண்டும். இரவு நேரத்தில் பின்னர் நிகழ இருப்பதற்கு ஏற்ற செயல்களை ஆய்தல் வேண்டும் என்று அரசன் செயல்படக் கூடிய வழிமுறையை வகுத்து அரசியல் பண்பாட்டினை எடுத்துரைக்கின்றது.

அரசனின் ஆட்சித் திறத்தை உவமித்துத் தொண்டைமான் இளந்திரையன் பாடுகிறார். வண்டியைச் செலுத்துபவன் திறம் பெற்றவராயின் வண்டி இடையூறு இன்றி ஓடும். திறம் பெறவில்லை எனில், பாழ்படும். அதுபோல, தலைமை பொறுப்பை திறம்பட அறியவில்லை எனில் நாடு சீர்கேடு அடையும் என்பதை நினைவூட்டிய விதத்தை,

"கால் பார் கோத்து, ஞாலத்து இயக்கும்
வற் சாகாடு கைப்போன் மாணின்
று இன்றாகி ஆறு இனிதுபடுமே"[44]

எனவரும் புறப்பாடல் மூலம் ஆட்சி செய்வருக்கு வீரம், விவேகம் தேவை என்பதை உணர்த்துகின்றது. மேலும், தலைமை செலுத்தும் தலைவனின் வன்மையை,

"கழி உப்பு முகந்து கல் நாடு மடுக்கும்
ஆரைச் சாகாட்டு ஆழ்ச்சி போக்கும்
உடனுடை நோன் பகட்டு அன்ன எம் கோன்"[45]

என்ற புறப்பாடல் உப்பு ஏற்றிய வண்டியினை மலையில் ஆழ்ந்து விடாதபடி இழுத்துச் செல்லும் காளை போன்றவன் அரசன் என, அரசன் திறம் எவ்விதம் அமைய வேண்டும் என்பதற்கு வண்டியை இழுத்துச் செல்லும் காளையை உவமித்து ஆட்சி செலுத்துவோர் பெறவேண்டிய வன்மைத் திறனை சுட்டிக்காட்டுவதைக் காண முடிகின்றது.

**நாடு காக்கும் முறைமை**

நாட்டை ஆளும் வேந்தனுக்கு மற்ற நாட்டை ஆளும் வேந்தன் மட்டும் பகை அன்று. அவன் ஆட்சி புரியும் நாட்டில் காணலாகும் வறுமை நிலையும் அவனுக்கு தீராத பகைதான். எனவே அவ்வறுமை பகையினைச் சுட்டிக்காட்டி,

"கசிவுற்ற என் பல் கிளையொடு
பசி அலைக்கும் பகை ஒன்று என்கோ!
................................................................
குரங்கு அன்ன புன் குறுங் கூளியர்
பரந்து அலைக்கும் பகை ஒன்று என்கோ!"[46]

என்று புறப்பாடலால் துறையூர் ஒடைகிழார் தன் சுற்றத்தினது வறுமை நிலையினைக் களைத்திடும் வழி உன்னிடத்தே உள்ளது என்கிறார். ஆய் மன்னனிடத்து ஆரலைக்கள்வர் பகை, வேந்தர் பகை என்பன போன்ற பகைகளை அறியும் வெறுமை என்ற பெறும் பகையையும் போக்க வேண்டிய பொறுப்பை உடையவன் என்கிறார். இதிலிருந்து அரசன் அறிய வேண்டிய பகை எது? எதனை முதலில் தீர்க்க வேண்டும் என்பதை அறியமுடிகின்றது.

மேற்கண்டதை நோக்கும் பொழுது, அவ்வையார் மொழிந்ததை,

"கொடிது கொடிது இளமையில் வறுமை"[47]

என்றும். மேலும்,

"இன்னா இளமை வறுமை வந்து எய்தியக்கால்"[48]

என்பதை, மணிமேகலை உணர்த்துவதை,

"அறமெனப் படுவது யாதெனக் கேட்பின்
மறவாது இதுகேள் மன்னுயிர்க் கெல்லாம்
உண்டியும் உடையும் உறையுளும் அல்லது
கண்டதுஇல்"[49]

என்ற பாடலின் வழி அறியமுடிகின்றது. மேலும்,

"நீரின் றமையா யாக்கைக் கெல்லாம்
உண்டிக் கொடுத்தோர் உயிர் கொடுத்தோரே;
உண்டி முதற்றே உணவின் பிண்டம்"[50]

என்ற பாடலில் மனிதனுக்கு வறுமையின் கொடுமையினையும், உணவின் இன்றியமையாமையையும் உணர்த்தி வறுமை நிலையைப் போக்குவதற்குரிய வழிமுறைகளை சங்க இலக்கியங்கள் குறிப்பிடுகிறது.

பிணிகளுள் கொடிய பிணி பசிப்பிணி. இதனால் மக்கள் எவ்வகை இன்பமும் பெறாது வருந்துவர். எனவே கொடிய பசிப்பிணி நீங்க வேண்டி,

"பசியில் லாகுக பிணிசே ஸணீங்குக"[51]

என வேண்டுகிறார் ஐங்குறுநூற்றில் இலக்கியத் தலைவி. பகைவரால் எவ்வித துன்பமும் நேராது நல்வாழ்க்கை வாழ வேண்டும், நல்லறங்கள் பெருக வேண்டும், என்று வேண்டும் தலைவியையும்,

"அறநனி சிறக்க அல்லது கெடுக"[52]

"நன்று பெரிது சிறக்க தீதில்லாகுக"[53]

மேற்கண்ட வரிகளில் ஒரு குடிமகனின் பொதுநல நோக்கினைக் காணமுடிகின்றது. எனவே, வறுமை ஒழிப்பது என்பது அரசின் தலையாய கொள்கையாக விளங்கியுள்ளது. வருவோரும், போவோருமான பலருக்கும் அன்னதானம் செய்து மக்களின் வயிற்றுப் பசியைப் போக்கியதைப் பதிற்றுப்பத்து இதனை,

"உண்மருந் தின்மரும் வரைகோ ளறியாது
கண்டு மதி மருளும் வாடாக் கொன்றி"[54]

என்ற பாடல் வரிகள் மூலம் வறுமையில் உள்ளோரின் பசியைக் களைத்து மக்களின் வளமான வாழ்விற்கு வழி வகுத்ததைக் காணமுடிகின்றது.

தாம் ஆளும் நாட்டில் வறுமை ஒழிந்ததால் இரவலர் இன்மைக் காரணமாக, அயல் நாட்டில் உள்ள இரவலர்களைத் தேரில் ஏற்றிக் கொண்டு வந்து அவர்களின் பசியைப் போக்கிய ஆடுக்கோட்பாட்டுச் சேரலாதனின் நாடுகாக்கும் சிறப்பை,

"வாரா ராயினும் இரவலர் வேண்டித்
தேரிற் றந்தவர்க் கார்பத லைக்கும்"[55]

என்ற வரி மூலம் மாபெரும் பகையான வறுமையைத் தன்னாட்டிலுமன்றி பகைநாட்டிற்கும் சென்று வறுமை பகையை அழித்த சேரலாதனின் உன்னதச் செயலைக் கண்டுணர முடிகின்றது.

ஒளி பொருந்திய ஆபரணங்களை அணிந்த விறலியர் மன்னனின் வீரத்தை உயர்த்திப் பாடுவர். அவ்விதம் பாடிய இரப்போர்களின் வறுமை துன்பம் தீர ஒவ்வொரு நாளும் பரிசுப் பொருட்களைத் தரும் வள்ளல் பற்றிய செய்தியினை,

"மின் இழை விறலியர் நின்மறம் பாட
இரவலர் புண்கண்தீர, நாள்தோறும்
உரைசால் நன் கலம் வரைவு இலவீசி
அனைய ஆகல்மாறே"[56]

என்று பதிற்றுப்பத்து பாடல் மூலம், இவ்வளவு தான் என்று வரைமுறையின்றி நல்கிய முறையை எடுத்துரைக்கிறது. தான் தேடிய செல்வத்தைப் பலர்க்கும் பகுத்துக் கொடுத்துத் தானும் உண்ண வேண்டும், வருந்தும் உயிர்கள் பலவற்றையும் காப்பாற்ற வேண்டும் என்று அறநாலோர் தொகுத்துக் கூறியிருக்கும்

"பகுத்துண்டு பல்லுயிரோம்புதல் நூலோர்

தொகுத்தவற்றுள் எல்லாம் தலை"[57]

என்ற அறங்களுக்குள்ளே தலைச்சிறந்ததான அன்னம் வழங்கி பசியாற்றுதலை வள்ளுவர் எடுத்துரைக்கின்றார்.

பண்டைத் தமிழ் வேந்தர்கள் தங்கள் நாட்டைக் கண்ணும் கருத்துமாக காப்பாற்றி வந்தனர். குடிமக்களின் அன்பையும் ஆதரவையும் பெற்ற மன்னர்கள் வீரத்தில் சிறந்து பகைவர்களை வென்றனர். எனவே, மன்னனை தங்களைக் காக்கும் கடவுலென மதித்ததை,

"நின்கோல் செம்மையின்

நாளின் நாளின் நாடு தொழுதேத்த

உயர்நிலை உலகத்து உயர்ந்தோர் பரவ

அரசியல் பிழையாது செரு மேந்தோன்றி

நோயிலை ஆகியர் நீயே"[58]

என்ற பாடல் வரிகள் மூலம் குடிமக்களால் கொண்டாடப்படும் ஆட்சியாக அமைந்ததை உணரமுடிகின்றது. மேலும்,

"மழை வேண்டு புலத்து மாரி நிற்ப

நோயொடு பசியிகந்து ஓரிஇப்

பூத்தன்று, பெருமநீ காத்த நாடே"[59]

மேற்காணும் பாடலில் பிணியும், வறுமையும் இல்லாமல் நாட்டு மக்களைப் பாதுகாப்பதே நல்லாட்சியின் கடமை என்பதை வலியுறுத்துகின்றது.

"முறைசெய்து காப்பாற்றும் மன்னவன் மக்கட்கு

இறை என்று வைக்கப்படும்"[60]

வள்ளுவனாரும் முறைச் செய்து காப்பவரே இறை என்று போற்றுவர் என்பதை வலியுறுத்துகின்றார். மேலும்,

"அரசு முறை செய்க! களவு இல்லாகுக!"[61]

என்ற வரிகளில் அரசு நெறியுடன் செயல்பட்டால் களவு என்பது நாட்டில் இருக்காது. அனைத்து வளமும் பெற்று விளங்கும் என்பதைப் புலப்படுத்துகின்றதை,

"உறுபசியும் ஓவாப் பிணியும் செறுபகையும்
சேராது இயல்வது நாடு"[62]

என்றும் மேலும்,

"பிணியின்மை செல்வம் விளைவின்பம் ஏமம்
அணியென்ப நாட்டிற்கிவ் வைந்து"[63]

என்னும் பாடலின் வழி பிணியின்மை, செல்வம், காவல், விளைவு இன்பம் இவ்வைந்தும் நாட்டிற்கு அழகு என்று நவிலும் வள்ளுவரின் வாக்கிற்கு ஏற்ப, மன்னன் தன் சிறப்பால் மக்களின் பிணியும் வறுமையும் நீக்கி சீரோடும் சிறப்போடும் காத்து வந்ததை அறியமுடிகின்றது.

**கொடைச் சிறப்பு**

முடிவேந்தர்களில் xUtuhd சேர மன்னர்களின் வீரம், புகழ், மாண்பு பற்றி புலவர்கள் பாடிய பாடலுக்கு அம்மன்னர்கள் அளித்த அளப்பரியதான கொடை பற்றி எட்டுத்தொகையில் தனி பனுவலாக பதிற்றுப்பத்து அமைந்துள்ளது.

1. இரண்டாம் பத்து - இமயவரம்பன் நெடுஞ்சேரலாதனைக் குமட்டூர்க் கண்ணனார் பாடியுள்ளார். இதற்காக அவர் பெற்ற பரிசில் உம்பர் காட்டு

ஐந்நூறு ஊர்களையும், முப்பத்தெட்டு ஆண்டுகள் தென்னாட்டு வருவாயில் ஒரு பகுதியையும் பெற்றார்.

2. மூன்றாம் பத்து - பல்யானைச் செல்கெழுக்குட்டுவனைப் பாலை கொளதமனார் பாடியுள்ளார். இதற்காக புலவர் பெற்ற பரிசில், அவரும் அவர்தம் மனைவியும் சுவர்க்கம் புகத் தேவையான வேள்விகளைச் செய்ய அவன் உதவினான்.

3. நான்காம் பத்து - களங்காய் கண்ணி நார் முடிச் சேரலைக் காப்பியாற்றுக் காப்பியனார் பாடியுள்ளார். புலவர் பெற்ற பரிசில் நாற்பது நூறாயிரம் பொன்னும் ஆட்சியில் ஒரு பாகமும் பெற்றார்.

4. ஐந்தாம் பத்து - கடல் பிறக்கோட்டிய செங்குட்டுவனைப் பரணர் பாடி, உம்பர் காட்டு வருவாயை பரிசிலாகப் பெற்றதோடு தன் மகன் குட்டுவன் சேரலையும் பரிசிலாகக் கொடுக்கப் பெற்றான்.

5. ஆறாம் பத்து - ஆடுகோட்பாட்டுச் சேரலாதனைக் காக்கைப் பாடினியார். நச்செள்ளையார் பாடியமைக்காக ஒன்பது துலதம் பொன்னும் நாலாயிரம் பொற்காசும் பரிசாகப் பெற்றார்.

6. ஏழாம் பத்து - செல்வக் கடுங்கோ வாழியாதனைக் கபிலர் பாடினார். அதற்காக, நாறாயிரம் காணம் கொடுத்து, "நன்றா" என்னும் குன்றின் மேல் ஏறி நின்று தன் கண்ணிற் கண்ட நாடெல்லாம் பரிசிலாக அளித்தார்.

7. எட்டாம் பத்து - பெருஞ்சேரல் இரும்பொறையை அரிசில் கிழார் பாடியது அரசனும், அரசியும் அரண்மனை விட்டு வெளியேறி நின்றுக் கொண்டு அரசாட்சியை புலவர் ஏற்க வேண்டும் என்று இரந்து நின்றதோடு ஒன்பதாயிரம் பொன்னும் பெற்றார்.

8. ஒன்பதாம் பத்து - இளஞ்சேரல் இரும்பொறையைப் பெருங்குன்றூர் கிழார் பாடியது. முப்பத்திரண்டாயிரம் பொன் கொடுத்து அவன் அறியாமல் புலவர்க்கு ஊரும், மனையும், ஏரும், இன்பமும் அளித்து மகிழ்ந்தான்.

பதிற்றுப்பத்து பாடல்களில் சேர மன்னர்களின் பெருமைகளை, வரலாற்றுச் சிறப்புகளைப் பாடிய புலவர்களைப் போற்றிய திறம் அவர்களுக்கு வழங்கிய கொடை போன்றவை ஆண்ட மன்னர்களின் வள்ளல் தன்மையை எடுத்துக்காட்டுகின்றது.

வீரமும் கொடையும் பண்டைத் தமிழ் வேந்தர்களின் தலையான பண்பாக அமைந்துள்ளது. 'ஈதல் இசைபட வாழ்தல்' என்ற வள்ளுவரின் குறளுக்கேற்ப அரசர்கள் கொடை வள்ளலாக திகழ்ந்து தம்மை நாடி வரும் புலவர்க்கும் மற்றவர்களுக்கும் பொன்னையும், பொருளையும் குறையாது கொடுத்து மகிழ்ந்ததை இலக்கிய வழி கண்டுணர முடிகின்றது.

ஒரு நாட்டின் செழுமையான வாழ்விற்குக் காரணம் குறிக்கோள் கொண்ட ஒழுக்கத்தைக் கடைபிடிக்கின்ற நற்குடி மக்களாகிய சான்றோர்கள் ஆவர் என்பதை,

"யான் கண்டனையர் என் இளையரும், வேந்தனும்
அல்லவை செய்யான் காக்கும்: அதன் தலை
ஆன்று அவிந்து அடங்கிய கொள்கைச்
சான்றோர் பலர் யான் வாழும் ஊரே!"[65]

அல்லவை செய்யாத வேந்தன் அமைந்தாலும், மெய்படங்கிய சான்றோர் பலர் வாழ்வதாலே தாம் வாழும் ஊரில் செம்மையான வாழ்வு அமைந்ததாக தன் உயரிய வாழ்க்கையின் உன்னத நிலையினை பிசிராந்தையார் குறிப்பிடுகிறார். நல்ல

படைப் பலம், பொருளாதாரம் ஒரு நாடு பெற்றிருந்தாலும் நல்லொழுக்கத்தை கடைப்பிடிக்கின்ற நற்தவச் சான்றோர்களால் நாடு மேன்மை அடையும் என்பதை கண்டு உணர முடிகின்றது.

கொடைத்திறன் என்பது தன்னிடம் சிறப்பித்து இருக்கும் பொருள்களை தான் மனமுவந்து கொடுப்பது கொடை ஆகும். மன்னர்கள் அளித்த கொடைத்தன்மையை மக்கள் கண்டுணர்ந்ததால், தலைவனும் கொடைத்தன்மை மிக்கவனாய் விளங்கியுள்ளான். அத்தலைவன் தன்னிடம் பொருள் அதிகம் இல்லாமல் போயினும் தன்னை நாடி வந்த பரிசிலர்க்கு இல்லை என்று கூறாமல் தன்னிடம் உள்ள சிறு பொருளை பகுத்துக் கொடுக்கும் பண்பாடு நிறைந்த வீரனைப் பற்றிய செய்தியினை,

"...................................... உள்ளது
தவச்சிறிது ஆயினும் மிகப்பலர் என்னாள்
நீள்நெடும் பந்தர் ஊண்முறை ஊட்டும்
இற்பொலி மகடுஉப் போல, சிற்சில
வரிசையின் அளிக்கவும் வல்லன்"[66]

என்ற பாடலில் இல்லறத்தால் பொலிந்து தோன்றும் மனைவியைப் போல தன்னுடைய சிறிய இல்லத்தில் தன்னை நாடி வரும் இரவலர்களின் தகுதியறிந்து கொடை வழங்குவதிலும் வல்லவன் என உறையூர் முதுகூத்தனார் வீரனின் கொடைச் சிறப்பை விளக்குகிறார்.

ஒரு வீரனின் வீரத்தினையும், அவன் கொடையினையும் ஒருங்கே மதுரை இளவேட்டனார் தம்பாடலில்,

"புரவலர் புன்கண் நோக்காது இரவலர்க்கு
அருகாது ஈயும் வண்மை"[67]

புரவலர்க்கு உண்டாகும் துன்பம் தன் ஆண்மையால் நீங்குமாதலின், அதனை ஒரு பொருளாக நோக்காது இரவலர் இன்மை தீர்ப்பதையே பெரிதாகக் கருதினான் என்ற தலைவனின் கொடைச் சிறப்பை பதிவு செய்கிறார்.

தம் வாழ்வை ஒரு பொருட்டாகக் கருதாத வீரத்திலும், கொடையிலும் சிறந்து விளங்கும் வீரனின் சிறப்பை,

"என் அமைவு இன்று அவன் உள்ளிய பொருளை"[68]

வேந்தனுக்கு நிகராக கொடை வழங்குபவன் என்று கூறுகிறார் மாங்குடிக்கிழார். இதிலிருந்து தான் பெற்ற சிறுப்பொருளையும் அளிக்கும் தனிமனிதனின் கொடையுணர்வை அறியமுடிகின்றது. போர் வீரர்க்கு மன்னர் பொன் பொருள் வழங்கியதை,

"அண்ணல் யானை அணிந்த
பொன்செய் ஓடைப் பெரும் பரிசிலனே"[69]

இப்பாடல் கூறுகின்றது. அவ்வாறு பெறும் பரிசில்களை தலைவன் தன்பால் நாடி வரும் இரவலர்க்கு அளித்ததையும், பாணர்க்கு உணவு சமைத்துக் கொடுத்த ஓயாத பணியினையும்,

"ஊண்ஒலி அரவமொடு கைதூவாளே
உயர்மருப்பு யானைப் புகர்முகத்து அணிந்த
பொலம் ..............................................................
பரிசில் பரிசிலர்க்கு ஈய,
உரவுவேல் காளையும் கைதாவானே"[70]

இப்பாடலில் வீரன் தன் மனைவியோடும், சிறார்களோடும் இருந்து தாம் பெற்ற பரிசிலை தன்னை நாடி வந்தவர்களுக்கு அளித்து மகிழ்ந்த பெருமித வாழ்க்கையைக் கண்டுணரமுடிகின்றது.

**வறுமையில் பெருமிதம்**

பாடுவதைக் தொழிலாகக் கொண்ட பெரும்பான்மையான புலவர்களிடத்து வறுமையும் இருந்தது என்பதை,

"பழுமர முள்ளிய பறவைபோல"[71]

என்றும், புலவர்கள் அரசனிடத்து,

"மனையோள் எவ்வம் நோக்கி, நினைஇ
இன்மை தீர்க்கும் குடிப்பிறந்தோயே"[72]

மேலே காணும் வரிகளில் தன் வறுமை நிலையினை எடுத்துக்கூறியதோடு, புலவர் தன் வறுமை நிலையிலும் இளங்குமணன் நாட்டைக் கவர்ந்துக் கொண்டு, குமணனைக் கொல்ல கருதியதை அறிந்த பெருந்தலைச் சாத்தனார் இருவரிடையே உள்ள பகையைப் போக்கி ஒற்றுமை நிலவச் செய்ய நினைக்கும் பெருமிதத்தைக் காணமுடிகின்றது.

புலவர் பெருமக்கள் வறுமைநிலையில் வாழ்ந்தாலும் உணர்ச்சி கலைஞர்களிடம் காணாத ஒரு பேற்றினைக் காணமுடிகின்றது. அதற்குக் காரணம் புலவர்களின் புலமைச் செருக்கே எனலாம். அதனால்தான் பெருநில வேந்தனிடத்து தவறு காணினும் அஞ்சாமல் இடிந்துரைக்கும் நிகழ்வுகளைக் காணமுடிகின்றது. பெருஞ்சித்திரனார் அதியமானிடத்து சென்ற போது தன்னை காணாது பொருள் கொடுத்ததால் வாங்க மறுத்து, பொருளுக்காகப் பாடும்

வாணிகப் பரிசிலன் அல்லன் என்று பரிசில் வேண்டுவோரின் கல்வி முதலிய தகுதிகளை அறிந்து வழங்கு என்று எடுத்துரைத்ததை,

"காணாது ஈத்த இப் பொருட்கு யான் ஓர்
வாணிகப் பரிசிலன் அல்லேன் பேணி
தினை அனைத்து ஆயினும் இனிது - அவர்
துணை அளவு அறிந்து நல்கினர் விடினே"[73]

என்ற பாடலின் மூலம் காணாமல் பரிசளிப்பின் பெறேன் என மறுத்து, வறுமை வாழ்க்கையும் பெருமிதமாக கருதுதலைக் குறித்து நின்றதை உணரமுடிகின்றது.

"ஈயாய் ஆயினும், இரங்குவென் அல்லன்
நோய் இலை ஆகுமதி பெரும"[74]

என்னும் பாடலின்வரிகளில் பரிசு கொடுக்கவில்லையாயினும் நான் வருந்தமாட்டேன் நோயின்றி இருப்பாயாக என்று வாழ்த்தும் பெருந்தலைச் சாத்தனாரின் பெருமித உணர்வை கண்டுணர முடிகின்றது.

புலவர்கள் மன்னரும் வள்ளலும் தம்மை மதிக்க வேண்டும் என்று எண்ணினர். வரிசையறிந்து பரிசில் வழங்க வேண்டும் என்று எதிர்ப்பார்த்தனர். இரவலராயினும் காலம் நீடித்து பரிசில் கொடுப்பதை வெறுத்த செய்தியினை,

"சேய்த்துக் காணாது கண்டனம்: அதனால்
நோய் இலராக நின் புதல்வர்"[75]

மேலே கூறும் வரிகளில் பரிசில் மறுத்தலால் வசையாது நீயும் நின் புதல்வர்களும் நோயின்றி சிறக்கவும் என்று வாழ்த்தும் புலவரை கண்டுணர்த்துகிறது.

ஒரு படிக்கு மேற்சென்று புலவர்களின் பெருமித உணர்வினை வெளிக்காட்டும் விதத்தை,

"வரிசைக்கு வருந்தும் இப்பரிசில் வாழ்க்கை
பிறர்க்குத் தீது அறிந்தன்றோ? இன்றே திறப்பட
நண்ணார் நாண, அண்ணாந்து ஏகி,
ஆங்க இனிது ஒழுகின் அல்லது ஓங்குபுகழ்
மண் ஆள் செல்வம் எய்திய
நும் ஓர் அன்ன செம்மலும் உடைத்தே"[76]

என்னும் புறநூலில் புள்ளினம் போல பரிசிலர் வாழ்க்கை அமைந்ததாயினும், நுட்பமைந்த கல்வியின் சிறப்பால், உயர்ந்த புகழுடைய செல்வத்தை பெற்ற மன்னர்க்கு இணையான உயர்வுடைய புலவர்கள் என்பதை உணர்த்துகின்றது.

மேலும் தான் பெற்ற வளத்தினை தான் மட்டும் உண்ணாது பகிர்ந்தளிக்கும் செய்தியினை,

"நின் நயந் துறைநர்க்கும், நீ நயந்துறைநர்க்கும்
பல் மாண் கற்பின் நின் கிளை முதலோர்க்கும்
கடும்பின் கடும் பசி தீர யாழ நின்
நெடுங் குறியெதிர்ப்பை நல்கியோருக்கும்
எல்லோருக்கும் கொடு மதி மனைக்கிழவோயே!"[77]

என்னும் புறப்பாடல்வழி பலருக்கும் தரும் பண்பினால் மன்னனுடன் ஒப்பிடும் முறையில் அமைந்த புலவர்களின் வண்மை அறியமுடிகின்றது.

**வீரச்செயல்கள்**

பண்டைய அரசர்கள் மற்றும் மக்களிடையே இருந்த வீர உணர்வு போருக்கு வித்திட்டது. போர்புரிவது அரசருக்குரிய அறமாகக் கருதப்பட்டது. ஒவ்வொரு அரச வம்சமும், தனக்கென கொடி, சின்னம், செங்கோல், வாள், வெண் கொற்றக்குடை, முரசு ஆகிறவற்றை பெற்றிருந்தது.

தன் நாட்டைக் காக்கவும், பிறர் மண்ணைக் கைப்பற்றவும் போரில் ஈடுப்பட்டனர். மேலே,

"பிறா மண் உண்ணும் செம்மல் நின்னாட்டு
வயவுறு மகளிர் புறம் வேட்டுணி னல்லது"[78]

என்றும், மேலும்,

"போகம் வேண்டிப் பொது சொற் பொறாஅு
திடஞ்சிறி தென்னு மூக்கத் துரப்ப"[79]

மேலே காணும் வரிகளில் பிற நாட்டைக் கைப்பற்ற போர் புரிந்ததை எடுத்துரைக்கின்றது.

அன்பர்களுக்கு பாதுகாவலனாகவும், பகைவர்க்கு அச்சுறுத்தும் தெய்வமாகவும் விளங்கும் வேந்தனைப் போல இருப்பதை,

"ஓடுங்காத் தெவ்வர் ஊக்கு அற கடைஇ,
புறங்கொடை எறியார், நின் மறப் படை கொள்ளுநர்
நகைவர்க்கு அரணம் ஆகி, பகைவர்க்குச்
சூர்நிகழ்ந்தற்று, நின் தானை
போர் மிகு குரிசில் நீ மாண்டனை பலவே"[80]

என்று பதிற்றுப்பத்துப் பாடலில் வலிமை மிகுந்த வீரர்களால் பகைவரை புறமுதுகிட்டு ஓடச் செய்யும் படை வளமை பெற்ற வேந்தனின் மாண்பினை பதிற்றுப்பத்து பறைச்சாற்றுகின்றது.

போரில் தன் படை புறங்கொடுத்து ஓடினாலும் தான் அஞ்சாது எதிர்த்து நின்று போரிட்டு வென்ற மன்னனின் மற்போரினைப் பற்றிய செய்திகளை,

"பசித்துப் பணை முயலும் யானை போல,
இரு தலை ஒசிய ஏற்றி,
களம்புகு மல்லற் கடந்து அடு நிலையே"[81]

என்னும் பாடல் வழி, பச்சை மூங்கிலைத் தின்ன முயலும் யானை அம்மூங்கிலை இரண்டு பக்கத்திலும் மோதுவதைப் போல பகைவன் தலையையும் காலையும் மோதிக் கொண்டு போர்ப்புரியும் மற்போர் முறையினையும், மல்லனை வென்ற வீரத்தினையும் உணர்த்துகின்றது. மேலும்,

"போர் எனின், புகலும் புனை கழல் மறவர்"[82]

என்னும் புறப்பாடல் வழி மறப்பண்புடன் வளர்க்கப்பட்ட இளைஞர்கள் போரென்றால் பூரித்து எழும் இயல்பினராகக் காணமுடிகின்றது.

போரை விரும்பி எதிர்நோக்கும் சிவந்த கண்களை உடைய வீரர்கள் பற்றி கூறும்போது,

"செரு வேட்டு சிலைக்கும் செங்கண் ஆடவர்
வில்இட வீழ்ந்தோர் பதுக்கை"[83]

என்று அகப்பாடல் வழி அறியமுடிகின்றது

போருக்கு விரைந்து வருக என்று தலைவன் சொல்லி அனுப்பியவுடன் விரைந்து வரும் குதிரையை உடைய மறவனைப் பற்றி கூறும் பொழுது,

"பருத்தி வேலிச் சீறூர் மன்னன்
உழுத்ததர் உண்ட ஓய் நடைப் புரவி
கடல் மண்டு தோணியின் படைமுகம் போழ"[84]

என்று புறப்பாடலில் பெருவேந்தர்களின் குதிரைப்படை முன்பு மறவனின் குதிரை எதிர்ச்சென்று போரிடத் துணியும் நிலையைக் குறிப்பிடுகிறது.

போர் இல்லாத நாட்களில் தம்முடைய பூரித்த தோள்களைத் தட்டி ஒருவரொடொருவர் மறப்பண்பு கொண்டு விளங்கியதை,

"உட்பகை ஒருதிறம் பட்டெனு, புட் பகைக்கு
ஏவான் ஆகலின், 'சாவேம் யாம்' என,
நீங்கா மறவர் வீங்கு தோள் புடைப்ப"[85]

என்ற பாடல் வழி பறவையின் தீய சகுனத்தினையும், நேர்மாறாக கொண்டு வெல்லுதலையுடைய மறவன் என்பதை உணர்த்தி நின்றது. உட்பகை காரணமாக மன்னர் வீரரை அழைக்காது போர்க்கு ஆயத்தமாகையில், வீரர் நாம் சாவோம் என்று எதிர் போராட நின்ற நிலையை,

"உறினுயிர் அஞ்சா மறவர் இறைவ
செறிஞ்சீர் குன்றல் இலர்"[86]

என்னும் குறளில் போர் வீரன் மன்னனின் வாய்ச்சொல்லுக்கு காத்திருப்பதை விட செயலில் இறங்க வேகத்துடன் இருக்கும் மறவர்களை எடுத்துக்காட்டுகிறது.

போர் வீரர்கள் பரம்பரை பரம்பரையாக ஒரே தலைவன் குடும்பத்திற்கு போர் புரிந்து காத்த நிலையினை,

"நுந்தை தந்தைக்கு இவன் தந்தை தந்தை
எடுத்து எறி ஞாட்பின் இமையான், தச்சன்
அடுத்து எறி குறட்டின், நின்று மாய்ந்தனனே
மறப் புகழ் நிறைந்த மைந்தினோன் இவனும்
உறைப்புழி ஒலை போல
மறைக்குவன் - பெரும நிற்குறித்து வருவேலே"[87]

என்னும் புறப்பாடலில் தலைவனைத் தாக்க வரும் வேற்படையினின்றும் காக்கும் குடி மறவனை புகழ்ந்து நிற்கின்றது. எனவே சிறந்த வீரனுக்கு கள் கொடுக்கவும் என்று வீரனைச் சிறப்பித்ததனை,

"வீறுவீறு ஆயும் உழவன் போல
பீடுபெறு தொல் குடிப்பாடு பல தாங்கி
மூதலாருள்ளும் காதலின்
தனக்கு முகர்ந்து ஏந்திய பசும்பொன் மண்டை
இவற்கு ஈக"[88]

மேற்கண்ட பாடலில் உழவுக்கு ஏற்ற நல்ல எருதினை தேர்ந்தெடுத்தலைப் போல நல்ல மறவர்கள் பலருள் வீரதோள் பெற்ற வீரன் மேல் கொண்ட அன்பால் கள் தந்து சிறப்பு செய்த வீரனுக்கு முதன்மை அளிக்கப்பட்டதை உணர்த்துகின்றது.

**வீரக் குழந்தைகள்**

சாண் பிள்ளையானாலும் ஆண்பிள்ளை என்றொரு பழமொழி வழக்கில் உண்டு. தந்தையுடன் சென்ற மகனும் போர்க்களத்தில் புற முதுகிடாமல் வீழ்ந்து கிடப்பதைக் கண்ட மறக்குடித் தாய்,

"எறிந்து களம் படுத்த ஏந்துவாள் வலத்தர்
எந்தையொடு கிடந்தோர் எம்புன்தலைப் புதல்வர்"[89]

என்ற வரிகளில் போர்க்களத்தில் தந்தையோடு மகனையும் கண்டு பேருவகை கொண்ட தாயின் நமக்கு 'இத்தகைய வெற்றியும் உண்டோ' என்று மகிழ்ச்சியால் நெகிழ்ந்ததன் வாயிலாக போர்க்களத்தில் புதல்வர்களின் வீரச் செயல்களை கண்டு உவகைக் கொண்டதைக் காணமுடிகின்றது.

இளமைப் பருவத்திலேயே போருக்குச் சென்றதை பாண்டியன் இளஞ்செழியன் வாயிலாக விளக்குகிறது. சதங்கை என்ற அணி குழந்தைப் பருவத்தில் அணிவது வழக்கம். அதனை நீக்கிவிட்டு வீரக்கழலை அணிந்ததை,

"யார்கொல் வாழ்க அவன்கண்ணி தார்பூண்டு
தாலி களைந்தன்றும் இலனே பால்விட்டு
அயினியும் இன்று அயின்றனனே வயின்வின்
உடன்றுமேல் வந்த வம்ப மள்ளரை
வியந்தன்றும் இழிந்தன்றும் இலனே"[90]

என்று புறப்பாடல் இளம்பருவத்தின் வீரச்செயலை எடுத்துக்காட்டுகிறது. மேலும்,

"புலிசேர்ந்து போகிய கல்லளை போல
ஈன்ற வயிறோ இதுவே
தோன்றுவதன் மாதோ போர்க்களத் தானே"[91]

காவற்பெண்டுவிடம், 'நின்மகன் எங்குள்ளான்' என வினவ, அதற்கு போர்க்களத்தில் இருப்பான். அங்கு சென்று காண்க என்று கூறுவதின் வாயிலாக, இளைய சமுதாயத்தினர் எப்பொழுதும் பொறுப்புணர்வை உணர்ந்தவராயப் திகழவேண்டும் என்பதை எடுத்துக்காட்டுகின்றது.

ஒரே ஆண்மகனை அழைத்து வெள்ளாடையை இடையில் உடுத்தித் தலையில் எண்ணெய்த் தடவிச்சீவி, போர்க்களம் நோக்கிச் செல் என்று கையில் வேலினைக் கொடுத்து அனுப்பும் நிகழ்ச்சியானது வீர மகளிரின் தேச உணர்வையும், அதன் பொறுப்புணர்வை இளம்பருவத்தில் உணர்த்தி தெளிவுபடுத்துகின்றது.

கீழே விழுந்தால் அடிபட்டுவிடும் என்று வீட்டில் விளையாடக் கூட விடமாட்டார்கள், இன்றைய பெற்றோர்கள். ஆனால், இங்கு தன் கணவன், தந்தை அடுத்தடுத்த நாட்களில் போரில் ஈடுபட்டு இறந்தனர். அதன்பின்னும் தன் மகனை அனுப்பும் துணிவு காணும்பொழுது, தாயின் கடமை உணர்வு வெளிப்படுகின்றது.

குழந்தைகள் ஒவ்வொரு குடும்பத்தின் ஆணிவேர் என்பர். நல்ல குழந்தைகள் உள்ள குடும்பங்கள் பல ஒன்று சேர்ந்தால்தான் வளமான சமுதாயம் உண்டாக்க முடியும் என்பதை புறச் செய்திகள் வலியுறுத்துகின்றன.

**மகளிர் வீரம்**

ஆற்றலாலும், ஆயுத பலத்தாலும் ஒத்த வலிமையுடையாரோடு போரிடுவதே நற்போர் ஆகும். இதனை,

கல் இழி அருவி வேங்கடம் கிழவோன்
செல்வுழி எழாஅ நல் ஏர் முதியன்
ஆதனுங் கண் போல நீயும்
பசித்த ஒக்கல் பழங்கண் வீட
வீறுசால் நன்கலம் நல்குமதி”[92]

புறப்பாடலில் வேங்கடத்துக்கு உரியவன் பகைவர் புறங்கொடுத்துச் செல்லும் போது, பின் செல்லாத நல்லோர் முறியன் போல புறமுதுகிடாது போர்ப் புரிதலை எடுத்துரைக்கின்றது. மகளிர் வீரப்பண்புடன் விளங்கி உள்ளனர் என்பதை,

"விருந்து எதிர் பெறுகதில் யானே என்னையும்
ஓ.............................. வேந்தனொடு
நாடு தரு விழுப்பகை எய்துக எனவே"[93]

என்ற பாடலில் தன் தலைவன் போர்ச் சென்று வெற்றிப் பெற பகை வேண்டி நிற்பதையும், அவ்வெற்றியின் பயனாக எய்திய பொருளால் விருந்து புறந்தருதல் வாய்க்கப் பெறல் வேண்டும். வீரனுக்காக வைத்த நடுகல்லிடத்து வேண்டி நின்றதின் வாயிலாக வீர உணர்வுகளோடு பண்பாடு உணர்வையும் கண்டுணர முடிகின்றது.

போரில் புறங்கொடாது போரிட்டு வீழ்ந்த தன் மகனின் சிதைந்த உடலைக் கண்டு மகிழ்ந்த தாயின் வீரவுணர்வினை,

"சிறப்புடை யாளன் மாண்புகண் டருளி
வாடுமுலை பூறிச் சுரந்தன
ஓடாப் பூட்கை விடலைத் தாய்க்கே"[94]

எனவரும் பாடல் அடிகள் உணர்த்துகின்றது.

மற்றொரு மறக்குல மங்கை அரசனால் மதிக்கப்பட்ட தன்மகன் நன்றிக்கடனாக இன்னும் தன் உயிரைத் தருவதற்குரிய காலம் வரவில்லையே என்று ஏங்குவதை.

"பலர் மீது நீட்டிய மண்டை என் சிறுவனைக்
கால் கழி கட்டிலில் கிடப்பி
தூவெள் அறுவை போர்ப் பந்தலிலே"[95]

என்ற புறப்பாடலில் மறக்குடித் தாயின் ஏக்கத்தை குறிப்பிடுவது போன்று,

"புரந்தார்கண் நீர்மல்கச் சாகிற்பின் சாக்காடு
இரந்து கோள்தக்கது உடைத்து"[96]

என்ற குறட்பாவில் வேந்தன் பொருட்டும், மண்ணை காக்கும் பொருட்டும் இறப்பை ஏற்றுக் கொள்வது சிறப்புக்குரியது என்பதை விளக்குகிறது.

பழங்கால மக்களின் இன்ப, துன்ப வாழ்க்கை நிலைகளோடு வீர வாழ்வு நிலைகளையும் அறிந்துக்கொள்ள முடிகின்றது. உட்பகையை நீக்குவதற்குரிய அறமும் அறிவும் வழங்கும் சான்றோர்களையும், புறப்பகையைப் போக்குவதற்கு வேண்டிய ஆண்மையும் வலிமையுடைய சான்றோர்களையும் பெற்று பழந்தமிழ் மன்னர்கள் வீரர்களையும், இரவலர்களையும் பேணி வந்த நிலையினை உய்த்துணர முடிகின்றது.

**கலைகள்**

தமிழக நாகரிக வாழ்வியலை உணர்த்தும் காலக் கண்ணாடியாக கலைகள் திகழ்கின்றன. அவை மக்கள் மனத்திற்கு இன்பத்தையும் மனநிறைவையும் அளிப்பதாக அமைவதோடு நாட்டின் இயற்கை வளம், மக்களின் பழக்க வழக்கங்களையும் அறிய முடிகின்றது. 'கலை' என்பது பல்பொருள் ஒருசொல். கல்வி என்னும் சொல்லைப் போலவே 'கல்' என்னும் சொல்லின் அடிப்படையில் தோன்றியதாகும். ஐம்புல உணர்வுகளால் தான் பெற்றவை கொண்டு மனம் ஒன்றைப் படைத்து வெளியிடுகின்ற போது அது கலைப்படைப்பாக மிளிர்கின்றது. ஆகவே கலை என்பது படைப்புத்திறனை உள்ளடக்கிய ஒன்று என்றுக் கூறத்தகும்.

**இசைக்கலை**

இசை, நடனம், நாடகம் இவைகளை உயர் வாழ்க்கைக்குரிய தொழிலாகவும் கருதினர். தான் கற்றக்கலை, அக்கலையால் பெற்ற இன்பம், அவ்வின்பத்தை மற்றவரிடத்தும் கூறி இசைக்கலைகளை உலகறியச் செய்தனர் சங்க இலக்கிய இசைவல்லுநர்கள். என்பதை,

"கூத்தரும் பாணரும் பொருநரும் விறலியும்
ஆற்றிடைக் காட்சி உறழத் தோன்றிப்
பெற்ற பெருவளம் பெறாஅர்க்கு அறிவுறீஇச்
சென்று பயன் எதிர்ச் சொன்ன பக்கமும்"[97]

என்று தொல்காப்பியத்திலிருந்து இசை, நடன கலை ஆக்கத்தினால் தான் பெற்ற வளத்தின் மேன்மை போன்று தன்னைப் போன்ற கலைத்திறன் மிக்கவர்கள் வளம் பெற வேண்டி வழிகாட்டிய முறைமையினையும் கூத்து, பாட்டு, போன்ற இசைக் கலையின் வளர்ச்சி நிலை பற்றியும் அறிய முடிகிறது. சங்ககால மகளிர் இசையில் நுண்ணிய அறிவுடையாராய்த் திகழ்ந்ததை,

"தொல் இசை நிறீஇய உரைசால் பாண்மகன்
எண்ணுமுறை நிறுத்த பண்ணினுள்ளும்"[98]

எனவும், "நல்யாழ் நரம்பிசைத் தன்ன இன்தீங் கிளவி"[99] என்ற வரியில் தலைவியின் குரல் வளத்தினைக் காட்டுகிறது.

யாழ், தண்ணும்மை, துடி, தாம்பு, முரசு, முழவம், சில்லரி, தெண்கிணை, குழல் என்பன போன்ற இசைக்கருவிகள் இலக்கியத்தில் காணப்படுகின்றன. "முழவுசேர் நரம்பின் இம்மென இமிரும்"[100] என்பதால் முழவு ஒலியுடன் யாழ் நரம்பின் ஒலி இணைந்து எழுந்ததை எடுத்துக்காட்டுகிறது.

மண்ணைக் குத்தும் கூரிய கொம்புகள் கொண்ட இரண்டு காளை மாடுகளைச் சண்டையிடச் செய்கின்றனர். அதில் வென்ற காளையின் தோலை மயிர் சீவாது போர்த்தி உறுதியாய்க் கட்டப்பட்டபோர் முரசைச் செய்வர் என்பதை,

"நல்ஏறு இரண்டு உடன்மடுத்து
வென்றதன் பச்சை சீவாது போர்த்த
திண்முரசம்"[101]

மாட்டுத் தோலில், போர் முரசு செய்யப்பட்டதை எடுத்துரைக்கிறது.

சேரன் குடக்கோ நெடுஞ்சேரலாதனும் சோழன் வேற்பல தடக்கைப் பெருவிறற் கிள்ளியும் செய்த போரில் இருவரும் இறந்து விடுகின்றனர். எனவே மயிர்க்கண் முரசம் அடிப்பாரின்மையால் இருந்தும் பயனில்லாது போயின என்பதை,

"வசித்து வினை மாண்ட மயிர்க்கண் முரசம்
பொறுக்குநர் இன்மையின் இருந்து விளிந்தனவே"[102]

என்று புறப்பாடல் முரசு பற்றிய செய்தியினைக் குறிப்பிடுகிறது.

**நாடகக் கலை**

குரவை கூத்து, துணங்கை கூத்து இவற்றில் குரவை கூத்து பின்னாளில் அபிநயம் வைத்து ஆடும் நாடகமாக வளர்ந்திருக்கலாம் என்கின்றனர் சான்றோர்.

"செய்யுள் நாரை ஓய்யும் மகளிர்
இரவும் பகலும் பாசிழை களையார்
குறும்பல் யாணர்க் குரவை அயரும்"[103]

என்று பதிற்றுப்பத்தில் குரவையே கைக்காட்டி ஆடும் வெண்கை விழவு என்றும் மேலும்,

"வெண்கை மகளிர் வெண்குருகு ஓப்பும்
ஆழியா விழவின் இழியாத் திவலின்"[104]

இவையே இன்று பரதநாட்டியமாகத் திகழ்கின்றது. கூத்தரும் பாணரும் கூத்து இசை முதலிய கலைகளை வளர்த்தனர் எனலாம்.

'துணங்கை' என்பது ஒரு வகை கூத்து. இவ் ஆட்டத்தில் இளம் பெண்கள் வளையல்கள் அணிந்து தலைகளில் அழகிய ஆம்பல் மலர்களைச் சூடி ஆட்டத்திற்கான தழையாடைகளை உடுத்தி மக்களின் ரசனைக்கேற்ப துணங்கை ஆடும் நிகழ்வை,

"கலிகெழு துணங்கை ஆடிய மருங்கின்
வளைதலை மூதா ஆம்பல் ஆர்நவும்"[105]

என்பதில் துணங்கை ஆட்டம் ஆடிய பெண்களிடமிருந்து உதிர்ந்த ஆம்பல் மலர்களை, வயது முதிர்ந்த ஆநிரைகள் பொழுது விடிந்ததும் மேயத் தொடங்கிய காட்சியை பதிவு செய்கின்றது.

வெற்றியை கொண்டாடும் நிலையில் மகிழ்ச்சியில் குதித்தாடும் ஆட்டமாகவும், போர்க்களத்தில் இறந்து கிடக்கும் பிணங்களைத் தாண்டிச் சுழன்றும் ஆடப்பட்டதை,

"போலம் பூந் தும்பை பொறி கிளர் தூணிப்
புற்று அடங்கு அரவின் ஒடுங்கிய அம்புளி
-------------------------------------------------
ஆனைய பண்டின் தானை மறவர்"[106]

என்ற வரிகளில் வெற்றிக் களிப்பில் ஓசையை எழுப்பி மகிழ்ச்சியில் துணங்கைக் கூத்து ஆடி இருந்ததை பதிற்றுப்பத்து நமக்கு எடுத்துரைக்கின்றது.

பரிசில் கேட்டு வந்தவர்களுக்கு சோறு விரைவில் அளிக்கும் பொருட்டு, சமையல் செய்ய வருக என ஆடல் வரிசை மகளிரை அழைத்து 'அடுப்புத் தொழில் செய்க!' எனச் சொல்லிய செய்தியினை,

"கூந்தல் விறலியர்! வுழங்கும் அடுப்பே!
பெற்றது உதவுமின், தப்பு இன்று"[107]

என்று பதிற்றுப்பத்துப் பாடலால் உதவிச் செய்தவனுக்கு உதவும் மனப்பான்மையும் சமையல் தொழில் செய்ய அழைப்பதையும் காணமுடிகின்றது.

**ஓவியக்கலை**

ஓவியத்தோடு தொடர்புடைய குறிப்புகள் பல சங்கப் பாடல்களிலே காணப்படுகின்றன. சங்கமருவிய காலம் மற்றும் அதற்குப் பிற்பட்ட காலங்களிலும் ஓவியம் பற்றிய தகவல்கள் இலக்கியங்களில் உள்ளன.

"ஒண்வினை, ஓவியர், கிளவி வல்லோன், வித்தத வினைஞர் எனவரும் இலக்கியத் தொடர்கள் ஓவியங்கள் மற்றும் வரைவோரை குறிப்பிடுகின்றன"[108]

ஓவியம் எழுதுவதற்கு வண்ணங்களைக் குழைத்து வரையப் பயன்படுத்தும் கருவிகளை துகிலிகை, தூரிகை என்றதனை,

"இணர் உறுபு உடைவதன் தலையும் புணர்வினை
ஓவ மாக்கள் ஒள் அரக்கு ஊட்டிய
துகிலிகை அன்ன, துய்த்தலைப் பாதிரி"[109]

என்ற நற்றிணை பாடலில் கலைத்திறம்மிக்க ஓவியர் ஒளிப் பொருந்திய அரக்கினில் தோய்ந்து தூரிகையால் வரைந்தது போன்று பாதிரி மலர்ந்ததை, இயற்கையோடு இயைந்த அளவிற்கு ஓவியக் கலை விளங்கியதைக் குறிப்பிடுகின்றது. ஓவியம் போன்ற அழகு மிக்க இல்லம் என்பதை குறிப்பிடும் வண்ணம் இடம்பெற்றிருப்பதை,

"ஓவத்து அன்ன இடனுடை வரைப்பில்"[110]

"ஓவு கண்டன்ன இல்"[111]

என வரும் அடிகளைக் கொண்டு ஓவியம் பற்றி அறியமுடிகின்றது. மேலும்,

"வல்லோன் ஓவத்து எழுது எழில் போலும் - மாதழந்
திட்டோய் நின் குன்றின் இசை"[112]

என்பதால் திறமை உடையவராலேயே ஓவியம் வரையமுடியும் என்பதை 'வல்லோன் ஓவத்து எழுது' என்பது எடுத்துக்காட்டுகிறது. சுண்ணாம்பு சுதையில் உருவாக்கப்பட்ட வேங்கைப்புலி உருவத்தை மாடமதுரை பெருநகரத் தெருவில் யானை ஒன்று கண்டு அது சிற்பமல்ல, உயிருள்ள புலியே என்று பயந்து பாகனுக்கு அடங்காமல் அலையத் தொடங்கியது. இச்செய்தியினை,

"சென்மன மாலுறுப்பச் சென்றெழின் மாடத்துக்
கையுனை கிளர்வேங்கை காணிய விதிர்ப்புற்றுச்
செய்தொழில் கொள்ளாது மதிசெத்துச் சிதைதர"[113]

என்னும் பரிபாடல் சுதையாலாகிய சிற்பக்கலையின் உயிர்ப்பை எடுத்துக்காட்டுகின்றது. இதனால் கைப்புனைந்து இயற்றும் ஓவியக்கலையின் சிறப்பினை அறியமுடிகின்றது.

**தொகுப்புரை**

புறவாழ்க்கை என்ற முதல் இயலில் அகவாழ்வில் பெறப்படக்கூடிய இன்பத்திற்கு காரணம் புறத்தே நிகழும் புறச்செயல்களே ஆகும் என்பதை எடுத்துக்காட்டுகிறது.

புறநால்கள் மக்களின் வீரம், புலமை அவற்றை வெளிப்படுத்தும் திறனை தெளிவுப்படுத்தி புலவர்கள் பாடியுள்ளதை கண்டறிந்துள்ளது.

அரசனது ஒழுக்கம், கடைப்பிடிக்கப்படும் செங்கோல் ஆட்சிமுறை, பாரம்பரிய ஆட்சி செம்மை போன்றவற்றை புறநால்கள் வாயிலாக ஆராயந்துள்ளது.

அரசரின் கடனாக மக்களின் குடி ஓம்புதல், நீர் வளத்தினை மேம்படுத்தி, துன்பமின்றி செல்வ நிலையில் நாட்டைக் காத்த விதத்தினை எடுத்துக்காட்டியுள்ளது.

வீரம் என்பது அனைவருக்கும் வேண்டும். சங்ககாலத்தில் நாட்டுக்காக பெண் செய்த வீரச் செயல்களை எடுத்துக்காட்டியுள்ளது.

'உழவுக்கும் தொழிலுக்கும் வந்தனை செய்வோம்' என்பது போல உழவுத்தொழிலின் மேன்மையினையும், பிறத் தொழில்களையும் புறப்பாடல்கள் வழி ஆராய்ந்துள்ளது. வாணிபம் செய்த நிலையினையும் அரசு வரிப்பெற்ற முறைப் பற்றியும் அறிந்துகொள்ள முடிகின்றது.

கலைகள் பல உண்டு. மக்களின் நாகரிக பண்பாட்டினை எடுத்துரைக்கும் வகைகளில் அமைந்த கலை நுட்பத்திறன்களை இவ் இரண்டாம் இயல் உரைத்துள்ளது.

அரசர்கள் மட்டுமின்றி உழைக்கும் மக்கள் யாவரும் தான் உழைத்த உழைப்பில் பெற்ற ஊதியத்திலிருந்து தம்மால் இயன்ற பொருளை இரவலருக்கு வழங்கியதையும் கொடைத் தன்மை யாவரும் செயல்படுத்திடும் முறையையும் விளக்கியுள்ளது.

தனி மனித வாழ்வைப் பொது வாழ்வில் மேம்படச் செய்வது புறவாழ்க்கை எனலாம். மனிதனின் வீரம், கொடை, புகழ், தொழில், வணிகம், கலை போன்றவற்றின் சிறப்புகளை பிறருக்கும், உலகத்தார்க்கும் புலப்படுத்தும் விதமாக அமைந்துள்ளது.

# சான்றெண் விளக்கம்

1. முனைவர் கு. இராசரெத்தினம், சங்க இலக்கியத்தில் பொதுமக்கள், ப. 54.
2. கலித். பா. 130:1-2.
3. நா. பாலுசாமி (ப.ஆ), வாழ்வியற்களஞ்சியம், தொகுதி-1, ப. 65.
4. ஆயுத எழுத்து, காலாண்டிதழ், ஜூன் 2013, ப. 102, (திரு.வி.க. மனித வாழ்க்கையும் காந்தியடிகளும், ப.61).
5. கம்பராமாயணம், அயோத்தியா காண்டம், மந்தரை சூழ்ச்சிபடலம், ப. 60.
6. புறம். பா. 186:1-4.
7. தொல்.பொருள்.இளம். உரை. நூ. 74.
8. புறம். பா. 55:10.
9. மேலது., பா. 35:27-29.
10. மேலது., பா. 72:12.
11. கலித். பா. 143:52.
12. பதிற். பா. 59:16.
13. புறம். பா. 312:4.
14. புறம்-10: 11.
15. குறள். 655.
16. புறம். பா. 17:5-8.
17. மேலது., பா. 75:1-3.
18. மேலது., பா. 20:17.

19. மேலது., பா. 42:11.

20. மேலது., பா. 35:14-16.

21. பதிற். பா. 22:1-11.

22. அகம். பா. 231:1-2.

23. மேலது., பா. 93:1-3.

24. புறம். பா. 230:7.

25. மேலது., பா. 65:1-2.

26. மேலது., பா. 20:6.

27. மேலது., பா. 5:5-7.

28. பதிற். பா. 17:1-3.

29. மேலது., பா. 32:15-17.

30. மேலது., பா. 14:3-4.

31. புறம். பா. 9:26-29.

32. மேலது., பா. 20:7-11.

33. மேலது., பா. 18:21-23.

34. மேலது., பா. 27:14-18.

35. குறள். 1031.

36. புறம். பா. 35:32-34.

37. பதிற். பா. 13:23-24.

38. மேலது., பா. 59:10.

39. மேலது., பா. 18:19-20.

40. புறம். பா. 359:9-12.

41. மேலது., பா. 184:5-6.

42. பதிற். பா. 37:10-11.

43. புறம். பா. 366:6-12.

44. மேலது., பா. 185:1-3.

45. மேலது., பா. 60:7-9.

46. புறம். பா. 136:8-9, 13-14.

47. தே.ப. சின்னசாமி, அவ்வையாரின் நீதிநூல்கள், பா.12.

48. மேலது., பா. 3, ப. 36.

49. மணிமேகலை, பா. 25:228-231.

50. புறம். பா. 18:16-20.

51. ஐங்குறு. பா. 5:2.

52. மேலது., பா. 7:2.

53. மேலது., பா. 9:2.

54. பதிற். பா. 24:18-22.

55. மேலது., பா. 55:10-11.

56. மேலது., பா. 54:6-9.

57. குறள். 322.

58. பதிற். பா. 89: 9-13.

59. மேலது., பா. 13:26-28.

60. குறள். 388.

61. ஐங். பா. 8:2.

62. குற. 734.

63. மேலது., 738.

64. மேலது., 231.

65. புறம். பா. 191:4-7.

66. மேலது., பா. 331:6-10.

67. மேலது., பா. 329:7-8.

68. மேலது., பா. 313:7.

69. மேலது., பா. 326:14-15.

70. மேலது., பா. 334:7-11.

71. மேலது., பா. 370:1.

72. மேலது., பா. 164:7,13.

73. மேலது., பா. 208:6-9.

74. புறம். பா. 209:13-14.

75. மேலது., பா. 196:9-10.

76. மேலது., பா. 47:6-11.

77. மேலது., பா. 163:1-4,7.

78. மேலது., பா. 20:13-14.

79. புறம். பா. 8:2-3.

80. பதிற். பா. 31:32-36.

81. புறம். பா. 80:7-9.

82. மேலது., பா. 31:9.

83. அகம். பா. 157:4-5.

84. புறம். பா. 299:1-3.

85. மேலது., பா. 68:11-13.

86. குறள். 778.

87. புறம். பா. 290:3-8.

88. மேலது., பா.289:3-7.

89. மேலது., பா. 19:12-13.

90. மேலது., பா.77:6-10.

91. மேலது., பா. 86:46.

92. மேலது., பா. 389:11-15.

93. மேலது., பா. 306:5-7.

94. மேலது., பா. 295:6-8.

95. மேலது., பா. 289:3-5.

96. குறள். 780.

97. தொல்.பொருள்.புறத். நூ. 30.

98. அகம். பா. 352:14-15.

99. மேலது., பா. 109:2.

100. மேலது., பா. 316:6.

101. புறம். பா. 288:1-4.

102. மேலது., பா. 63:7.

103. பதிற்றுப்பத்து. பா. 73:9-11.

104. மேலது., பா. 29:6-7.

105. மேலது., பா. 13:5, 6.

106. மேலது., பா. 4:1-2, 17.

107. மேலது., பா. 18:6-7.

108. ந.வீ. செயராமன், இலக்கியக்கோவை, ப. 85.

109. நற். பா. 118:68.

110. புறம். பா. 251.

111. நற். பா. 268:1.

112. பரி. பா. 10: 43-48.

113. மேலது., பா. 21:28-29.

## இயல் - 2

# புற நூல்களில் அரசர்களின் மறவாழ்க்கை

**முன்னுரை**

புறப்பொருள் என்பது மக்களின் புறவாழ்க்கையோடு தொடர்புடையது. அறம், பொருள் பற்றிய நெறிகளைக் கூறுவதாகும். அதாவது கல்வி, ஒழுக்கம், அறம், கொடை, வீரம், வெற்றி, ஆட்சிச்சிறப்பு, புகழ், அறிவு, பண்பாடு, பழக்கவழக்கங்கள் ஆகியவை பற்றிய செய்திகளை விளக்கியுரைப்பது புறத்திணை எனக் கூறலாம்.

வீரம் என்பது கல்வி, அஞ்சாமை, ஈகை, மானம் ஆகியவை பற்றித் தோன்றுமேனும் அஞ்சா நெஞ்சுடன் போர்க் களத்தில் காட்டும் ஆண்மையினையே அது சிறப்பாக உணர்த்துகின்றது. தமிழகம் அத்தகைய வீரத்தின் விளைநிலமாக விளங்கியது. இதனால் தமிழ்நாடு அந்நியருக்கு அடிமைப்படாத உரிமை நாடாகத் திகழ்ந்தது. பாரத கண்டத்தின் பெரும்பகுதியை ஆண்ட மாமன்னன் அசோகனும் இங்கு கால் வைக்கத் தயங்கினான். இதற்குக் காரணம் தமிழ்மன்னர்களின் போர்த் திறனையும் தமிழ் மறவர்களின் ஒப்பற்ற வீரத்தை விளக்கும் விதமாக இவ்வியல் அமைகின்றது.

**சங்ககால அரசியல்**

சங்ககாலத்தில் நடைமுறையிலிருந்த அரசியல் முறைமைப் பற்றி சிலப்பதிகாரமும், திருக்குறளும் தெளிவுபடுத்துகின்றது. பத்துப்பாட்டு, எட்டுத்தொகை நூல்களுள் காணப்படும் தமிழர் சால்புக்கும் இவ்விரு நூல்களிற் காணப்படும் தமிழர் சால்புக்கும் உள்ள வேறுபாடு பெரிது என்பதால்தான், நாட்டின் உள்நாட்டு பிரிவுகளைப் பற்றியோ, அரசியல் ஆதிக்கத்தினைப் பற்றியோ

சங்கநூல்களில் செய்திகள் கிடைக்கவில்லை. அந்நூல்களிலிருந்து அக்காலத்து அரசர் பண்புகளைப் பற்றிச் சிறிது அறிந்து கொள்ளலாம். சங்ககால மன்னர், தமது உள்ள அமைதிக்கு ஏற்றவாறு தமது ஆட்சியை நடத்தினர். அறிஞரின் அறிவுரைகளையும் புலவரின் பொன்னுரைகளையும் போற்றி நின்றே ஆட்சி செலுத்தினர். இதற்கு எதிராக மக்கள் கிளர்ந்து எழுந்ததாகச் சங்க நூல்கள் யாங்கணும் இல்லை. "மக்களின் தந்தையாகவே அரசன் கருதப்பட்டதையும், உயிராக அவனே இருந்ததையும் புறநானூறு தெளிவுபடுத்துகின்றது."[1] "புலி தன் குட்டிகளைப் பேணுவதுபோல அரசன் மக்களைப் பேணி நடந்தான்"[2] என்பதையும் காண முடிகிறது.

இத்தகைய பண்புகள் படைத்தவனாய் அரசன் விளங்கியமையால் நோக்கம் எதுவும் சங்ககாலத்தில் தலைகாட்டவில்லை. இதனாலேயே குறுங்கோழியூர் கிழார் இரும்பொறையை, "மன்னுயி ரெல்லா நின்னஞ் சும்மே"[3] என வாழ்த்துகிறார்.

"நீர்நிலைகளையும், இயற்கையையும் போற்றிப் பாதுகாத்த அரசர்களின் சூழலியல் அறிவைப் பல்வேறு புலவர்கள் புறநானூற்றினுள் சிறப்பித்துப் பாடுகின்றதை அறிந்து கொள்ள முடிகின்றது."[4] கோவூர்கிழார், குடபுலவியனார், ஆவூர்மூலங்கிழார் இவர்களது பாடல்கள் இதற்குச் சான்று பகர்கின்றன.

மேலும், அரசன் தன் ஆதரவு தேடிவந்த புலவரைத் தன் அவை குறித்தும் களத்துக்கு வரவேற்று வேண்டிய சிறப்புகளை எல்லாம் செய்தான். அரசர்கள் பிரியும் பொழுது அவர்களுக்குப் பல பரிசில்கள் வழங்கியது குறித்தும், புலவர்கள் தன்னைப் பாடாது விடுதல் இகழ்ச்சியெனக் கருதிய மன்னர்கள் குறித்தும் புறநானூறு தெளிவுபடுத்துகின்றது.

மேலும், அரசர்கள் புலவர்களைப் போற்றுவது என்பதும், நெருங்கிப்பழகுவதும் வடநாட்டு அரசரிடம் காணப்படாதது. தமிழ் மன்னரின் சிறந்த பண்பிற்குரியது. பிசிர் என்னும் சிற்றாரில் வாழ்ந்த வறிய புலவன் பிசிராந்தையாரையே தனது உயிர்த்தோழனாகக் கொண்டதும், தோழமைக்காகப் பிசிராந்தையார் உயிர் துறந்ததும் தான் இதற்குச் சான்று. மேலும், பாரி என்னும் சிற்றரசனும் கபிலர் என்னும் புலவனும் நெருங்கிய நண்பராக வாழ்ந்ததும் மூவேந்தரின் சூழ்சியால் பாரி இறந்தபோது கபிலர் ஆதரிப்பாரில்லாத பாரியின் பெண்மக்களைப் பேணும் நோக்கத்துடன் உயிர் வாழ்ந்திருந்ததும் பாரிக்கும் இவருக்குமிடையே இருந்த நட்பினைத் தெளிவுபடுத்துகின்றது. இவற்றோடு, அதியமான் ஔவையார் நட்பும், சேர நாட்டை ஆண்ட தகடுரெறிந்த பெருஞ்சேரலிரும்பொறை வறுமையால் வருந்திய மோசிகீரனாரும் புலவரோடு கொண்ட அன்பும், குறிப்பிடத்தக்கது.

மேலும், அரசன் தன் முன்னிலையிற் புலவரை இருத்தி அவர்களை அன்போடு பார்ப்பான் என்றும், அவ்வாறு பார்க்கும் பொழுது புலவருடைய எலும்புகள் மெழுகென உருகுமென்றும் பொருநராற்றுப்படையும், அரசருக்கும் புலவர்க்கும் இடையே இருந்த நெருங்கிய தொடர்பு தமிழ் நாட்டு அரசரின் சிறந்த பண்புகளில் ஒன்று என்பதை தெளிவுபடுத்திக் காணப்படுகின்றது.

**வீரனின் சிறப்பு**

“மன்னா உலகத்து மன்னுதல் குறித்தோர்
தம் புகழ் நிறீஇத் தாம் மாய்ந்தனதே”[5]

மனிதனாய்ப் பிறந்த ஆண்மகன் தன் புகழை வீரத்தினால் நிறுவவேண்டும் என்று ஆண் மகனுக்கு இலக்கணம் கூறுவதாய் இப்பாடல் அமைந்துள்ளது. சிறந்த வீரமகன் போரென்று கேட்டால் அதனை விரும்பி ஆரவாரிக்கும் கண்ணை

உடைய வீரத்தமிழனாக இருக்க வேண்டும். (அகம் ஊரிலுள்ள மன்றிக்கண் தாங்கும் முழவினது காற்றெறிந்த தெளிந்த ஓசையைக் கேட்டு, அது போர்ப்பறையென மகிழ்வர். பகைமன்னன் மீது போர் தொடுக்கும் போது கடைபிடிக்கும் அறமாக,

"ஆவும், ஆன் இயற் பார்ப்பன மாக்களும்,
பெண்டிரும், பிணியுடையீரும், பேணித்
தென் புல வாழ்நர்க்கு அருங் கடன் இறுக்கும்
பொன் டபோல் புதல்வர்ப் பெறாஅதரும்
எம் அம்பு கடி விடுதும், நும் அரண் சேர்மின்"[6]

என்னும் பாடலில் அரசன் போரில் ஈடுபடாதவர்களைப் பாதுகாப்பான இடத்திற்குச் செல்லுங்கள் என்று கூறும் மறப்பண்பு உடையவன் என்று பாண்டியன் பல்யாகசாலை முதுகுடும்பிப் பெருவழுதியை நெட்டிமையார் பாடுகிறார்.

உருவத்தைக் கண்டு ஒரு மன்னனை எளிதாக வெற்றி கொள்ள முடியாது என்பதனை,

"ஊர்க் குறுமாக்கள் ஆடக் கலங்கும்
தாள் படுசில் நீர்க் களிறு அட்டு வீழ்க்கும்
ஈர்ப்புடைக் கராஅத்து அன்ன என்னை
நுண்பல் கருமம் நினையாது
இளையன் என்று இகழின் பெறல் அரிது ஆடே"[7]

என்னும் பாடல் வீரர்களே நுமக்கு நாங்கள் அறிவிப்போம். ஊரின்கண் உள்ள இளஞ்சிறுவர்களின் முழங்கால் அளவு நீரில் வாழும் முதலை, யானையைக் கொன்று வீழ்த்திவிடும். அதுபோல எம்மன்னனின் வலிமையும் நுண்ணிய ஆற்றலும் அறியாது இளையன் என்று போர்த்தொடுப்பின் நீங்கள் வெற்றி

பெறுதல் அரிது. ஆகவே உங்களைப் பாதுகாத்துக் கொள்ளுங்கள் என்று அதியமான் நெடுமான் அஞ்சியின் வீரத்தை ஔவையார் பாடுகிறார். இன்னொரு மன்னன்,

"நகுதக்கனரே, நாடு மீக்கூறுநர்
'இளையன்இவன்' என உளையக் கூறி
படுமணி இரட்டும் பாஅடிப் பணைத் தாள்
நெடு நல்யானையும், தேரும் மாவும்,
படை அமை மறவரும், உடையம் பாம் என்று
உறு துப்பு அஞ்சாது, உடல் சினம் செருக்கி
சிறு சொல் சொல்லிய சினம் கெழு வேந்தாரை
அருஞ் சமம் சிதையத் தாக்கி, முரசமொடு
ஒருங்கு அகப்படே என் ஆயின் பொருந்திய
என் நிழல் வாழ்நர் செல்நிழல் காணாது,
'கொடியன் எம்இறை' எனக் கண்ணீர் பரப்பி
குடிபழி தூற்றும் கோலேன் ஆகுக"[8]

என்னும் பாடல் வரிகள் பாண்டியன் நெடுஞ்செழியன் தன்னை மிகவும் இளையவன், இவனுடைய நாட்டை உயர்வாகப் புகழும் புலவர்கள் நகைப்பிற்கு உரியவர்கள் என்று எண்ணி, யானை, தேர், குதிரை போன்ற படைகளைக் கொண்ட மன்னர்கள் என் வலிமைக்கு அஞ்சாது இழிவான மொழிகளைச் சினமுடன் கூறினர். அவர்களைப் போரில் வெல்லுவேன். அவ்வாறு வெல்லவில்லை என்றால் என்னை நம்பி வாழும் மக்களுக்கு நம் அரசன் கொடியவன் என்று எம்மக்கள் கூறும் கூற்றுக்குப் பழி ஆவேன் என்று வஞ்சினம் கூறுகின்றான். இப்பாடல் வரிகள் வஞ்சித்திணையாக வந்துள்ளது. வஞ்சிப்போர் என்பது நாட்டைக் கவர்வதும் காப்பதும் ஆகும். இதனை,

"எஞ்சா மண்நசை வேந்தனை வேந்தன்
அஞ்சுகத் தலைச்சென்று அடல்குறித் தன்று"[9]

என்னும் வரிகள் வேந்தனை மற்றொரு வேந்தன் அஞ்சும்படி படையெடுத்துச் செல்வதாகப் பொருள் தருகின்றது.

போரில் வீரன் ஒருவன் மற்றொரு வீரனைப் பொது நின்று போரிட்டு வெற்றி கொள்வது வெற்றி இல்லை; ஒன்றுக்கு மேற்பட்டவர்களை வென்று வருதல் பெரும் வெற்றி என்று சிறப்பாகப் பாடப்பட்டது. பரணி பாடுதல் போரில் ஆயிரம் யானையை வென்றவனுக்குத்தான் பாடப்படுவதாகப் பாட்டியல் நூல்கள் குறிப்பிடுகின்றது. வெற்றி வாகை சூடிவரும் வாகைத்திணையைத் தொல்காப்பியர் இதனை,

"தாவில் கொள்கைத் தத்தங் கூற்றைப்
பாகுபட மிகுதிப் படுத்தல் என்ப"[10]

பிறரினும் மேம்பட்டு முன்னேறி உயர்வதும் வாகையே என்று குறிப்பிடுகின்றன. இத்துறையைப் பின்பற்றி அரசவாகை என்னும் பாடல்,

"ஒருவனை ஒருவன் அடுதலும், தொலைதலும்
புதுவது அன்றுஇஃது இவ் உலகத்து இயற்கை
..........................................................................
புனை கழல் எழுவர் நலவலம் அடங்க
ஒருதான் ஆகிப் பொழுது, களத்து அடலே"[11]

என்று புறப்பாடல்வழி தலையாலங்கானத்துச் செருவென்ற பாண்டியன் நெடுஞ்செழியன் ஏழு மன்னனைப் போரில் வெற்றி பெற்றதை இப்பாடல் வரிகள் உணர்த்துகின்றன. அவ் ஏழு மன்னர்கள் யார் என்பதை அகநானூற்று 36-ஆவது

பாடலில் சேரன், சோழன், திதியன், எழினி, எருமையூரன், இருங்கோவேண்மான், பொருநன் என்று பெயர்ப் பட்டியலைத் தருகின்றது."[12]

**பாரியினது வீரம்**

பாரியின் மகளை வேண்டி பெண்கேட்டபொழுது பாரி மன்னன் பெண் கொடுக்க மறுக்கின்றான். ஆகையால் மகள் மறுத்தல் என்னும் துறையாகின்றது. மேலும், மகள் வேண்டி தராமல் மறுத்தபோது சேரர், சோழர், பாண்டியர் உள்ளிட்ட மூவேந்தர் பாரியின் பறம்பு நாட்டைச் சுற்றி வளைக்கின்றனர். ஆகையால் இப்பாடலானது நொச்சித்திணையாகிறது. மூவேந்தர்களின் படைகள் பறம்பு நாட்டைச் சுற்றியிருந்த போதும், கபிலர், பாரியின் சிறப்பை,

"சுகிர் புரி நரம்பின் சீறியாழ் பண்ணி
விரை ஒலி கூந்தல் நும் விறலியர் பின்வர
ஆடினர் பாடினர் செலினே
நாடும் குன்றும் ஒருங்கு ஈயும்மே"[13]

என்னும் பாடல்வரிகள் மூவேந்தர்கள் யானை, தேர், குதிரை ஆகிய படைகள் வைத்திருப்பதால் பாரிமன்னன் மீது போரிட்டு அவனை வென்று பறம்பு நாட்டைப் பெறமுடியாது. மாறாக மூவேந்தர்களும் பரிசில் பெற விரும்பி பாடினி, விறலி, பாணர் போன்று வேடமிட்டு பரிசில் பெறுபவர்போல் வந்து பறம்பு நாட்டைப் பெறலாம் என்று பாரியின் வீரத்தைக் குறிப்பிடுகின்றார்.

**வல்வில் ஓரியின் வில்லாற்றல்**

பாணர் தன் சுற்றத்துடன் கொல்லி மலையைச் சார்ந்த சுரத்தே சென்று, வேட்டையாட வந்த வல்வில் ஓரியைப் பாடி பரிசு பெற்று ஓரியின் வில்லாற்றலை,

"வேழம் வீழ்த்த விழுந் தொடைப் பகழி
பேழ் வாய் உழுவையில் பெரும்பிறிது உறீஇ
புழல் தலைப் புகார் கலை உருட்டி, உரல் தலைக்
கேழற் பன்றி வீழ, அயலது
ஆழல் புற்றத்து உடும்பில் செற்றும்
வல்வில் வேட்டம் வலம் படுத்து இருந்தோன்"[14]

மேற்கண்ட பாடலில் ஓரியின் வில் யானையை வீழ்த்தி, புலியின் அகன்ற வாயில் ஊடுருவிச் சென்று, பின் துளை பொருந்திய கொம்பையுடைய கலைமானை வீழ்த்தியது. பின் உரல்போலும் தலையையுடைய கேழலாகிய பன்றியைக் கொன்றது. பின் அதற்குப் பக்கத்தில் உள்ளதாகிய புற்றில் உள்ள உடும்பில் சென்று தைத்தது என்று ஓரியின் வில்லாற்றலைக் குறிப்பிட்டு வலிமையான அம்பு செலுத்தும் வில்லாற்றல் பெற்றதால் ஓரி வல்வில் ஓரி என்னும் சிறப்பினைப் பெற்றான் என்பதனை அறியமுடிகின்றது.

**சிறந்த வீரன்**

சிறந்த வீரனுக்கு என்றும் மதிப்புண்டு. பறம்பு நாட்டுத்தலைவன் பாரி இறந்தவுடன் அவனது பெண்ணை வீரத்தில் சிறந்து விளங்கும் இருங்கோவேனிடம்,

"..................................................................
நாற்பத்தொன்பது வழிமுறை வந்த
வேளிருள் வேளே விறந் போர் அண்ணலே
தார் அணி யானை சேட் இருங்கோவே
ஆண் கடன் உடைமையின் பாண் கடன் ஆற்றிய
ஒலியற் கண்ணிப் புலிகடிமால்
யான் தர, இவரைக் கொண்மதி - வான் கவித்து

இருங்கடல் உடுத்த இவ் வையகத்து அருந்திறல்
பொன்படு மால் வரைக் கிழவ் வென் வேல்
உடலுநர் உட்கும் தானை
கெடல் அருங்குரைய நாடு கிழவோயே”[15]

என்ற பாடல்களில் நாற்பத்தொன்பதாவது தலைமைமுறைகளைக் கொண்ட வேளிர்களுள் ஒருவன்; வெற்றி பொருந்திய போரையுடைய தலைவன்; ஆண் மக்கள் செய்யும் கடமை உணர்ந்து பாணர்களுக்குச் செய்ய வேண்டிய உதவி செய்யும் கொடையாளன்; பொன்விளையும் மலைக்குச் சொந்தக்காரன்; வெற்றிதரும் வேலையையும், பகைவர் அஞ்சும் படையையும் உடைய கேடில்லாத நாட்டிற்குத் தலைவனே நீ பாரிமகளிரைப் பெற்றுக் கொள்வாயாக என்று சிறந்து விளங்கக் கூடிய ஒரு மன்னனுக்குப் பாரிமகளிரை கபிலர் கொடுக்க நினைக்கிறார்.

ஒரு கரந்தை வீரன் வெட்சி மறவர்கள் கவர்ந்து சென்ற ஆநிரைகளை மீட்பதற்கு முன், தன் வீரர்களுக்கு,

"கால மாரியின் அம்பு தைப்பினும்
வயற் கெண்டையின் வேல் பிறழினும்
பொலம் புனை ஓடை அண்ணல்யானை
இலங்கு வால் மருப்பின் நுதி மடுத்து ஊன்றினும்
ஓடல் செல்லாய் பீடுடையாளர்”[16]

எனும் பாடலில் மழை போல் அம்பு உடலில் தைத்தாலும், கெண்டை மீன்கள் போன்ற வேல்கள் வந்து பாயினும், பொன்னால் போர்த்தப்பட்ட பெருமைமிக்க யானை தன் வெண்மையான கூரிய கொம்புகளைக் கொண்டு குத்தினாலும்,

அஞ்சிப்புறம் கொடுத்து ஓடாத ஆண்மை மிக்க மறவர்கள் என்று கூறி தன் படைவீரர்களைப் போருக்கு ஆயப்படுத்துகின்றான்.

ஆண்களுக்குக் குழந்தைப் பருவத்திலேயே அணிவிக்கப்படும் ஜம்படைத்தாலி போன்ற வீரக்குறியீடுகள் வீரத்தை உணர்த்துகின்றது. போர் செய்கின்ற மரபும், உண்மையான வீரமும் தோல்வி கண்டாலும் வீரத்துடன் இருக்கின்ற நிலையும், சங்க இலக்கியங்களில் காணமுடிகின்றது.

**இறை வசூலித்தல்**

குடிகளிடத்தே இறையை வசூலிக்கும் திறத்தைப் பாண்டியன் அறிவுடை நம்பிக்கும் பிசிராந்தையார், எடுத்தோதித் தெருட்டுவாராய்,

"அறிவுடை வேந்தன் நெறியறிந்து கொளினே
கோடி யாத்து நாடுபெரிது நந்தும்
மெல்லியன் கிழவனாகி வைகலும்
வரிசை யறியாக் கல்லென் சுற்றமொடு
பரிவுதப எடுக்கும் பிண்டம் நச்சின்
யானை புக்க புலம் போலத்
தாது முண்ணான் உலகமுங் கெடுமே"[17]

என்கிறார்.

**பிறருக்காக வாழுதல்**

பிறர்க்கென முயலும்போது வாழ்க்கை முயற்சிகள் எந்நிலையிலும் பற்றின்றித், திருவருள் நெறிக்கண் ஆற்றல் கொள்கின்றன. யாண்டும், பிறரை முனிதலும் அருமைக்கு அஞ்சுதலும் செய்வினைக்கு மனங்கவலலும் இல்லாத, எளிமையினிமைகள் எய்துகின்ன. உலகமும் மாட்சியமையடைந்து நிலைபெற்று

வருகின்றது. புறநானூறும் பெரியோர் பிறர்க்கென முயலும் இவ் வாழ்க்கைத் தெளிவை,

"உண்டா லம்ம இவ்வுலம்; இந்திரர்
அமிழ்தம் இயைவ தாயினும் இனிதெனத்
தமியர் உண்டலும் இலரே; முனிவிலர்;
துஞ்சலும் இலர்; பிறர் அஞ்சுவ தஸஞ்சிப்
புகழெனின் உயிரும் கொடுக்குவர்; பழியெனின்
உலகுஉடன் பெறினும் கொள்ளலர்; அயர்வு இலர்;
அன்ன மாட்சி அனைய ராகித்
தமக்கென முயலா நோன்தாள்
பிறர்க்கென முயலுநர் உண்மையானே"[18]

என்னும் பாடலில் மிக அழகாக எடுத்துக் காட்டுகின்றது.

**மன்னர்களின் விருந்தோம்பல் பண்பு**

சங்ககால மன்னர்களிடையே விரும்தோம்பும் பண்பு மிகுந்திருக்கிறது. மக்களுக்காக தன் உயிரைத் தருவதற்குக் கூட அஞ்சாத தன்மை கொண்டவன் அதியமான் அஞ்சி. அதியமான் தனக்கு கிடைத்த கனியை தான் உண்ணாது ஔவைக்குக் கொடுத்து உண்ணுமாறு செய்து நெடுங்காலம் வாழ வாழ்த்தினான். இதன் மூலம் மன்னர்கள் தனக்கென்று எதுவும் வைத்துக் கொள்ளாமல் பிறர்க்கு கொடுத்து உதவும் தன்மையினை அறிந்து கொள்ளலாம். இதனை,

"சிறிய கள் பெறினே எமக்கு ஈயும் மன்னே
பெரிய கள் பெறினே
யாம்பாடத் தாம் மகிழ்ந்து உண்ணும் மன்னே
சிறுசோற்றானும் நன்பல கலத்தல் மன்னே"[19]

என்ற புறநானூற்று வரிகளின் மூலம் அறிந்து கொள்ளமுடிகின்றது.

**மூவேந்தரின் பேராற்றல்**

தமிழகத்தை ஆண்ட முடியுடை மூவேந்தரும் தம் ஒப்புயர்வற்ற வீரச் செயல்களால் உலகப் புகழ் பெற்ற வாழ்ந்தனர். வீரத்தின் திருவுருவங்களாகவே விளங்கினர். வான் வீழ்க்கவனே, மலையகழ்க்குவனே, கடல் தூர்க்குவனே என எதை நினைத்தாலும் முன்னியது முடிக்கும் ஆற்றல் வாய்ந்தவர்களாக அவர்கள் விளங்கினர். செஞ்ஞாயிற்றில் நிலவு வேண்டினும், வெண்டிங்களில் வெயில் வேண்டினும், வேண்டியது விளைக்கும் வீரமுடையவர்களாய்த் திகழ்ந்தனர். அவர்கள் நயந்து நோக்கும் வாய்பொன் பூக்கும். புலந்து நோக்கும் வாய் எரிதவழும். இங்ஙனம் ஈடும் எடுப்பும் அற்ற விளங்கிய அவர்கள் இமய நெற்றியில் வில் புலி கயல் பொறித்து வீறுபெற ஆண்டனர். வீரத்திற்கு விளக்காய் அமைந்த மூவேந்தர்களில் சோழன் கரிகாலனும், பாண்டியன் நெடுஞ்செழியனும், சேரன் செங்குட்டுவனும் சிறப்பாகக் குறிக்கத்தக்கவர்கள். அவர்களில் சேரன் செங்குட்டுவனுடைய வீரத்திருவை பெற்று இருக்கின்றனர்.

**இமயவரம்பன் நெடுஞ்சேரலாதன்**

சேரநாட்டை ஆண்ட பெருவேந்தர்களில் இமயவரம்பன் நெடுஞ்சேரலாதன் என்ற மன்னன் வீரத்திலும், ஈரத்திலும் சிறந்தவனாய் விளங்கினான். நெடுஞ்சேரலாதன் என்பதே அவன் இயற்பெயர். இமயம் வரை வென்று அடக்கி இமயத்தைத் தன் ஆட்சியின் எல்லையாகக் கொண்டு ஆண்ட காரணத்தால் இமயவரம்பன் நெடுஞ்சேரலாதன் என அவன் அழைக்கப்பட்டான். ‘குமரியொடு விடவிமயந்து ஒரு மொழி வைத்து உலகாண்ட சேரலாதன்’ எனச் சிலம்பு ஆசிரியர் இளங்கோவடிகள் இவனைப் புகழ்கின்றார். குமட்டூர் கண்ணனார் எனம் புலவனும் இவனுடைய வீரத்திறனையும், ஈகையையும் வியந்து பாடல்கள் பத்து

பாடியுள்ளார். இப்பத்துப் பாடலுக்குப் பரிசாக 'உம்பற்காடு' எனும் பகுதியைச் சார்ந்த ஐந்நூறு ஊர்களையும், தென்னாட்டு வருவாயில் பாகமும் அளித்து விழுப்புகழ் பெற்றான். பதிற்றுப்பத்தில் இரண்டாம் பத்தாக உள்ள அப்பாடல்கள் இன்றும் அவன் புகழை நிலைநாட்டிக் கொண்டிருக்கின்றன. சேரவேந்தன் சோழர் குடியில் தோன்றிய நற்சோனை என்னும் நங்கையை மணந்து மண்ணவர் மகிழ வாழ்ந்து வந்தான்.

**செங்குட்டுவன் இறைமாட்சி**

செங்குட்டுவன் தந்தையினும் சிறந்த வீரம் உடையவனாய், அரிமா அன்ன ஆற்றல் உடையவனாய் விளங்கினான். அரசர்க்குரிய அருங்கலைகள் பலவும் கற்றுத் தனக்கு ஒப்பாரும் மிக்காருமின்றி இருந்தான். படை, குடி, கூழ், அமைச்சு, நட்பு, அரண் என்னும் ஆறு அங்கங்களும் அவன் ஆட்சியில் சிறந்திருந்தன. அதனால் அவன் அரசர்களுள் ஏறு எனத் திகழ்ந்தான். கொடை, அளி, செங்கோல், குடியோம்பல் என்ற அரசர்க்குரிய அரும்பண்புகள் யாவும் வாய்க்கப் பெற்றமையால் அவன் வேந்தர்களுக்குள் விளக்கமாக விளங்கினான்.

**செங்குட்டுவன் போர்ச் செயல்கள்**

செங்குட்டுவனை நினைத்தவுடன் அவனுடைய வீரமும் போர்த்திறமுமே நம் நினைவிற்கு வரும். அவன் தன் வாழ்நாளில் பெரும்பகுதியைப் போரிலேயே கழித்தான். போர் என்பது அவனுக்கு இன்பப் பொழுதுபோக்கு. அவன் செய்த போர்களில் சோழ, பாண்டியரை அடக்கப் புரிந்த பெரும்போரும், மைத்துனர் சோழனுக்கு உதவி புரிந்த ஒப்பற்ற போரும், பழையனுடன் பொருத போர்ச் செயலும், கடலிற்கலம் செலுத்தி விளைவித்த செஞ்சமரும், இருமுறை வடநாடு சென்று இமயம்வரை வீரப்புகழ் பெற்ற வீரப்போரும் குறிப்பிடத்தக்கன.

**அழியாத வீரச்சின்னம்**

பத்தினித் தெய்வமாகிய கண்ணகியின் உருவச் சிலைக்குரிய கல் கொணரும் பொருட்டுச் செங்குட்டுவன் நிகழ்த்திய போரே அவன் புரிந்த போர்களில் எல்லாம் தலையாயது ஆகும். அவ்வீரப் புகழே செங்குட்டுவனுடைய அழியாத நினைவுச் சின்னமாய் இன்றளவும் விளங்கி வருகின்றது.

**செங்குட்டுவன் உரைத்த வஞ்சினம்**

கனகனும் விசயனும் தமிழ்நாட்டு வேந்தரின் வீரத்தைப் பழித்துரைத்தனர். அவர்கள் 'தமிழ் வேந்தர்கள் இமயத்தில் வில் ஈங்கு இல்லைபோலும்' என்று எள்ளி நகையாடினர். இவ்வுரை கேட்ட செங்குட்டுவன் சீறி எழுந்து 'எம்முன்னோரைப் பழித்தது என்னைப் பழித்ததேயாகும். தமிழ்வேந்தரின் வீரம் எத்தகையது என்பதனைக் கருத்திழந்த கனகனுக்கும் விசயனுக்கும் உணர்த்துவேன். போர்க்களத்தில் அவர்களை வென்று அடிமைப்படுத்துவேன். அவர்கள் முடித்தலையில் பத்தினித் தெய்வத்திற்குரிய கல்லை ஏற்றிக் கொணர்வேன். அங்ஙனமின்றி என் வாய் வறிது மீளுமாகில் நான் கடிமக்களை நடுங்க வைக்கும் கொடுங்கோல் வேந்தனாவேன்' என்று வஞ்சினம் உரைத்தான். உடனே தன் பெரும்படையை வடதிசை அனுப்பினான்.

**மன்னர்களின் சிறப்பு**

பண்டைத் தமிழகத்தில் நல்ல அரசுகள் நிலைபெற்றிருந்தன. அந்த அரசுகளின் தலைவர்கள் மக்கள் நலனையே குறிக்கோளாகக் கொண்டு ஆட்சி நடத்தினர். அவர்கள் பகைவர்க்கு கூற்றுவனாகவும், தம்மை அண்டியவர்களுக்கு அருமைத் தோழர்களாகவும் விளங்கினர். கலைஞர்களுக்கும், புலவர்களுக்கும்

புகலிடமாக இருந்தனர். இம்மன்னர்கள் கலைகளை வளர்ப்பதற்கு உறுதுணையாக விளங்கினர்.

பத்துப்பாட்டில் பாடப்பட்ட மன்னர்கள் சோழன் கரிகாற்பெருவளத்தான், பாண்டியன் நெடுஞ்செழியன், தொண்டைமான் இளந்திரையன், ஓய்மானாட்டு நல்லியக் கோடன், நன்னன் செய் நன்னன் ஆகிய ஐவராவர். இவர்கள் மட்டுமல்லாமல் கடையெழு வள்ளல்கள், மூவேந்தர்கள் பற்றிய செய்திகளும் இப்பத்துப்பாட்டில் இடம் பெற்றிருப்பது நோக்கத்தக்கது.

பொருநராற்றுப்படை, பட்டினப்பாலை இரண்டும் கரிகாற்சோழனைப் பற்றி எடுத்துரைக்கின்றன. மதுரைக்காஞ்சியும், நெடுநல்வாடையும் பாண்டியன் நெடுஞ்செழியனைப் பற்றிய பாட்டுக்களாகும். பெரும்பாணாற்றுப்படை இளந்திரையனைப் பற்றியதாகும். சிறுபாணாற்றுப்படை நன்னனைப் பற்றிய பாட்டாகும்.

**கரிகாற்சோழன்**

சோழன் கரிகால வளவன், கரிகாற் பெருவளத்தான், கரிகாலன் என வேறு பெயர்களிலும் வழங்கப்படுகின்றான். இவன் சோழநாட்டை காவிரிப்பூம்பட்டினத்தைத் தலைநகரமாகக் கொண்டு ஆட்சி செய்தான். தமிழிலக்கியங்களில் இவனைப் பற்றி பல்வேறு வரலாறுகள் காணப்படுகின்றன. இவனுடைய கால் நெருப்பில் பட்டுக் கரிந்து போய்விட்டது. ஆதலால் கரிகாலன் என்று பெயர் பெற்றான் என்பர். சோழமன்னன் சந்ததியற்றுப் போனான். உடனே மக்களும், அமைச்சர்களும் சேர்ந்து அரசனைத் தேடிக் கொண்டுவரப் பட்டத்து யானையை அலங்கரித்து அனுப்பினர். அந்த யானை அரசகுமாரனைப் போன்ற ஒரு சிறுவனைத் தன் முதுகில் தூக்கிக் கொண்டு வந்தது.

அவனையே கரிகாலன் என்று அழைத்தனர். அரியணையேற்றி அரசனாக்கினர். யானையின் வழியே வந்தவன் ஆதலால் கரிகாலன் என்ற பெயரினைப் பெற்றான் என்றும் கூறுவர்.

ஆனால் கரிகாலன் யானையால் கொண்டு வரப்பட்டுப் பட்டம் சூட்டப்பட்டவன் என்ற கதை பொருநராற்றுப்படையால் மறுக்கப்படுகின்றது. இவன் உருவப் பஃறோ இளஞ்சேட்சென்னி என்னும் மன்னனுடைய மகனாவான். தாயின் வயிற்றிலிருந்து பிறக்கும் போதே அரசனாகும் உரிமையுடன் பிறந்தவன். முருகனைப் போன்ற ஆற்றலும், அழகும் உடையவன் என்பதனை,

"உருவப் பஃறோ; இளையோன் சிறுவன்
முருகன் சீற்றத்து உருகெழு குரிசில்
தாய் வயிற்றிலிருந்து தாயம் எய்தி"[20]

எனப் பொருநராற்றுப்படை எடுத்துரைக்கின்றது.

கரிகாற்சோழனை இளமையிலேயே அவனது பகைவராகிய தாயத்தார் சிறையில் இட்டுக் காவலும் வைத்திருந்தனர். அப்போது அம்மன்னன் சிறையிலிருந்து தப்பிப் பகைவரை வென்று பகைவரால் கவரப்பட்ட அரசாட்சியை அடைந்தான் என்ற செய்தியை,

"கொடுவரிக் குருளை கூட்டுள் வளர்ந்தாங்கு
பிறர் பிணியகத்து இருந்து பீடுகாழ் முற்றி
அருங்கரை கவியக் குத்திக் குழிகொன்று
பெருங்கை யானை பிடி புக்காங்கு
நுண்ணிதின் உணர நாடி நண்ணார்
செறிவுடைத் திண் காப்பு ஏறி வான் கழித்து
உரு கெழு தாயம் ஊழின் எய்தி"[21]

என்ற பட்டினப்பாலையின் வரிகள் தெளிவுறுத்துகின்றது.

கரிகாற்சோழன் உலகத்தை ஒரு குடையின் கீழ் வைத்து ஆண்டவன். குடி மக்களின்பால் குறையாத அன்பு கொண்டவன். அறங்கூறும் நூல்களை அறிந்து அம்முறையைப் பின்பற்றி ஆட்சி செய்தவன். பகைவர்களை வெல்லும் வேற்படையை உடைய சிறந்த வீரன் என்பதை,

"ஒரு சூடையான் ஒன்று கூறப்
பேரிதாண்ட பெருங் கேண்மை,
அறனொடு புணர்ந்த திறன் அறிசெங்கொல்
அன்னோன் வாழி, வெல்வேற் குரிசில்"[22]

என முடத்தாமக் கண்ணியார் பொருநராற்றுப்படையில் குறிப்பிடுகின்றார்.

**கரிகாலன் நீதி வழங்கிய முறை**

கரிகாலன் நடுநிலைமை தவறாமல் நீதி வழங்குபவன். ஒருமுறை முதியோர் இருவருக்குள் முரண்பாடு ஏற்பட்டது. அவர்கள் தங்கள் முரண்பாட்டைப் பேசித் தீர்த்துக் கொள்ள முடியவில்லை. கரிகாலனிடம் வழக்குரைத்து நீதி பெறலாம் என்று நினைத்து அவனிடம் அணுகினர். அவன் இளைஞனாயிருப்பதைக் கண்டனர். அவனால் தங்கள் வழக்கை ஆராய்ந்து உண்மை உரைக்க முடியுமா என்று ஐயுற்றனர். அவர்கள் ஐயத்தைக் குறிப்பாலறிந்த கரிகாலன் அவர்களுடைய வழக்கை மற்றொரு வயது முதிர்ந்த அறிஞரிடம் மாற்றுவதாகக் கூறினான். பின்னர் தானே முதியவனைப் போல நரை முடியும் தாடியுமுடையவனாக வந்து உட்கார்ந்து அவர்கள்வழக்கைக் கேட்டு இருவரும் ஒப்புக் கொள்ளும் வண்ணம் நீதி வழங்கினான் என்ற வரலாற்றுக் குறிப்பொன்றை,

"முதியோர் அவை புகுபொழுதில்தம்
பகைமுரண்செலவும்"[23]

எனப் பொருநராற்றுப்படை தெளிவுறுத்துகின்றது.

**கரிகாற் சோழனின் வீரம்**

கரிகாற் சோழன் வெண்ணி என்ற இடத்திலே சேரனையும், பாண்டியனையும் போரிலே தோற்கடித்து வெற்றிமாலை சூடினான் எனக் கரிகாற்சோழனின் வீரத்தை,

"ஆளி நன் மான அணங்கடைக் குருளை
மீளி மொயம்பின் மிகு வலி செருக்கி
முலைக்கோள் விடாஅ மாத்திரை ஜெரேரென
தலைக்கோள் வேட்டம் களிறு அட்டாஅங்கு
இரும்பனம் போந்தைத் தோடும் கருஞ்சினை
அரவாய் வேம்பின் அம்குழைத் தெரியலும்
ஓங்குஇருஞ் சென்னி மேம்பட மிலைந்த
பெரு வேந்தரும் ஒரு களத்தவிய
வெண்ணித்தாக்கிய வெரவரு நோன்தாள்
கண்ணார் கண்ணிக் கரிகால் வளவன்"[24]

என்று பொருநராற்றுப்படை மொழிகிறது.

**வெற்றிச் செயல்கள்**

தான் அரசுரிமை பெற்றதால் மகிழ்ச்சி பெறாதவனாய்த் தன் பகைவரின் அரண்களை இடிக்கும் வன்மை கொண்ட யானைகளோடும், குதிரைகளோடும் சென்று பகைவரை வென்றான். அவர்களுடைய மருத நிலத்தில் இருந்த குடிகளைத் துரத்தினான் என்ற கரிகாலனின் போர்ச் செய்தியை,

"உகிருடைய அடிய ஓங்கு எழில் யானை
வடிமணிப் புரவியொடு வயவர்; வீழ
பெருநல் வானத்துப் பருந்து உலாய் நடப்ப

தூறுஇவர்; துறுகல் போல போர்; வேட்டு
வேறுபல் பூளையொடு உழிஞை சூடி
பேய்க்கண் அன்ன பிளிறு கடி முரசம்
மாக்கண் அகல் அறை அதிர்; வன முரங்க
முனைகெடச் சென்று முன்சமம் முருக்கி”[25]

எனப் பட்டினப்பாலை குறிப்பிடுகிறது.

**பாண்டியன் நெடுஞ்செழியன்**

பாண்டியன் நெடுஞ்செழியனின் சிறப்பினை மதுரைக் காஞ்சி எடுத்துரைக்கின்றது. தலையாலங்கானத்துச் செருவென்ற நெடுஞ்செழியன், நெடுஞ்செழியன், பாண்டியன் நெடுஞ்செழியன் என்ற பெயர்களாலும் இம்மன்னன் குறிக்கப்படுவது நோக்கத்தக்கது. இப்பாண்டியன், யானைக்கட்சேய் மாந்தரஞ் சேரலிரும்பொறை என்ற சேர மன்னனுடன் தலையாலங்கானம் என்ற இடத்திலே போர் செய்தான். அவனை வென்று சிறைப்படுத்தியுமுள்ளான். இதனால் தலையாலங்கானத்துச் செருவென்ற நெடுஞ்செழியன் என்ற பெயர் பெற்றான். சிலப்பதிகாரப் பாண்டிய நெடுஞ்செழியனும் இவனும் ஒருவனே என சிலர்; கருதுவராயினர். ஆனால், சிலப்பதிகாரத்தில் மதுரைக்காஞ்சி பற்றியும் மதுரைக்காஞ்சியில் சிலப்பதிகாரம் பற்றியும் பேசப்படாமையின் அக்கருத்து ஆராயத்தக்கது. அதன் பின்னர், பாண்டியனுக்கு நிலையாமையை எடுத்துரைத்து மதுரையின் சிறப்பினையும் எடுத்துக் கூறி முடிவதாக மதுரைக்காஞ்சி அமைந்துள்ளது நோக்கத்தக்கது.

பாண்டியன் நெடுஞ்செழியன், தமிழ்நாடு முழுவதையும் தனித்தாண்டவன், ஈடுயிணையற்ற வீரன். போர் செய்வதையே பொழுதுபோக்காகக் கொண்டிருந்தவன். நால்வகைப் படைகளையும் நல்ல முறையிலே பெருக்கி வைத்திருந்தான். செல்வச் செருக்கால் உலகப் பொருள்களும், உலக இன்பமும்

அழிந்து விடக்கூடியவை என்பதை மறந்திருந்தான். இவனுடைய உற்ற நண்பர் மற்றும் அவைக்களத் தலைமைப் புலவருமானவர் மாங்குடி மருதனார். உலகத்து நிலையாமையைத் தம் மன்னனுக்கு உணர்த்த எண்ணினார். அவனைப் பார்த்து முதலில் அவன் முன்னோர்களின் அரசியல் நேர்மையை எடுத்துக் காட்டினார். அதன் பின், முன்னோர் முறையிலே தவறாமல் அவன் புரிந்து வரும் அரசியல் சிறப்பையும் பாராட்டினார். அவனுடைய அஞ்சாமை, வீரம், அருஞ்செயல்கள் ஆகியவற்றைப் போற்றினார். இறுதியில் அவனுடைய சிறந்த குணங்களை அவன் சிந்தை மகிழும்படி எடுத்துச் சொன்னார். பாண்டியனின் சிறப்புக் கூறி பின், உன்னைப் போலவே இந்த உலகில் எண்ணற்ற மன்னர்கள் வீரர்களாக, செல்வர்களாக, கொடை மறவர்களாக சிறந்து வாழ்ந்தனர். அவர்கள் தம் எண்ணிக்கை கடலின் குறு மணலினும் பலராவர். புகழ்பட வாழ்ந்த அவர்கள் இறுதியில் போயினர் என்று நிலையாமையை எடுத்துக் காட்டினார்.

**பாண்டியனின் ஆட்சிச் சிறப்பு**

பாண்டியனின் ஆட்சிப் பெருமை கூறும் இந்நூலாசிரியர், பாண்டியநாடு சிறந்திருந்ததை,

"மழைதொழில் உதவ, மாதிரம் கொழுக்கத்
தொடுப்பின் ஆயிரம் வித்தியது விளைய
நிலனும் மரனும் பயன்எளதிர்ப்பு நந்த,
நோயிகந்து நோக்கு விளங்க"[26]

என்ற அடிகளில் சுட்டியுள்ளார். தமிழ் மன்னர்கள் தங்கள் பகைவர்களுடன்தான் போர் செய்வார்கள். தங்கள் பகைவர் நாட்டுக் குடிமக்களுக்கு எவ்வித இன்னலும் இழைக்க மாட்டார்கள்.

**நெடுஞ்செழியனின் போர்ச் சிறப்பு**

பாண்டிய நெடுஞ்செழியனின் போர்ச்சிறப்பை விளக்கப் புகுந்த மாங்குடி மருதனார், 'பகைவர்களின் உள்நாடுகளிலே புகுந்து அவர்களுக்குப் பாதுகாப்பாக உள்ளவைகளை எல்லாம் பிடித்துக் கொண்டு அவ்விடத்தே பல்லாண்டுகள் தங்கியிருப்பாய். அந்நாடுகள் மேன்மையடைய பலசீர்திருத்தங்கள் செய்வாய்' என பின்வரும் பாடல் வரியால் எடுத்துக் கூறியுள்ளார்.

"அகநாடு புக்குஅவர் அருப்பம் வௌவி,
யாண்டுபல கழிய வேண்டுபுலத் திறுத்து
மேம்பட மரிஇய வெல்போர்க் குருசில்"[27]

தமிழ் மன்னர்கள் அழிவை மட்டும் செய்பவர்கள் அல்லர். ஆக்க வேலைகளைச் செய்வதிலும் ஊக்கம் தளர்ந்தவர்களில்லை என்பது வெளிப்படை.

நெடுநல்வாடையின் தலைவனும் பாண்டியன் நெடுஞ்செழியனே ஆவான். நெடுநல்வாடையில் இப்பாண்டியனுடைய பெயர் சுட்டிக்காட்டப்படவில்லை. மதுரை நகரைப் பற்றியும் இந்நெடுநல்வாடையில் வெளிப்படையாகக் கூறப்படவில்லை. அரசனுடைய படைத்தலைவனைக் குறிப்பிடும்போது,

"வேம்பு தலையாத்த நோன்காழ் எஃகமொடு முன்னோன்"[28]

என்று நக்கீரர் நெடுநல்வாடையில் குறிப்பிடுகிறார். படைத்தலைவன் வேப்ப மலர் மாலையை அணிந்திருந்தான் என்பதால் இப்பாடலில் குறிக்கப்படும் அரசன் பாண்டியன் நெடுஞ்செழியனே ஆவான். மேலும் இப்பாடல் இறுதியில், 'வேந்தன் பலரோடு முரணிய பாசறைத் தொழிலே' என்று முடிகின்றது. மன்னர் பலரொடு பகைத்துப் போர் செய்த போர்களத் தொழில் என்பது இத்தொடரின் பொருளாகும்.

பாண்டியன் நெடுஞ்செழியன் பல மன்னர்களைப் போரிலே வெற்றி கொண்டவன். சேரன், சோழன், திதியன், எழினி, எருமையூரன், இருங்கோவேண்மான், பொருநன் என்னும் ஏழு மன்னர்களையும் போரிலே புறமுதுகிட்டோடும்படி செய்தவன். தலையாலங்கானம் என்ற இடத்திலே இந்த எழுவருடன் போர் புரிந்து வெற்றி பெற்றான். இவனால் வெற்றி கொள்ளப்பட்ட எழுவருள் சேர மன்னன் சிறை பிடிக்கப்பட்டான். இச்சேர மன்னன்தான், கோச்சேரமான் யானைக்கட்சேய் மாந்தரஞ்சேரல் இரும்பொறை என்பவன். எனவே இவ்விரு வரிகளைக் கொண்டு நெடுநல்வாடையின் தலைவன் பாண்டியன் நெடுங்செழியன் என்று தெரிந்து கொள்ளமுடிகின்றது.

**தொண்டைமான் இளந்திரையன்**

பெரும்பாணாற்றுப்படையின் பாட்டுடைத் தலைவன் தொண்டைமான் இளந்திரையன் ஆவான். இவன் காஞ்சியைத் தலைநகராகக் கொண்டு ஆண்டான் தொண்டையர் ஆனதால் இவன் ஆண்ட நாட்டிற்குத் தொண்டை நாடு எனப் பெயர் வழங்கப்பட்டது. இம்மரபைச் சார்ந்த அரசர்களைப் பல்லவர் என்றும் கூறுவர்.

திருமால் நிலம் அளந்தவன் இலக்குமியை மார்பில் உடையவன். கடல் போன்ற நிறம் கொண்டவன். அவனுக்குப் பின்னவனாக அக்கடலின் திரைகள் தர வந்த ஒருவன் மரபில் வந்தவனே கச்சி நகர்க் காவலன். அவன் தொண்டையர் வழியில் வந்தவன். திரையன் என்னும் பெயரினை உடைய வேற்படையை உடையவன் என கடியலார் உருத்திரங்கண்ணனார் பெரும்பாணாற்றுப்படையில் இளந்திரையனின் பெருமையை எடுத்துரைக்கின்றார்.

**தொண்டைமான் இளந்திரையனின் ஆட்சிச்சிறப்பு**

தமிழகத்தில் ஆய்குடி, எவ்விகுடி, வேளிர்குடி, என்பது போன்று தொண்டையர் குடி என்பது ஒன்றிருந்திருக்கலாம். தமிழகத்தில் நடந்த மூவேந்தர்களின் ஆட்சியை விட சிறப்பானதாக இம்மன்னனின் ஆட்சி இருந்தது. இவனது ஆட்சி வலம்புரிச் சங்கைப் போன்ற உயர்வு கொண்டது, தூய்மையானது. அவனது செங்கோல் ஆட்சி நிலவியுள்ள நாட்டில் வழிப்போக்கரை அலறுமாறு தாக்கி அவர்தம் பொருள்களைக் கொள்ளை கொண்டு வாழ்வு நடத்துவோர் இல்லை. அந்த அளவிற்கு தொண்டைமான் இளந்திரையனது நாடானது கடமையான காவலை உடையதாக விளங்கியது. அந்நாட்டில் இடியும் இடிக்காது, பாம்புகள் தீங்கிழைக்காது, காடுவாழ் புலியும் தீமை செய்யாது என தொண்டைமான் இளந்திரையனின் ஆட்சிச் சிறப்பினை,

"கைப்பொருள் வௌவும் களவேர்; வாழ்க்கைக்
கொடியோர்; இறைவன் கடியுடை வியன்புலம்
உருமும் உரறாது; அரவும் தப்பா;
காட்டு மாவும் உறுகண் செய்யா"[29]

எனப் பெரும்பாணாற்றுப்டையில் புலவர் காட்சிப்படுத்துகிறார்.

**திரையனின் வீரமும் நீதி வழங்கும் முறையும்**

வெண்மையான கொம்புகளையும் கரிய நிறமும் உடைய யானையின் பிணங்களைக் குருதியாறு இழுத்துச் செல்லுமாறு கொடிய போர் செய்து பாண்டவரைப் போன்று மிகப்பெரிய படையுடன் வேந்தர் ஐவர் இத்திரையனை எதிர்த்தபோது அவர்களை இளந்திரையன் வெற்றி கண்டு புறமுதுகிட்டோடச் செய்தான் என இத்திரையனின் வீரத்தைப் பெரும்பாணாற்றுப்படை குறிப்பிடுவது நோக்கத்தக்கது.

கடல் நிலத்தைப் படைத்தலும் காத்தலும் அழித்தலும் செய்யும். அக்கடலுக்கு நடுவே பகற்பொழுதைச் செய்யும் ஞாயிறு தன் ஒளிக்கதிர்களை விரிப்பதைப் போன்று அருள் உணர்வுடனும், தனது அமைச்சர் குழாத்துடனும் வீற்றிருந்து நடுநிலை தவறாது. மயக்கம் தீர்ந்த அறிவுடன் முறை வேண்டுவோர்க்கு முறை வழங்குபவனாவான். தன்னிடம் குறை வேண்டி வந்தவர்களது குறை தீர்த்து நீதி வழங்கினான் என்று உருத்திரங்கண்ணனார் குறிப்பிடுகின்றார்.

இவன் தன்னை நாடி வந்த பாணர் புலவர் ஆகியோரை அருள் உணர்ச்சியுடன் வரவேற்று அவர்கள் அணிந்துள்ள கந்தை ஆடைகளை அகற்றி பாலாவி போன்ற நல்ல நூலால் ஆன ஆடைகளை வழங்குவான். உயர்ந்த உணவு வகைகளையும், இறைச்சியையும், செந்நெல் சோற்றையும் கண்ட சர்க்கரை கலந்த உணவையும், வெள்ளிக் கலங்களில் படைத்து விருந்தினரை நின்று கொண்டே உபசரிப்பான். மேலும் பாணன் பொற்பூவை அணிந்துகொள்ள அளிப்பான். குதிரைகள் பூட்டிய தேரைத் தருவான் பகைவர் போரில் விட்டுவிட்டுப் போன குதிரைகள், அணிகள் ஆகியவற்றையும் பரிசாகத் தருவான் என்பதைப் பெரும்பாணாற்றுப்படை (465-473 வரிகள்) நன்கு எடுத்துரைக்கின்றது.

**நன்னன் சேய் நன்னனின் மலைநாட்டின் சிறப்பு**

இம்மன்னது மலைநாடான் சவ்வாது மலைத்தொடரைச் சேர்ந்த அடிவாரப் பகுதியில் புன்செய் நிலங்கள் மிகுதியாக உள்ளன. இதனை நவிர மலை என்றும் திரகூல மலை, பர்வத மலை என்றும் குறிப்பிடுவர். அங்கு முசுண்டைக் கொடியில் கார்த்திகை விண்மீன்களைப் போன்று வெண்மையாக மலர்கள் மலரும். அதிகமாக எண்ணெய் மிகும் வண்ணம் எள்ளுச் செடியானது காய்களுடன் வளரும். யானைக் கன்றுகள் தமக்குள் துதிக்கைகளைப் பிணைத்து

விளையாடுவதைப் போல் தினைக் கதிர்கள் பிணைந்து முற்றும். அவரைகள் முற்றிய தயிரினது பிரிர்ச்சி போல் பூக்களை உதிர்த்து அரிவாளைப் போன்று வளைந்த காய்களைப் கொள்ளும். வரகுகள் தர்க்கம் செய்பவன் கையில் இணைந்த விரல்களைப் போன்று இரட்டித்த கதிர்கள் முற்றும். மூங்கில் நெல் அவல் இடிக்கும் பருவத்தை அடையும். நிலத்தை உழாமல் களைக்கொட்டால் பண்படுத்தப்பட்ட நிலத்தில் வெண்சிறு கடுகு நெருங்கி விளையும். இஞ்சிகள் நன்கு முதிர்ந்து வளரும். உறைப்பை நன்கு கொள்ளும் கவலைக் கொடி பெண்யானையின் மடித்த முழந்தாளைப் போன்றுள்ள குழிகளில் செம்மையாய் வளரும் என நன்னன் சேய் நன்னனின் மலை நாட்டில் வளப்பம் மலைபடுகடாமில் சிறப்பிக்கபட்டுள்ளது என்பதை (மலை. 170-182) வரிகள் குறிப்பிடுகின்றது.

**நன்னன் சேய் நன்னனின் கொடைச் சிறப்பு**

நன்னன் எப்போதும் கொடுத்துச் சிவந்த கையினை உடையவன். இவனது கொடைச்சிறப்பினை,

"உயர்ந்த கட்டில் உரும்பில் சுற்றத்து
அகன்ற தாயத்து அஃகிய நுட்பத்து
இலமென மலர்ந்த கையராகித்
தம்பெயர் தம்மொடு கொண்டனர் மாய்ந்தோர்
நெடுவரை இழிதரு நீத்தம்சால் அருவிக்
கடுவரல் கலுழிக் கட்கின் சேயாற்று
வடுவாழ் எக்கர் மணலினும் பலரே
அதனால் புகழோடும் கழிகநம் வரைந்த நாளெனப்
பரந்திடம் கொடுக்கும் விசும்புதோய் உள்ளமொடு"[30]

என்ற வரிகளில் புலவர் பெருங்கௌசிகனார் எடுத்துரைக்கின்றார்.

மலைபடுகடாமில் நன்னன், மான விறல் வேள், செருசெய் முன்பின் குரிசில் திருந்து வேல் அண்ணல், செருமிக்குப் புகலும் திருவார் மார்பன், தேம்பாய் கண்ணித் திண்டேர் நன்னன், வெம்போர்ச் செய்ப பெருவிறல், குன்ற நல்லிசைச் சென்றோர் உம்பல் என்று பலவாறாகப் பாராட்டப்படுவது குறிப்பிடத்தக்கது.

**நன்னனின் வீரம்**

நன்னன் மிகச் சிறந்த வீரன் ஆவான். புலவர்களுக்குப் பொருள் கொடுத்துத் தமிழை வளர்த்தான். தன்னை இகழ்வோரைப் போரிலே வென்று அடிமையாக்குவான். புகழ்வோருக்குத் தன் அரசு முழுவதையும் கொடுத்து விடுவான். அவனுடைய அவைக்களத்திலே சிறந்த கல்வியும் அறிவுமுடைய பலர் குழுமியிருந்தனர். இவ்வாறு நன்னனுடைய நற்பண்புகளை மலைபடுகடாம் எடுத்துரைக்கின்றது. இவனது வீரச்சிறப்பையும், ஒழுக்கச் சிறப்பையும்,

"தொலையா நல்லிசை உலகமொடு நிற்பப்
பலர் புறங்கண்டவர் அருங்கலந்தரிஇப்
புலவோர்க்குச் சுரக்கும் அவன் ஈகைமாரியும்
இகழுநர்ப்பிணிக்கும் ஆற்றலும் புகழுநர்க்கு
அரசுமுழுது கொடுப்பினும் அமராநோக்மொழு
தூத்துளி பொழிந்த பொய்யா வானின்
வியாதுசுரக்கும் அவன்நாள் மகிழ் இருக்கையும்
நல்லோர் குழீஇய நாநவில் அவையத்து
வல்லாராயினும் புறமறைத்துச் சென்றோரைச்
சொல்லிக்காட்டிச் சோர்வின்றி விளக்கி
நல்லிதின் இயக்கும் அவன் சுற்றத்து ஒழுக்கமும்"[31]

என கௌசிகனார், நன்னனுடைய சிறப்பை விளக்குகின்றார். இவ்வரிகள் பழங்காலத்து நிலத்தலைவர்கள் பொதுமக்களிடம் எத்தகைய மதிப்பும் பெற்று வாழ்ந்தனர் என்பதை தெளிவுறுத்துகின்றன.

பத்துப்பாட்டில் இடம்பெறும் நூல்கள் அக்காலத்திய மக்களின் வாழ்க்கையை மட்டும் கூறாது அக்கால மன்னர்களின் ஆட்சிச் சிறப்பு, கொடைத்திறம், வீரம், அவர்களின் பண்பு நலன்கள், விரும்தோம்பும் திறம் ஆகியவற்றையும் எடுத்துரைத்து பழந்தமிழக வரலாற்றினைக் கூறும் வரலாற்றுக் களஞ்சியமாகவும் திகழ்கின்றது.

**கோப் பெருஞ்சோழன்**

"அன்னச் சேவல் அன்னச் சேவல்
ஆடுகொள் வென்றி அடுபோர் அண்ணல்
நாடுதலை அளிக்கும் ஒண்முகம் போலக்
கோடு கூடு மதியம் முகில்நிலா விளங்கும்
மையல் மாலையாம் கையறுபு இனையக்
குமரிஅம் பெருந்துறை அயிரை மாந்தி
வடமலைப் பெயர்குவை ஆயின் இடையது
சோழன்நன் ஸனாட்டுப் படினே கோழி
உயர்நிலை மாடத்துக் குறும்பறை அசைஇ
வாயில்விடாது கோயில் புக்குஎம்
பெருங்கோக் கிள்ளி கேட்க இரும்பிசிர்
ஆந்தை அடியுறை எனினே மாண்டநின்
இன்புறு பேடை அணியத்தன்
அன்புறு நன்கலம் நல்குவன் நினக்கே"[32]

அன்னச்சேவலே அன்னச்சேவலே கொல்லுதலையுடைய வெற்றி பொருந்திய பெருமையுடையவன் தன் நாட்டைக் காக்கும் முகம் போல இரண்டு பக்கத்தும்

வந்து கூடும் முழுமதி விளங்கும் தனித்திருப்பவர்க்கு மயக்கத்தைச் செய்யும் இம்மாலைப் பொழுதில் யாம் செயலற்று வருந்தக் குமரி என்ற ஆற்றில் அயிரை மீனை மேய்ந்து, வடக்கில் உள்ள இமயமலைக்குச் செல்வாயானால், இவ்விரண்டுக்கும் இடையில் உள்ள சோழ நாட்டில் சென்று தங்கினால் உறையூரின் உயர்ந்த மாளிகையில் நின் பேடையுடன் தங்கி வாயில் காவலர்க்குச் சொல்லாது தடையில்லாத அரண்மனைக்குள் புகுந்து, எம் தலைவன் கிள்ளி கேட்கும்படி, 'யான் பெரிய பிசிர் என்ற ஊரில் உள்ள ஆந்தையின் அடியவன்' எனச் சொல். சொல்லின் அவன் நின் பெண் அன்னம் அணிந்து கொள்ள நல்ல அணிகலன்களை அளிப்பான்.

**ஆடுகோட்பாட்டுச் சேரலாதன்**

ஆடுகோட்பாட்டுச் சேரலாதனின் தந்தை நெடுஞ்சேரலாதன் ஆவான். தாய் வேளாவிக் கோமான் பதுமன் மகள் ஆவாள். இவன் செங்குட்டுவனுக்கு இளையவன் ஆவான். பதிற்றுப்பத்து ஆறாம் பத்தில் காக்கைப்பாடினியார் நச்செள்ளையார் என்னும் பெண்பாற்புலவர் இவனைச் சிறப்பித்துப் பாடியுள்ளார். அதற்காக அப்புலவர்களைச் சிறப்பித்து அவன் பரிசில்கள் வழங்கினான். அவர் நகைசெய்து போட்டுக்கொள்ள ஒன்பது காநிறையுள்ள பொன் கொடுத்தான். செலவுக்காக நூறாயிரம் காணம் பணம் கொடுத்தான். அவற்றிற்கு மேலாகத் தன் பக்கத்தில் அமர இருக்கை அளித்து பெருமைப்படுத்தினான் என்பதை (பதிற். 6) குறிப்பிடுகிறது.."[33]

**போர்**

"ஆடுகோட்பாட்டுச் சேரலாதன் தன் முன்னோர் வென்ற நாடுகளையெல்லாம் தானும் வென்றான்."[34] "வேந்தர்களது தார்ப்படையை அழித்து மலைநாட்டைக் கைப்பற்றினான்."[35] "பகைவர்கள் இவனுக்குத் திரை

தந்தபோது அதனை ஏற்றுக்கொண்டு அவர்களை அழிக்காமல் விட்டுவிட்டு மீண்டான்."[36] ஆகிய வரிகள் குறிப்பிடத்தக்கவாக திகழ்கின்றன.

**படைச்செருக்கு**

"இவனது வெற்றிகளுக்கு உறுதுணையாய் அமைந்தவை போர்த் திறமும் இவனது படையின் ஆற்றலுமாகும். நாகப்பாம்பை இடி கொல்வது போலப் பகைவர்களைக் கொல்லும் ஆற்றல் மிக்கவன் இவனாவான்."[37]

"தும்பைப் பூச்சூடித் தேரில் ஏறிவந்து இவனது நாட்டைத் தாக்கிய பகைவரின் தார்பபடையை இவர்கள் போந்தைப் பூச் சூடி எதிர்த்து வென்று கொன்றனர்."[38] "இவனது படைகள் பகைவரின் யானைகளைக் கண்டு நிலை கொள்ளாது பாய்ந்தன"[39] எனும் பாடல் வரிகளில் புலப்படுத்துகின்றன.

**கொடைத்தன்மை**

"தன்னைச் சேர்ந்தாரையெல்லாம் பாதுகாக்கும் கோட்டை அரணாக இவன் விளங்கினான்."[40] "இரவலர்கள் யாரும் இவனை நாடி வராத காலத்தில் இவன்தானே சென்று தேடிப்பிடித்துத் தேரில் ஏற்றிக்கொண்டு வந்த அவர்களுக்குப் பரிசில்கள் நல்கினான்."[41] "இரவலர்களுக்குப் பரிசில் நல்கியதோடு அமையாது அவர்கள் வாழ்ந்த ஊர்களையே வளம் பெருகச் செய்தான்."[42]

**பண்புநலன்**

"இவனது கை இரப்போர்க்குக் கொடுப்பதற்காகக் குவிந்ததேயன்றி எதையும் விரும்பி மலர்ந்ததில்லை."[43] பிறரை விரும்பி அவர்களுக்கு நலம் பயப்பனவற்றைச் செய்யும் நெஞ்சப்பாங்கு உடையவன்.

"நாடல் சான்ற நயனுடைய நெஞ்சின்"[44]

**சிறப்புச் செயல்கள்**

"இவன் ஆடல்கலையில் தேர்ச்சிமிக்கவன். விழாக்காலத்தில் விளக்கொளியில் கோடிய முழவு முழங்க மைந்தரும் மகளிரும் தழுவிக்கொண்டு ஆடும் அணங்கை ஆட்டத்தில் இவனும் தலைக்கை தந்து (தலைமையிடம் கொண்டு) நெளிந்து ஆடினான்."[45] "வெற்றிக்குப்பின் போர்க்களத்தில் ஆடும் துணங்கை ஆட்டத்திலும் ஈடுபட்டுத் தன் மனைவியையும் மறந்து நீண்டநாள் வெளியில் தங்கிவிட்டதும் உண்டு."[46] "இவன் தனது நாட்டைக் குழந்தையைக் காக்கும் தாய்போலக் காத்து வந்தான்."[47] "நன்னடத்தைக்குப் பெருமதிப்பளித்துச் சான்றோர்களைப் பேணி வந்தான்."[48]

**மனைவியர்**

"இவன் மனைவி சிறந்த அறிவுநலம் வாய்க்கப் பெற்றவள்."[49] இவன் "ஆட்டத்தில் ஈடுபட்டுப் பலநாள் வெளியில் தங்கியிருந்தபோது அவனைப் பிரிந்து தனிமையில் இவள் வாழ்ந்து வர நேர்ந்தது. அவன் பல நாள் கழித்து மீண்டும் இவளிடம் வந்தபோது இவள் ஊடினாள்."[50] பிற சேர வேந்தரின் மனைவியைப் போல ஆறிய கற்புடையவள் அல்லல். கணவனை எஊழடமத்திருத்தும் சீரிய கற்பினள் இவளேயன்றி வேறு மனைவியரும் இவனுக்கு இருந்தனர்.

பண்டைத் தமிழகத்தில் மன்னராட்சி நடைபெற்ற காலங்களில் பெருநில வேந்தர்களும், குறுநில மன்னர்களும் மண்ணாசை காரணமாகவோ, பெண்ணாசை காரணமாகவோ தங்களுக்குள் ஒருவரை ஒருவர் எதிர்த்துப் போர் புரிந்து வந்துள்ளனர். அதுபோல வேதாயாதிகள் ஒருவர் நாடாளும் உரிமைக்காகப் போராடிய வரலாறுகளும் தமிழகத்தில் நிகழ்ந்துள்ளன.

அண்ணன் தம்பிகளான சோழன் வந்தபோதிலும் அவ்வப்போது தங்களுக்குள் தொடர்ந்து போர்புரிந்து வந்துள்ளனர். ஆவூரைத் தலைநகராகக் கொண்டு ஆட்சி செய்துவந்த நெடுங்கிள்ளி அண்ணன் நலங்கிள்ளியுடன் நடந்த போரில் தோற்று உறையூரில் தங்குகிறான். அதை அறிந்த நலங்கிள்ளி உறையூரை முற்றுகையிடுகிறான். சோழன் குடியைச் சேர்ந்த இருவரும் தம்முள் பகைகொண்டு மாறிமாறிப் போர் செய்து கொண்டு இருப்பதைக் கண்டு நெஞ்சம் பதைத்த கோவூர்கிழார் என்னும் புலவர், இருவரையும் சந்து செய்யும் பொருட்டுப் பாடியுள்ள ஒரு பாடல் இங்கு நினைவு கூரத்தக்கது.

நலங்கிள்ளி உன்னால் எதிர்க்கப்படுபவன் பனம் பூ மாலையைச் சூடிய சேரனும் அல்லன். வேப்பம்பூ மாலையைச் சூடிய பாண்டியனும் அல்லன். உன்னுடைய மாலையும் ஆத்திப்பூமாலை உன்னோடு போர் செய்பவன் அணிந்துள்ள மாலையும் அத்திப்பூ. மாலையே இருவரில் ஒருவர் தோற்றாலும் தோற்கப்போவது என்னவோ உமது சோழர் குடியே உங்கள் இருவருக்கும் நடைபெறும் போரில் இருவரும் வெற்றி பெறுவது என்பது இயற்கையில் நடக்கக்கூடிய செயலன்று.

அதனால், உம்முடைய செயல் சோழர் குடிக்குத் தகுதியுடைய செயல் அல்ல. நீங்கள் இருவரும் உங்களுக்குள் நிகழ்த்தும் இப்போரைக் கண்ணுறும் உம்மையொத்த அரசர்களுக்கு நகைப்பை உண்டாக்கும். எனவே, உங்களுக்குள் நிகழும் இப்போரை உடனடியாக நிறுத்துங்கள் என்று அறிவுரை கூறும் வகையில் ஒரு பாடலைப் பாடியுள்ளதை,

"இரும்பனை வெண்டோடு மலைந்தோன் அல்லன்
கருஞ்சினை வேம்பின் தெரியலோன் அல்லன்
நின்ன கண்ணியும் ஆர்மிடைந்தன்றே, நின்னொடு

பொருவோன் கண்ணியும் ஆர்மிடைந்தன்றே
ஒருவீர் தோற்பினும் தோற்பது உம் குடியே
இருவீர் வேறல் இயற்கையும் அன்றே - அதனால்
குடிப்பொருளன்று நும் செய்தி கொடித்தேர்
நும் மோரன்ன வேந்தர்க்கு
மெய்ம்மலி உவகை செய்யும் இவ்விகலே”[51]

என்ற பாடல் வழி நமக்கு தெளிவுறுத்துகின்றது.

**மன்னர்களின் வீர உணர்வு**

**இமயவரம்பன் நெடுஞ்சேரலாதனின் வீரம்**

பதிற்றுப்பத்தின் இரண்டாம் பத்தில் குமட்டுர் கண்ணனாரால் பாடப்பெற்ற சிறப்புமிக்கவன் இமயவரம்பன். இவ் அரசரது பெயரே இவனது வீரத்தை, வெற்றியைப் பறைசாற்றுகிறது. தென்னகம் பிறந்தவன் வடதிசை சென்று இமயத்திலே தன் வில்லாகிய இலச்சினையைச் சென்று பொறித்தவன் இமய மலையையே தன் வடஎல்லை வரம்பாகக் கொண்டு ஆட்சி செய்தவன் இமய-வரம்பன் என்பதிலேயே அவனது வெற்றி புலனாகிறது.

இவன் வீரத்தை முதற்பாடலிலேயே அற்புதமாக எடுத்துக் காட்டியுள்ளார் கண்ணனார். இமயனை. கடல் நடுவே கோட்டை கட்டி வாழ்ந்த சூரபத்மனை அழித்த முருகனோடு ஒப்புமை செய்கிறார். இமயவரம்பனும் கடல் நடுவில் கடம்பு தடிந்து வெற்றி கொண்டு களிறு ஊர்ந்து சிறந்தவன். இந்த இரு நிகழ்வுகளை ஒப்புமை செய்கிறார். இந்த இரு நிகழ்வுகளை ஓப்புமைப்படுத்தும் ஆசிரியர் மன்னனை முருகனோடு ஓப்புடைப்படுத்துவதை அவர்தம் வாக்கால் அறிதல் இன்பத்தை நல்கும் என்பதை,

"வரைமருள் புணரி வான்பிசி ருடைய
வளிபாய்ந்து அட்ட துளங்குஈரம் கமம்சூல்
நளியிரும் பரப்பின் மாக்கடல் முன்னி
அணங்குடை அவுணர் ஏமம் புணார்க்கும்
சூருடை முழுமுதல் தடிந்த பேரிசைக்
கடுஞ்சின விறல்வேள் களிறு ஊர்ந் தாங்கு"[52]

என்னும் பாடல் வரிகளில் அறிந்து கொள்ள முடிகின்றது. முருகனை போன்று பகைவர் மார்பை அறுத்து வெற்றி பெற்றவன், கடல் நடுவிலுள்ள பகைவரை வென்று அவர் கடம்பமரத்தை வெட்டி, வெற்றி முரசு செய்து கொண்டவன் வரம்பன் என்று போற்றுகிறார். இறுதியாக,

"ஆசிரியர் துவன்றிய பேரிசை இமயம்
தென்னங் குமரியொ டாயிடை
மன்மீக் கூறுநர் மறந்தபக் கடந்தே"[53]

என்று ஆரியர் ஆட்சி செய்த வடகிழக்கு இமயமலையை எல்லையாகக் கொண்டு, தென்திசையில் குமரியை எல்லையாக கொண்டு ஆண்ட வீரன் இமயவரம்பன் என்பதைக் கண்ணனார் எடுத்தியம்புகிறார்.

**பல்யானை செல்கெழு குட்டுவனின் வீரம்**

வீரபரம்பரையில் பூத்த மற்றொரு வீரமலர் பல்யானை செல்கெழு குட்டுவன்

.

"இமய வரம்பன் தம்பி அமைவர
.......................................................
பல்யானைச் செல்கெழு குட்டுவன்"[54]

என்ற வரிகளின் மூலம் இமயவரம்பனின் வீர தம்பதியாகப் பிறந்த வீரன் பல்யானை செல்கெழு குட்டுவன் எனும் உண்மையினை மூன்றாம் பத்தின் வழியாக உணர்த்துகிறார் பாலைக் கௌதமனார். தமையனை போலவே இவனுடைய வீரத்தை இவன் பெயரே பறைசாற்றுகிறது.

"அமர்கோள் நேரிகழ்ந்து ஆரெயில்
கடக்கும் பெரும்பல்யானைக் குட்டுவன்"[55]

எனும் வரிகள் போர்க்களத்தில் மாற்றார்க்கு அஞ்சாது முன்னின்று போர் உடற்றிப் பகைவர் தம் கொள்ளற்கரிய அரண்களை அழித்து வெற்றி தரும் விறல்மிக்க யானைகள் பலகொண்ட பெரும்படை உடைமையால் இச்சேரன் 'பல்யானை செல்கெழு குட்டுவன்' எனப் போற்றப்பட்ட வீரம் மிக்கவன் என்பதை பறைசாற்றுகிறது. ஐந்நூறு சிற்றார்களைக் கொண்ட சிறு வளமான நாடான உம்பர்காட்டில் அகப்பா என்ற இடத்தில் பேரரண் ஒன்று இருந்தது. மாற்றார்க்குச் சிறந்த அரணாக அது விளங்கியமையை அறிந்தான் குட்டுவன். அகப்பாவிலிருந்து அரிய அரண்கள் பல, நிகரற்ற பலமுடையவனாக இருந்தான். அங்கே இரு திறப்படைகளும் மாறு கொண்டு போரிடுவதற்கு வேண்டிய பெரிய செண்டுவெளி இருந்தது. கணையமரம் செறிக்க பெற்ற நிள்வாயில்கள் இருந்தன. ஐயவித்துலாம் போன்ற அரிய இயந்திரப் படைகள் பல இருந்தன. காவற்காடும் ஆழ்ந்து அகன்ற கிடங்குகளும் ஓங்கி உயர்ந்த மதில்களும் காண்பார் கண்களை மருட்டும் தன்மையனவாய் நின்றன. பகைவர் அணுகுவதற்கு இயலா அருமையும், பெருமையும் பெற்று விளங்கிய அவ்வரணைக் குட்டுவன் செயலைப் பாலைக் கௌதமனார் வியந்து பாராட்டுகிறார்.

"உளைப் பொலிந்த மா
இழைப் பொலிந்த களிறு

வம்புபரந்த தேர்

மர்க்கெதிர்த்த புகன் மறவரொடு

துஞ்சுமரந் துவன்றிய மலரகன் பறந்தலை

ஓங்குநிலை வாயிற் நூங்கு தகைத்த

வில்விசை மாட்டிய விழுச்சி ரையவிக்

கடிமிளைக் குண்டு கிடங்கின்

நெடுமதில் நிரைப்பதணத்து

அண்ணலம் பெருங்கோட் டகப்பா வெறிந்த

பொன்புனை புழிஞைஜ வெல்போர்க் குட்டுவ"[56]

குட்டுவன் அடைந்த இப்பெரு வெற்றியினை அவன் வழிவந்த இளங்கோவடிகளும் தம் காவியத்தில் பொறித்துள்ளார்.

"மிகப்பெருந் தனையோ டிருஞ்செரு வோட்டி

அகப்பா எறிந்த அருந்திறல்"[57]

இக்கூற்றுக்கள் யாவும் குட்டுவனின் வீரத்தை விளம்பி நிற்கின்றது.

**தகரூர் எறிந்த பெருஞ்சேரல் இரும்பொறை**

தகரூர் போரில் பெற்ற வெற்றியால் 'தகரூர் எறிந்த பெருஞ்சேரல் இரும்பொறை' என்று போற்றப்பட்ட இரும்பொறை கல்வி, கேள்வி, கொடை தன்மையிலே சிறந்தவன்.

"கொடை போற்றலையே இரவலர் நடுவண்"[58]

என்று போற்றப்படும் ஈரம் நிறைந்த மனவியல்புடைய சேரன், வீரம் செறிந்தவனாகவும் விளங்கினான். இவனது வீரத்தை பல உவமைகள் கொண்டு விளக்குவர் இவன் வீரத்தையும், பெருமைகளையும் வடித்த எட்டாம் பத்தின் ஆசிரியர் அரிசில் கிழார்.

கொட்டுதல் வல்ல குளவியையும், சிங்கத்தையும், பலி கொண்டே நீங்கும் பேயையும், பனிப்பச் செய்யும் அணங்கையும், பல்லுயிரும் அழியும் ஊழிகாலத்து தீயினையும் இம்மாவீரனுக்கு உவமை கூறியுள்ளார் அரிசில் கிழார். பொறையனின் வீரத்தன்மையை அவனை எதிர்க்கும் பகைவர்களின் நிலையை எடுத்துரைப்பதன் மூலம் காட்டுகிறார் ஆசிரியர்.

குளவி சிறுவரிடத்துப் பகையின்றிக் கூட்டில் தன் இனத்தோடு துஞ்சும். கோமான் இரும்பொறையையும் பிறர்பால் பகையின்றி நாடாள்வான். அறியாமையால் குளவிக் கூட்டைக் கலைத்துவிட்ட சிறுவர், அது கொட்டும் என்று அஞ்சி, மூலைக்கொருவராய்த் தறிகெட்டு ஓடுவர். இரும்பொறையின் வலிமையறியாமல் எதிர்த்துக் கிளம்பிய மன்னரும் ஏற்படவிருக்கும் கேட்டுக்கு அஞ்சி அலமந்து ஓடுவர்.

குளவி கொட்டியபோது உண்டாகும் துன்பம் மிகுதி, கொற்றவன் சேரன் சினந்து எழும்போது விளையும் கேடும் மிகுதியினை,

"கடும்தேறு உறுகிளை மொசிந்தன துஞ்சும்
செழுங்கூடு கிளைத்த இளம்துணை மாகாரின்
அலந்தனர் பெரும நின் உடற்றியோரே"[59]

பேய் மனிதனை விட வலிமையானது. பேயோடு சண்டையிட்டு மனிதன் வெல்லுதல் அரிது. அறிவு, ஆற்றல், படை இவற்றால் மேம்பட்ட சேரனுடன் போரில் வெல்லுதல் பகைவர்க்கு அரிது. தனக்குரிய பலியை மனிதன் தந்துவிட்டால் அவனுயிரைக் கொள்ளாது பேய் செல்லும். பகைவர் திறை தந்து பணிந்தால் அவருயிர் கொள்ளாது சேரன் செல்வான்.

"பலிகொண்டு பெயரும் பாசம் போலத்
திறை கொண்டு பெயர்தி வாழ்கநின் ஊழி"[60]

மனிதரின் உயர்ந்து விளங்குவது அணங்கு, மன்னருள் சிறந்து திகழ்பவன் பொறையன். தெய்வத்தோடு மாறுபட்டு வெல்லுதல் மனிதர்க்கு அரிது. சேரனைப் பகைத்து வெல்லுதல் மன்னருக்கு அரிது. அணங்கினை வணங்குதல் மக்களால் செய்ய இயலும் ஒரே செயல். பொறையனை வழிபடுதலே பகைவரது பிழைக்கும் வழி.

இங்ஙனம் சேரனின் வீரத்தை புலி, பேய், அணங்கோடு ஒப்பிட்டு எடுத்துரைக்கின்றார்.

**சோழன் குளமுற்றத்துத் துஞ்சிய கிள்ளிவளவன்**

"நளிஇரு முந்நீர் ஏணி யாக
வளிஇடை வழங்கா வானம் சூடிய
மண்திணி கிடக்கைத் தண்தமிழ்க் கிழவர்
முரசு முழங்கு தானை வர் உள்ளும்
அரசுஎனப் படுவது நினதே பெரும
அலங்குகதிர்க் கனலி நால்வயின் தோன்றியினும்
இலங்குகதிர் வெள்ளி தென்புலம் படரினும்
அந்தண் காவிரி வந்து கவர்பு ஊட்டத்
தோடுகொள் வேலின் தோற்றம் போல
ஆடுகண் கரும்பின் வெண்பூ நுடங்கும்
நாடு எனப் படுவது நினதே அத்தைஆங்க
நாடுகெழு செல்வத்துப் பீடுகெழு வேந்தே
நினவு கூறுவல் எனவ வேண்மதி
அறம்புரிந் தன்ன செங்கோல் நாட்டத்து

முறைவேண்டு பொழுதில் பெயல்பெற் றோரே
ஞாயிறு சுமந்து கோடுதிரள் கொண்மூ
மாக விசும்பின் நடுவுநின் றாங்குக்
கண்பொர விளங்கும்நின் விண்பொரு வியன்கசுடை
வெயில்மறைக் கொண்டன்றோ அன்றே வருந்திய
குடிமறைப் பதுவே கூர்வேல் வளவ
வெளிற்றுப்பனந் துணியின் வீற்றுவீற்றுக் கிடப்பக்
களிற்றுக்கணம் பொருத கண்ணகன் பறந்தலை
வருபடை தாங்கிப் பெயர்புறத் தார்த்துப்
பொருபடை தரூஉங் கொற்றமும் உழுபடை
ஊன்றுசால் மருங்கின் ஈன்றதன் பயனே
மாரி பொய்ப்பினும் வாரி குன்றினும்
இயற்கை அல்லன செயற்கையில் தோன்றினும்
காவலர் பழிக்கும் இக்கண்ணகன் ஞாலம்
அதுநற்கு அறிந்தனை யாயின் நீயும்
நொதும லாளர் பொதுமொழி கொள்ளாது
பகடுபுறந் தருநர் பாரம் ஓம்பிக்
குடிபுறம் தருகுவை யாயின்நின்
அடிபுறந் தருகுவர் அடங்கா தோரே”[61]

நீர் பொருந்திய பெருங்கடல் எல்லையாய்க் காற்று இடையில் செல்லாத வானத்தால் மூடப்பட்ட மண் செறிந்த உலகத்தில், தமிழ்நாட்டுக்குரியவரான முரசு ஒலிக்கும் படை பொருந்திய மூவேந்தருள்ளும் அரசு என்ற பாராட்டிச் சொல்லப்படுவது நின் அரசே பெரும் கதிரையுடைய கதிரவன் நான்கு திசைகளிலே தோன்றினாலும், விளங்கும் கதிரையுடைய வெள்ளி தென் திசையிலே சென்றாலும் அழகான குளிர்ந்த காவிரியாறு பல கால்வாய்களாக ஓடி

உண்பிக்க, ஒன்றாகத் திரண்ட (வேலின் தோற்றத்தைப் போல அசையும் நாடு என்று கூறப்படுவது உன்னுடைய நாடே ஆகும். அந்நாடு பொருந்திய செல்வத்தையுடைய பெருமையுடைய அரசே நின்னுடைய சில செயல்களைக் கேட்பாயாக் அறக் கடவுள் பொருந்திய ஆராய்ந்தாற் போன்ற செங்கோலால் ஆராய்கின்ற ஆராய்ச்சியையுடைய நீதியைக் கேட்க வேண்டிய காலத்தில் காட்சிக்கு எளியராய் இருந்து கேட்பவர், இங்கு மழை வேவேண்டிய காலத்தில் மழையைப் பெற்றவர் ஆவர். கதிரவனைத் தன் மீது கொண்ட திரண்ட மேகம் வானின் நடுவில் நின்று வெயிலை மறைத்தாற் போல் கண் ஒளியுடன் மாறுபட்டு விளங்கும் நின் வான் அளாவிய வெண் கொற்றக் குடை வெயிலை மறைப்பதற்காகக் கொண்டதோ என்றால் அன்று. அக்குடை வருந்தி வரும் மக்களின் துன்பத்தைப் போக்குவதற்காக உள்ளதாகும். கூரிய வேலையுடைய மன்ன் இளம் பனந்துண்டுகள் போல வெவ்வேறாகக் கிடக்கும்படி யானைக்கூட்டத்தை வென்ற போர்க்களத்தில் வரும் படையை எதிர்த்து நின்று போரிட்டு அது புறம் கொடுத்துச் செல்வதைக் கண்டு ஆரவாரித்து நின் படை தரும் வெற்றி, உழும் கலப்பை நிலத்தில் உழுது ஊன்று சாலிடத்து விளைந்த நெல்லின் பயனாகும். மழை பெய்ய வேண்டிய காலத்தில் பெய்யாது போனாலும், விளைச்சல் குறைந்தாலும், மக்களிடையே இயல்பில்லாதவையான செயற்கை தோன்றினாலும் மன்னரையே உலகம் பழித்துரைக்கும்.

**உலகத்தின் உயிர் மன்னரே**

"நெல்லும் உயிர் அன்றே நீரும் உயிர்அன்றே
மன்னன் உயிர்த்தே மலர்தலை உலகம்
அதனால் யான்உயிர் என்பது அறிகை
வேன்மிகு தானை வேந்தற்குக் கடனே"[62]

என்னும் பாடலில் பரந்த இடத்தையுடைய இந்தவுலகம் மன்னன் என்ற உயிரை உடையது. அதனால், இவ்வுலகத்தவர்க்கு நெல் என்பது உயிர் அன்று; நீரும் உயிர் அன்று. நான் இந்த உலகத்துக்கு உயிர் என்பதை அறிதல், வேல்கள் மிக்க படையையுடைய மன்னனுக்குக் கடமையாகும்.

உயிரைநிலைபெறச் செய்யும் நெல்லும் நீரும் மன்னன் நன்கு ஆட்சி செலுத்தினால் மட்டும் நிலை பெறுகின்ற காரணத்தால் மன்னனை உலகத்துக்கு உயிர் என்றார். "நீரும் நிலனும் புணரியோர் ஈண்டு உயிரும் உடம்பும் படைத்தசினோர்"[63] என்று குடபுலவியனார் உரைத்துள்ளமை இங்கு எண்ணிப் பார்க்கத்தக்கது. உடலும் உயிரும் ஒன்று சேர்ந்த வழியும் உயிருக்கு உயிராக நின்று இயக்குவதே இறையருள். அந்த அருளைப் போல அரசு முறை இன்றியமையாதது. எனவே, உலகத்தை நடத்தும் தானே உலகத்திற்கு உயிர் ஆவதை அறிந்து, மன்னன் நடந்துகொள்ள வேண்டும் என்பதாம்.

**<u>சிறந்த நாடு</u>**

"நாடா கொன்றோ காடா கொன்றோ
அவலா கொன்றோ மிசையா கொன்றோ
எவ்வழி நல்லவர் ஆடவர்
அவ்வழி நல்லை வாழிய நிலனே"[64]

நிலமே நீ ஒன்றில் நாடே ஆகுக. அதுவன்றி ஒன்றில் காடே ஆகுக. ஒன்றில் பள்ளமே ஆகுக அதுவன்றி ஒன்றில் மேடே ஆகுக. அஃது எவ்வாறாயினும் எவ்விடத்தில் ஆண் மக்கள் நல்லவரோ, அவ்விடத்தில் நீயும் நல்லை அதுவன்றி நினக்கு என ஒரு நலமம் உடையை அல்லை நீ வாழ்க் இதனால் நிலத்தின் இயலை விளக்கியுள்ளார். தீய நிலமாக இருந்தாலும் நல்லவர் வாழின் நல்ல நிலமாகும்; நல்ல நிலமாயினும் தீயவர் வாழ்ந்தால் தீது என்பது கருத்து.

**வள்ளம்மை - பிட்டங்கொற்றன்**

வடமவண்ணக்கன் தாமோதரனார் ஒருகால் இப்புலவர் பிட்டங் கொற்றனிடம் பரிசில் பெற்றார். அவர் தாம் பெற்ற அவ்வின்பத்தைப் பாணன் ஒருவன் தன் உறவினர்க்கு உரைப்பது போல விளக்கியுள்ளதை,

"ஏற்றுக உலையே ஆக்குக சோறே
கள்ளும் குறைபடல் ஓம்புக ஒள்ளிழைப்
பாடுவல் விறலியர் கோதையும் புனைக
அன்னவை பிறவும் செய்க என்னதூஉம்
பரியல் வேண்டா வருபதம் நாடி
ஐவனங் காவல் பெய்த நந்தின்
ஒளிதிகழ் திருந்துமணி நளியிருள் அகற்றும்
வன்புல நாடன் வயமான் பிட்டன்
ஆரமர் கடக்கும் 6வலும் அவன்இறை
மாவள் ஈகைக் கோதையும்
மாறுகொள் மன்னரும் வாழியர் நெடிதே"[65]

ஐவன நெல்லைக் காப்பவர் காவலுக்கு இட்ட தீ அங்கு அழிந்த போது, ஒளி விளங்கும் மாணிக்கம் இருளை விலக்கும். வலிய நிலமான மலை நாடன் பிட்டங்கொற்றன். அவன் வலிய குதிரையை உடையவன். அவனுடைய போரை வெல்லும் வேலும், அவனுடைய தலைவனான பெரிய வல்லமையுடைய சேரமான் கோதை என்பானும், அவனுடன் பகை கொண்ட மன்னரும் நீண்ட காலம் வாழ்க என வாழ்த்துவதே நாம் செய்ய வேவேண்டுவது. இனிமேல் உணவு எவ்வாறு கிடைக்கும் என்று நீங்கள் வருந்த வேண்டா. எனவே, உலை வைக்க சோறாக்குக. மதுரை நிரம்ப உண்டாக்குக. விளங்கம் அணிகளை அணிந்த பாடுவதில் வல்ல விறலியரே மாலையைச் சூடுக. அத்தகைய பிற செயல்களையும் செய்க என

பாணன் உரைத்தான். பிட்டங் கொற்றனையும் அவனுடைய தலைவனையும் தலைவனின் பகைவரையும் வாழ்க என வாழ்த்துவதே நாம் செய்ய வேண்டியது. பிட்டங் கொற்றன் நமக்கு வேண்டியவற்றை அளிப்பான். ஆதலால் நாளை உணவு பற்றிக் கவலை கொள்ள வண்டா என்று பாணன் உரைத்ததாகப் பாடல் அமைந்துள்ளது. சேரமானின் பகைவர் வாழ வேண்டும் என வாழ்த்துவதன் கருத்து, அவர்கள் இருந்தால்தான் திறைப் பொருளைப் பெற முடியும் என்பதாம்.

**அதியமான் நெடுமான் அஞ்சி**

தமிழகத்தில் அன்று ஏழு வள்ளல்கள் என எண்ணி மக்களால் போற்றப்பட்டவர்களில் ஒருவன் அதியமான் நெடுமான் அஞ்சி ஆவான். பனம்பூ மாலையை தனக்கு அடையாள மாலையாக உடைய அதியர் குடிலில் பிறந்தவன். பெயருக்கேற்றபடி நெடிய தோற்றமும், அகன்ற மார்பும், தாள் தொடு தடக்கையும், உடல்வலிமையும் உடையவன். அதியமான் அஞ்சி போர் விருப்பமும், எளியவர்க்கு உதவும் தன்மையும், தன்னிடம் இருப்பதையெல்லாம் மற்றவர்களுக்கு வாரி வழங்கும் கொடைத் தன்மையும் உடையவன்.

**அதியமான் நெடுமான் அஞ்சியின் ஆட்சி சிறப்பு**

மக்களுக்காக வாரி வழங்கும் பண்பினை உடையவன். அஞ்சி பொதுவாக இருக்கும்போது தண்ணீர் ஓடுவதுபோல் இனிமையான சாயல் உடையவன். போரென்று புறப்பட்டு விட்டால் காட்டுத்தி சீற்றத்தோடு கனைத்துக்கொண்டு காடு முழுவதும் பரவுவது போல பகைவர்களை அழித்து ஒழிக்கும் ஆற்றலினை உடையவன். அக்காலத்தில் வீட்டின் முன் தீக்கடை கோல் செருகியிருக்கும். அப்போது அதன் ஆற்றலை யாராலும் உணரமுடியாது. அதே தீக்கடை கோல் உரசினால் சத்தமிட்டுக் கொண்டு நெருப்புப் பொறிகளை வெளியிடும். அத்தகைய தீக்கடைக் கோலை அதியமானுக்கு உவமையாகக் காட்டியுள்ளார். இதனை,

"இல்லிறைச் செரிஇய ஜெலிகோல் போலத்
தோன்றா திருக்கவும் வல்லன் மற்றதன்
கான்றுபடு கனைஎரி போலத்
தோன்றவும் வல்லன் நான் தோன்றுங்காலே"[66]

என்ற புறநானூற்று வரிகளின் மூலம் அறிந்து கொள்ளப்படுகின்றது.

**அதியமானின் வீரச்சிறப்பு**

அதியமான் குறுநில மன்னர்களுடன் போரிட்ட செய்தியினை ஔவை புகழ்ந்து பாடுகிறார். மலையமான் திருமுடிக்காரியுடன் போரிட்ட போது நிகழ்ந்த நிகழ்ச்சிகளைப் பாடுகிறார். போர்க்களத்தில் இருந்த அதியமான் தனக்கு குழந்தை பிறந்திருக்கிறது என்பதைக் கேள்விப்பட்டதும் போர்க்கோலத்துடன் நேர குழந்தையைக் காணச் சென்றான். போர்க் கோலத்துடன் குழந்தையைப் பார்த்தால் குழந்தையும் வீரம்மிகுந்ததாகக் காணப்படும் என்ற நம்பிக்கை சங்ககால மன்னர்களிடையே இருந்துள்ளது. இதனை,

"கையது வேலே... காலில் வீரக்கழல்
மெய்யெல்லாம் வியர்வை... கழுத்தில் புதிதாய்க் காலம்
பனையின் வெண்பூ மாலையோடு
வெட்சியும் வேங்கையும் பொலியச் சூடி
புலியோடு போரிட்ட பெரு யானை போல
இன்னும் மாறாத சினத்துடன் வருகிறான்"[67]

என்ற வரிகளின் மூலம் அறியமுடிகின்றது.

**போருக்காகப் புலவரை தூது அனுப்புதல்**

அதியமான் அஞ்சி ஔவையாரை தொண்டைமானிடம் தூது அனுப்பினான். குறுநில மன்னர்களாகிய தமக்குள் பகை அதிகரிக்காமல் இருப்பதற்காக அதியமான் அஞ்சி ஔவையாரைத் தொண்டைமானிடம் தூது

அனுப்பினான். தொண்டைமானிடம் இருந்த படைக்கருவிகளைக் கண்டு ஔவை அதியமானின் படைக்கருவிகளைப் பற்றிக் கூறினாள். தொண்டைமானின் படைக்கருவிகள் புதியதாக காணப்பட்டன. இதனை ஔவையார்,

வேறென்ன, இதோ பார்... இங்கே உன் கருவிகளுக்குப் பீலி அணிவித்து மாலை சூட்டி வலிய காம்புகளைத் திருத்திக் காவல் மிகுந்த இவ்விடத்தில் எத்தனை அழகாக வைத்திருக்கிறாய். உன் கருவிகளைக் கண்ணில் ஒற்றிக் கொள்ளலாம் போல் இருக்கிறது... என்பதனை,

"இவ் வே
பீலி அணிந்து மாலை சூட்டிக்
கண்திரள் நோன்காழ் திருத்திநெய் யணிது
கடியுடைவியன கரவ்வே
அவ்வே
பகைவர்க்குத்திக் கோடுநுதி சிதைந்து"[68]

என்ற புறநானூற்று வரிகளின் மூலம் விளக்கியுள்ளார்.

**அதியமானின் படை பற்றிக் கூறல்**

தொண்டைமானின் படைக்கருவிகளைப் பார்த்துவிட்டு ஔவை தன் மன்னனான அதியமான் அஞ்சியின் படைக்கருவிகளை இழித்துக் கூறுவதுபோல் உயர்வாகக் கூறினாள். அதனைக்கேட்ட தொண்டைமான் அதியமானுடன் போர்புரிய மறுத்து விட்டான். தன்னிடம் உள்ள படைக்கலன்களைவிட அதியமானின் படைக்கருவிகளைப் பற்றி ஔவை கூறக்கேட்ட அதியமானின் வீரத்தினைப் புரிந்து கொண்டான். இதனை, 'பகைவரைக் குத்துதலால் கங்கும் நுனியும் முறிந்துவிட்டன. எப்பொழுதும் கொல்லுப்பட்டறையில் ஒக்கிடப்படுவதற்காகவே கிடக்கின்றன. சொல், உன் ஈட்டி எவ்வளவு பளபளப்பு.

ஆனால் அவன் ஈட்டி எப்பொழுதும் எதிரிகளைக் குத்திக்குத்திக் கறையுடன் காணப்படுகின்றன' என்று கூறுவதை காணமுடிகின்றது.

**நாஞ்சில் வள்ளுவன் புகழ் பாடுதல்**

ஔவையார் நாஞ்சில் வள்ளுவனின் கொடைத் தன்மையை சிறப்பித்துப் பாடுகிறார். பாணர்களைப் போற்றல், குடிகளை ஓம்புவது. பகுத்துண்டு பல்லுயிர் ஓம்புவது. இனமக்களுக்கு எளியரால் இருப்பது ஆகியவை சங்ககால அரசியல் சட்டத்தின் இயல்புகளாகும். நாஞ்சில் வள்ளுவன் யானை அரிசி கொடுத்ததை,

"இருங்கடறு வளைஇய குன்றத் தன்னதோர்
பெருங்களிறு நல்கி யோனே யன்னதோர்
தேற்றா ஈகையும் உளதுகொல்
போற்றா ரம்ம பெரியோர்தங் கடனே"[69]

என்ற பாடலில் காணமுடிகின்றது. மன்னர்களிடையே தம்மைப் புகழ்ந்து பாடும் புலவர்களுக்குப் பொன்னும் பொருளும் கொடுத்து உதவியதை அறிந்து கொள்ள முடிகிறது.

**போர்க்கருவிகள்**

தமிழர் தொல்காப்பிய காலந்தொட்டே போர்க்கருவிகளைக் கையாள்வதுலும், அவற்றை வடிவமைத்துக் கொள்வதிலும் பழக்கமுடையவராக இருந்துள்ளனர். மேலும் தமிழர்களின் எயில்போர் மிகச் சிறப்பு வாய்ந்ததாக இருந்துள்ளது. எயிலிடத்து பல கருவிகளை அவர்கள் பரப்பிப் போர் செய்துள்ளனர். தமிழர் பயன்படுத்திய மரபுசார் போர்க்கருவிகளை இரண்டு வகைகளாக பகுத்துக் கொள்ள இயலும். அவை 1. இயல்புப் போரில் பயன்படுத்தப் பெறும் வாள், வேல், வில் ஆகிய முற்போர்க்கருவிகள், 2. எயிற்போர்க்கருவிகள்

என்பனவாகும். இவற்றுள் இயல்புப்போர் என்பது மட்டும் இங்கு எடுத்துக் கொள்ளப் பெற்று விளக்கப்படுகிறது.

மன்னர்களும் அவர்களின் போர்க்கருவிகளும் மன்னன் வழித்தே மலர்தலை உலகம் என்ற அற்றை மொழிக்கு ஏற்ப மன்னர்தம் வழித்ததாக அற்றைத் தமிழக மக்கள் செயல்பட்ட வியூகம், அவர்களின் பாதுகாப்பு கருதி மன்னர்கள் போர்ப்படைகளை வைத்திருந்தனர். நால்வகைப்படைகள் மன்னர்களால் அமைக்கப் பெற்றிருந்தன. இம்மன்னர்கள் பொன், பொருள், நிலம், பாதுகாப்பு முதலானவற்றில் ஏதேனும் ஒரு காரணம் பற்றிப் போர் தொடங்குகையில் ஊர்க்கு, வீட்டிற்கு இத்தனைபேர் என்ற நிலையில் ஆண்கள் போரில் கலந்து கொண்டனர்.

"படையும் கொடியும் குடையும் முரசும், நடைநவில் புரவியும் களிறும் தேறும், தாரும் முடியும் நேர்வன பிறவும் தெரிவுகொள் செங்கோல் அரசர்க்குரிய"[70] என்ற நூற்பாவின்வழி மன்னர்க்குரிய புறவடையாளங்கள் பெறப்படுகின்றன. இவற்றுள் படை முன்னணியில் முதலாவதாக உள்ளது, அதனுடன் களிறு, தேர், நடைநவில்புரவி ஆகியன இணைய நாற்படை கொண்டிருத்தல் அரசரின் இலக்கணமாகிறது. கொடி, குடை, முரசு, தார், முடி, செங்கோல் முதலியன மன்னர்க்குரிய மற்ற அடையாளச் சின்னங்களாகும். இவற்றுள் குடை, முரசு ஆகியன போர்க்கருவிகளாகவும் கொள்ளத் தக்கனவாகும்.

எனவே நாற்படை உடைய அரசன் அடிப்படைகளைப் பெருக்கி, மக்களை அமைதியாகவும் பாதுகாப்பாகவும் வாழ வழி செய்ய வேண்டிய கட்டுப்பாடு உடையவனாக விளங்க வேண்டும் என்பது தொல்காப்பியர் காலத்திலேயே மன்னர்க்குரிய முறையாக இருந்தது என்பது தெரிய வருகிறது.

இந்நால்வகைப் படைகளை மன்னர்கள் பெற்றிருந்தமையைச் சங்க இலக்கியக் குறிப்புகளும் காட்டுகின்றன. "நெடுநல்யானையும் தேரும் மாவும் படையமை மறவரும் உடையம் யாம் என்று வினை நவின்ற போர்யானை சினம் சிறந்த களன் உழக்கவும் மா எடுத்த மலிகுரூத்துள் அகல்வானத்து வெயில் கரப்பவும் வாம்கரிய கருந்திண்தேர் காற்று என்னக் கடிது கொட்பவும் வாள்மிகு மறமைந்தாதோள் முறையான் வீறுமுற்றதாம்"[71] என்பன மன்னன் நால்வகைப் படையைப் பெற்றிருந்தமையைக் காட்டும் சங்க இலக்கியச் சான்றுகளாகும்.

மன்னர் பின்னோராக விளங்கும் ஏனைய மக்கள் "வில்லும் வேலும் கழலும் கண்ணியும் தாரும் மாலையும் தேரும் மாவும் மன்பெறு மரபின் ஏனோர்க்கும் உரிய"[72] என்ற நூற்பாவின்படி வில், வேல், கழல், கண்ணி, தார், மாலை, தேர், குதிரை ஆகியன கொண்டு போர் புரிய, வாழ இலக்கணம் பெற்றுள்ளனர். நூற்பாவை கூர்ந்து நோக்கினால் தேர், குதிரை ஏறிப்போர் புரியும் ஏனோர் வில், வேல் ஆகியன கொண்டு போர் புரிவர் என்பது தெரியக் கிடைக்கும்.

இவ்வகையில் போர்க் கருவிகளில் முக்கிய இடம் வகிக்கும் வாள், வில், வேல் முதலியன குறித்த சிறப்புச் செய்திகள் பல தமிழிலக்கியங்கள் வாயிலாக கிடைக்கின்றன.

**தமிழரின் முற்போர்க்கருவிகள்**

தொல்காப்பிய காலம் முதலாக தமிழர் மூன்று போர்க்கருவிகளை முதன்மையானதாகக் கையாண்டு வந்துள்ளனர். அவை வாள், வில், வல் என்பனவாகும். "வில்லும் வேலும் வாளுமே இவரது முந்திய ஆயுதங்கள்"[73] என்ற குறிப்பும் இக்கருத்தினை அரண் செய்யும். இவற்றுள் வாள் என்னும் போர்க்கருவி நெருங்கி நின்று போர் செய்கையில் பயன்படுத்தப்படுவதாக இருந்துள்ளது. வில்லும் வேலும் பகைவரை தூரத்தில் இருந்து தாக்கப் பயன்பட்டுள்ளது.

இம்முப்போர்க்கருவிகள் பற்றிய பல குறிப்புகள் தொல்காப்பியத்திலும், சங்க இலக்கியங்களிலும், அவற்றைத் தொடர்ந்து இலக்கியங்களிலும் காணப்படுகின்றன.

இம்முதன்மைக் கருவிகள் தவிர வேறு சில கருவிகளும் தமிழர்களால் பயன்படுத்தப்பட்டுள்ளன. "அடார், அரம், அரிவாள், ஆயுதக்கொம்பு, எஃகூ, கண்ணாடி தைத்த கேடகம், கணிச்சிப்படை, கலப்பை, கழிப்பிணிப் பலகை, காலெஃகம், கிளிகடிகருவி, குந்தாலி, குறடு, கேடகம், கோடாலி, சக்கரம், சிறியிலை எஃகம், சேறுகுத்தி, தறிகை, துடுப்பு, நவியம், படைவாள், பூண்கட்டிய தண்டு, மழு, வாள், வில், வேலுறை" ஆகிய கருவிகளையும் தமிழர் பயன்படுத்தியதாக புறநானூற்று (பக். 23-24) முன்னுரையில் உ.வே.சாமிநாதையர் குறிப்பிடுகின்றார்.

மேலும் போர்க்கருவிகள் தம்மை ஊறு செய்யாவண்ணம் காக்க 'கரடித்தோலாற் செய்யப்பட்ட', "புலித்தோலாற் செய்யப்பட்ட கேடயமென்னும் கருவிகளை பயன்படுத்தியதாக கந்தையாப்பிள்ளை குறிப்பிடுகின்றார்."[74]

**வாள்**

தொல்காப்பியத்தில் 'வாளோர் ஆடும் அமலை', 'ஒள்வாள் வீசிய நாழில்', 'ஸவாள்மங்கலம்' ஆகிய இடங்களில் வாள் என்னும் சொல் போர்க்கருவியாக கருதுமளவிற்கு எடுத்தாளப்பட்டுள்ளது. சங்கப் பாடல்களிலும் பல இடங்களில் வாள் என்னும் போர்க்கருவி எடுத்தாளப் பெற்றுள்ளது. "போர்க்கு உரைஇப் புகன்று கழிந்தவாள் உடன்றவர் காப்புடை மதில் அழித்தலன் வான்உற மூழ்கி உரு இழந்தனவே"[75] "ஒளிறுவாள் அருஞ்சமம் முருக்கிக் களிறு எறிந்து பெயர்தல் காளைக்குக் கடனே"[76] என்ற சங்கப்பாவடிகள் வாள் வெற்றி காட்டுவனவாகும்.

வாள் என்பது ஆண்களுக்கு மிகுதியும் பயன்படும் போர்க்கருவி என்றாலும் அதனைப் பெண்களும் கையாண்டுள்ளமை மற்றொரு புறநானூற்றுப்பாடல்வழி புலனாகின்றது. "கொண்ட வாளொடு படிபுனம் பெயராச் செங்களம் துழவுவோள் சிதைந்து வேறாகிய படுமகன் கிடக்கை காணுஉ ஈன்ற சான்றினும் பெரிது உவந்தனளே"[77] என்ற காக்கைப் பாடினியார் பாடலடிகள் வீரத்தாய் ஒருத்தி வாள் கொண்டு போர்க்களம் புகுந்த செய்தி பெண்களின் வாள் பயன்பாட்டிற்குச் சான்றாவதாகும்.

**வேல்**

முருகக் கடவுளின் கருவியாக சங்க இலக்கியத்தில் வேல் குறிக்கப்பட்டுள்ளது. வேல் கொண்டாடும் வேலன் அகப்பாடல்களில் முக்கியப் பாத்திரமாக அமைக்கப் பெற்றுள்ளான். புறம் சாராத அகம் சார்ந்த பயன்பாடு இதுவாயினும் வேல் என்னும் கருவியை மக்கள் போற்றியமைக்குச் சான்றாக மேற்கருத்து விளங்குகின்றது. தொல்காப்பியத்தில் 'பெரும்பகை தாங்கும் வேலினாலும்' என்று வேல் குறிக்கப்பட்டுள்ளது.

"ஔவையார் அதியமானைக் காட்சிப்படுத்தும்போது "கையது வேலே காலன புனைகழல்"[78] என்று வருணிக்கிறார். "பூஆர். காவின் புனிற்று புலால் நெடுவேல் எழுபொறி நாட்டத்து,"[79] "நிழல்படு நெடுவேல் ஏந்தி ஒன்னார் ஒண்படைக் களிறு பெயர்த்து எண்ணினி விண் இவர் விசும்பின் மீனும்,"[80] "பீலிக்கண்ணி பெருந்தகை மறவன் மேல்வரும் களிற்றொடு வேல் துறந்து,"[81] "திறல் ஒளிறிலங்கு நெடுவேல் மழவர,"[82] "சாந்தமை மார்பின் நெடுவேல் பாய்ந்தென"[83] முதலான குறிப்புகளால் வேல் என்னும் போர்க்கருவி அதிக அளவில் பயன்படுத்தப்பட்டமை தெரிய வருகிறது.

சிறிய பருவத்தின்போதே வேல் என்னும் போர்க் கருவி தாயால் மகனுக்கு அறிமுகப்படுத்தப்பெற்று தரப்பெற்றமை மற்றொரு புறநானூறு பாடலால் தெரிய வருகிறது. இன்றும் "செருப்பறை கேட்டு விருப்புற்று மயங்கி வேல்கைக் கொடுத்து வெளிது விரிந்து உடீஇப் பாறுமயிர்க் குடுமி எண்ணெ நீவி"[84] என்ற பாடலில் வேலின் உயரம்கூட இல்லாத சிறுவனுக்கு வேல் என்னும் கருவியைத் தந்து அதனைப் பயன்படுத்தக் கற்றுத்தரும் வீர உணர்வு இங்கு கருத்தத்தக்கது.

**வில்**

வில், அம்பு, அம்பறாத்தூணி இவை மூன்றும் அமைந்த கூட்டுக் கருவியாக தமிழர்கள் வில்லைப் பயன்படுத்தியுள்ளனர். "கணையும் வேலும் துணையுற மொய்த்தலின்"[85] என்று இக்கருவியைத் தொல்காப்பியம் குறிப்பிடுகிறது. "வினை வில் அம்பின் விழுத்தொடை மறவர்"[86] உன்னிலன் என்னும் புண் ஒன்று அம்பு"[87] "எம் அம்பு கடிவிடுதும் நும் அரண் சேர்மின் என"[88] முதலான அகச்சான்றுகள் சங்க காலத்தில் வில் பயன்படுத்தப்பட்டமைக்கான சான்றுகளாக விளங்குகின்றன.

இவ்வாறு இம்முக்கருவிகளும் பெரும்பான்மையும் சங்ககாலத் தமிழரால் பயன்படுத்தப் பெற்றுள்ளன. ஔவையார் பாடிய பாடல் ஒன்று இம்முக்கருவிகளையும் ஒருங்காகக் காட்டுவதாக உள்ளது. "மார்புறச் சேர்ந்து ஒல்காத் தோல் செறிப்பு இல் நின் வேல் கண்டவர் தோல் கழியொடு பிடி செறிப்பவும், வாள் வாய்த்த வடுப் பரந்த நின் மற மைந்தர் மைந்து கண்டவர் புண் படு குருதி அம்பு ஒடுக்கவும், நீயே, ஐயவி புகைப்பவும் தாங்காது"[89] என்ற இப்பாடலடிகள் முக்கருவிகளும் ஓர் அரசனிடத்தில் இருந்தமையைத் தெளிவுபடுத்துகிறது.

**படைக்கலக் கொட்டில் தொழிற்கூடம்**

சங்ககாலத் தமிழர் போர்க்கருவிகளைப் பெரும்பாலும் இரும்பால் ஆக்கி கொண்டனர். அவற்றைப் புதிதாக உருவாக்கிட, சீர் செய்ப உலைக்கூடங்களை அவர்கள் அமைத்துக் கொண்டனர். "வேல் வடித்துக் கொடுத்தல் கொல்லர்க்குக் கடனே"[90] என்ற பொன்முடியார் பாடலின் வழியாகக் கொல்லர்கள் தம் பட்டறையில் வேல்வடித்துத் தந்துள்ளனர் என்பது தெரிய வருகின்றது. 'இரும்பு முகம் சிதைய நூறு ஒன்னார் இருஞ்சமம் கடத்தல் ஏனோர்க்கும் எளிதே' என்பதும் ஆகுபெயரால் போர்க்கருவியைக் குறிக்கும் பாடலடியாகும்.

"இவ்வே, பீலி அணிந்து, மாலை சூட்டி,
கண் திரள் நோன் காழ் திருத்தி, நெய் அணிந்து,
கடியுடை வியல் நகரவ் வே; அவ்வே,
பகைவர்க் குத்தி, கோடு, நுதி, சிதைந்து,
கொல் துறைக் குற்றில மாதோ என்றும்
உண்டாயின் பதம் கொடுத்து,
இல்லாயின் உடன் உண்ணும்,
இல்லோர் ஒக்கல் தலைவன்,
அண்ணல் எம்கோமான், வைந்நுதி வேலே"[91]

என்ற பாடலில் ஔவையார் படைக்கலன்களின் நிலையையும், படைக்கலத் தயாரிப்பையும் காட்டுகிறார்.

தொண்டைமான் படைக்கலக் கொட்டிலில் போர்க்கருவிகள் மயிற்பீலிகள் அணிவிக்கப் பெற்று, மாலைகள் சூட்டப் பெற்று, நெய் பூசப்பெற்று, அதன் கூர்மை சரி செய்யப் பெற்று தக்கவகையில் வைக்கப்பெற்றிருந்ததாக பாடலின் முற்பகுதி குறிக்கிறது.

பின்பகுதியில் அதியமான் படைக்கலக் கொட்டிலில் போர்க்கருவிகள் உடைந்து கிடக்கும் காட்சி காட்டப்பெறுகிறது. இங்கு பகைவர்களைக் குத்தியதால் வேலின் நுனி சிதைந்து கிடக்கிறது. மற்ற போர்க்கலன்களும் உடைந்து கிடக்கின்றன. போரில் வெற்றி கொண்ட பின் வெற்றியை ஏற்படுத்தித் தந்த போர்க் கருவிகளை வெற்றெள களத்தில் விட்டுவிடாது மீண்டும் உலைக்களம் சேர்த்த மாண்பை இவ்வடிகள் விளக்குகின்றன.

இப்பாடலின் இறுதியடியில் அதியமான் கையில் வைத்திருக்கும் வேல் என்றைக்கும் கூர்மை மிக்கதாய் உடையாமல் உள்ளது என்ற புகழ்க்குறிப்பு காணப்படுகிறது. இவ்வாறு போர்க் கருவிகளை உருவாக்கிக் கொள்ளவும், சரியாக்கிக் கொள்ளவும் சங்கத்தமிழர் திறம் பெற்றிருந்தனர் என்பதை தெளிவாகிறது.

**படைவீடு**

போரில் வெற்றி பெற்றபின் வென்ற வீரர்கள் தோற்ற நாட்டில் படைவீடு உறுதி ஒழிந்த, சிதைந்த போர்க்கருவிகள் கொண்டு கட்டப் பெற்றிருக்கும். முல்லைப்பாட்டில் அப்படி ஒரு படை வீடு அமைக்கப் பெற்றிருந்தது. “கல் தோய்த்து உடுத்த படிவப் பார்ப்பான் முக்கோல் அசைநிலை கடுப்ப, நல் போர் ஓடா வல் வில் தூணி நாற்றி கூடம் குத்திக் கயிறு வாங்கு இருக்கை பூந்தலைக் குந்தம் குத்தி, கிடுகு நிலைத்து, வாங்கு, வில் அரணம் அரணம் ஆக”[92] என்ற முல்லைப்பாட்டின் பாடலடிகளில் பயன்படா நிலை எய்திய போர்க்கருவிகள் மாற்றுவழியில் தங்கும் மாடிவீட்டின் சுவர்களாக மாற்றப்பட்டுள்ளமை குறிக்கப்பட்டுள்ளது. உடைந்த போர்க்கருவிகளின் பகுதிகள் தூணாக மாற்றப்பெற்று, கயிற்றால் அவை இறுக பிணைக்கப் பெற்று குந்தம், கிடுகு முதலானவை தடுப்புச் சுவர்களாகவும்

துணிகள் கூரைகளாகவும், அமைக்கப் பெற்றமை மேற்காண் வரிகளால் தெரிய வருகிறது.

சங்கம் மருவிய காலத்திலும் இவ்வகைக் கருவிகள் பெருமளவில் பயன்படுத்தப் பெற்றுள்ளன. "வில் ஏர் உழவர் பகைகொளினும்"[93] "பிழைத்த வேல் ஏந்தல் இனிது"[94] "வாள் ஆண்மை"[95] "தொழுத கையுள்ளும் படை ஒடுங்கும்"[96] "தெரிகணை எஃகம்"[97] என்றவாறு வில், வாள், வேல் ஆகிய படைக்கருவிகள் பயன்படுத்தப்பட்டுள்ளமைக்குத் தக்க சான்றுகள் உள்ளன.

குறளில் காட்டப்பெறும் 'தொழுத கையுள்ளும் படை ஒடுங்கும்' என்ற தொடர் வஞ்சகமாக பழிதீர்க்கும் பான்மை திருவள்ளுவர் காலத்தில் இருந்தமையை எடுத்துரைப்பதாகும். சங்ககாலத்தில் நிலவிய போர்த்தூய்மை இக்காலம் முதல் திரியத் தொடங்கியது என்பதற்கு இக்குறள் சான்றாகிறது.

காப்பிய காலத்தில் "வாளும் குடையும் மயிர்க்கண் முரசும் நாளொடு பெயர்த்து"[98] என்று சிலப்பதிகாரத்துள்ளும் வாள் என்ற போர்க் கருவி சொல்லாட்சி பெற்றுள்ளது.

"ஒளிறுவாள் மறவரும், தேரும் மாவும் களிறும் சூழ் தர"[99] என்று மணிமேகலையில் நாற்படைகள் பற்றிய குறிப்பு காணப்படுகிறது. மேலும் இந்நூலில் "அம்பு ஏவுறு மஞ்சை, ஆவக்கணைக்கால் காணாயோ அம்புப்புட்டில் "[100] என உவமைகள் வாயிலாகவும் இயல்பாகவும் போர்க் கருவிகள் பற்றிய குறிப்புகள் காணப்படுகின்றன. (மன்மதனைக் குறிக்க பல இலக்கியங்களில் வில் பயன்படுத்தப்பட்டுள்ளது).

காப்பியகாலத்தின் பிற்காலத் தொடர்வாகத் தொடர்ந்த கம்பராமாயணம் மற்றும் வில்லி பாரதம் ஆகிய இலக்கியங்களில் போர்க்கருவிகள் பற்றிய பல

குறிப்புகள் காணக்கிடக்கின்றன. இராமாயணத்தில் கம்பர் அம்புகளின் பல்திறன்களை எடுத்துரைக்கிறார். அம்புகளின் வகைகள், அவற்றின் இயல்புகள் குறித்த பல செய்திகள் கம்பரின் வாயிலாகக் கிடைக்கப் பெறுகின்றன.

அதே நேரத்தில் இப்போக்கிலிருந்து வில்லி பாரதம் சற்று வேறுபட்டு படைக்கருவிகளின் வியூகங்கள், படைக் குழுக்களின் வியூகங்கள் ஆகியவை பற்றிய செய்திகளைத் தருகின்றது.

வில், அம்பு, அம்புப்புட்டில் ஆகியவை அடங்கிய இக்கூட்டுக்கருவி தமிழர் போர்வாழ்வில் பெருத்த வளர்ச்சி அடைந்துள்ளமையை டுமேற்கண்ட இரு காப்பியங்கள் வழியாக அறிய முடிகின்றது.

**போர் பற்றிப் புகழ்தல்**

பண்டைக் காலத்தில் போர்த்துறையானது வாழ்க்கைத் துறைகளில் மிக முக்கியமானதாகக் கருதப்பட்டிருக்கிறது. தொல்காப்பியர், புறத்திணையியலில் கூறியுள்ள சூத்திரங்களில் 20 சூத்திரங்கள் போர் முறையைப் பற்றியே விவரித்துக் கூறுகிறார். மேலும் "விளம்பிநாகனார் என்னும் புலவர் தன்பாடலில் போர் நிகழாவிடின் போர் வீரர்க்கு நன்மை உண்டாகாது. போர் வீரர் இலரெனின் அரசனுக்கு நன்மை உண்டாகாது என்று கூறுகிறார்."[101] "பாண்டியன் தலையாலங்கானத்துச் செருவென்ற நெடுஞ்செழியனை மாங்குடிமருதனார் புகழ்கின்றபோது, அரசனைப் போர்வீரர் வாழ்த்த வேண்டும். இரவலர் புகழ வேண்டும். அவனுக்கு மகளிர் மது தரவேண்டும். அவ்வாறு முடியுமாயின் அவனே வாழ்ந்தவனாவன் என்கிறார்."[102]

பண்டைக் காலத்தில் எப்புலவர் எவ்வரசனிடம் சென்றாலும் அவனை 'அடுபோர் அண்ணல்' 'பாடுதுறை முற்றிய கொற்ற வேந்தே', 'அடுப்போர்ச் செழிய'

என்று அவனுடைய போர்த் திறமையைப் புகழ்ந்தே பேசியிருக்கின்றனர். மேலும் போர்க்களத்தில் இறப்பவன் ஆன்மா சொர்க்கம் செல்லும் அவன் உடல் களத்தில் விழும்; அவனுடைய புகழ் கற்சிலையில் நிற்கும் என்றும் புகழ்ந்திருக்கின்றனர். "மூப்பிலும், பிணியிலும் இறக்காமல் போர்க்களத்தில் வீழ்ந்தாரே துறக்கம் பெறுவர் என்ற நம்பிக்கை"[103] அக்காலத்தில் வழக்கில் இருந்திருக்கிறது. "போர்க்களத்தில் இறக்காமல் நோயினாலோ அல்லது மூப்பினாலோ இறந்த ஒருவனை மண்ணில் புதைக்கும் பொழுது அவனது உடலை வாளாற் பிளந்த பின்னரே அடக்கம் செய்வர்"[104] என்ற செய்தியினையும் இலக்கியம் வழி அறிகிறோம். எனவே பண்டைய நாளில் தமிழ் நாட்டிலிருந்த அரசர்களும், அறிஞர்களும் போர்த்தொழிலையே புகழுடைய தொழிலாகப் போற்றினர் என்பதனை அறியமுடிகின்றது.

**தோள்தினவு காரணமாகப் போர் தொடுத்தல்**

ஓர் அரசன் தன் வலிமையை உலகம் புகழ்தல் வேண்டும் எனக்கருதி மாற்றரசர்கள் மீது போர் தொடுத்த செய்தியினை இலக்கியங்கள் வழி அறியலாம். தமிழரசர்கள் எவ்விதக் காரணமுமின்றி வெறும் தோள்தினவு காரணமாகவே போர் செய்தனர். தமிழ் மன்னர்களும் சேரன் செங்குட்டுவன், கடலிடையே வாழ்ந்தவர்களைத் தாக்கி வென்றான். அவன் அவ்வாறு அவர்களைத் தாக்கியதற்குக் காரணம் தன்தோள் பூரிக்கப்போர் புரியும் வேட்கை காரணமாகவே கடலை வளைத்துப் போரிட்டான் என்று (அகம். 221) பாடல் கூறுகிறது.

தமிழ் மன்னர்கள் தோள்தினவோடு தாங்கள் கூறிய வஞ்சினத்தை நிலைநாட்டுவதற்காகவும் கடுமையாகப் போரிட்டனர். பாண்டியன் தலையாலங்கானத்துச் செருவென்ற நெடுஞ்செழியன் பின்வருமாறு வஞ்சினம்

கூறினான். பகைவரை யான் வெல்லேன் ஆயின் எம் குடிமக்கள், எம் அரசன் கொடியவன் என்று கண்ணீர் சிந்திப் பழிதூற்றும் கொடுங்கோலன் ஆகக்கடவேன் . புலவர்கள் எனது நாட்டின் சிறப்பினைப் பாடாது ஒழிவாராக. இரப்பவர்க்கு கொடுக்க இயலாத வறுமையை யான் அடைவேன் ஆகுக் எனக்கூறிப் போரிட்டிருக்கிறான் என்பதைப் புறநானூற்றின் மூலம் அறிய முடிகிறது.

**மண்ணாசை**

போர் தொடுப்பதற்கு மற்றொரு காரணம், ஓர் அரசன் மற்றோர் அரசனுடைய நாட்டைக் கவர வேண்டும் என்ற ஆசையால் போர் தொடுத்தனர். செல்வக்கடுங்கோ வாழியாதன் என்னும் சேரன் அரசுகட்டில் ஏறியபோது, அவனுடைய நாடு அளவில் சுருங்கியதாக இருந்தது. அவ்வாறு சுருங்கிய நாட்டில் ஆள அவன் விரும்பவில்லை. எல்லா நாடுகளும் தன்னுடைய ஆட்சியில் நிற்கவேண்டும் என்று விரும்பினான் என்ற செய்தியினைக் கபிலர் ஒரு பாடலில் குறிப்பிடுகிறார்.

"வையம் காவலர் வழிமொழிந்து ஒழுகப்
போகம் வேண்டிப் பொதுச்சொல் பொறாஅது
ஓடங்கா உள்ளத்து ஓம்பா ஈகைக்
கடந்தடு தானைச் சேரலாதன்..."[105]

என்ற பாடல் வழி அறியமுடிகின்றது. அதியமான் நெடுமான் அஞ்சியைப் பார்த்து ஔவையார் (புறம். 99) பாடலில் "ஒரு நாளும் நீங்காத அரசுரிமையைப் பெற்றும் திருப்தி அடையாய்" என்று கூறுவதும் இக்கருத்தின் அடிப்படையிலேயாகும். மேலும் சோழன் கரிகாற் பெருவளத்தானை, பட்டினப்பாலையில் கடியலூர் உருத்திரங் கண்ணனார்,

"உருகெழு தாயம் ஊழியன் எய்திப்
பெற்றவை மகிழ்தல் செய்யான்"[106]

என்று கூறுகிறார். அதாவது தனக்கு அரசுரிமையால் கிடைத்த நாட்டின் ஆட்சியில் திருப்தி அடையாமல் வேறு நாடுகளைப் பிடிக்கவேண்டும் என்ற ஆசையால் போர் செய்தான் என்ற செய்தியைப் புலவர் கூறிச் சொல்கிறார். எனவே, தமிழ் மன்னர்கள் பிறநாடுகளை வென்று தம்முடைய குடையின் கீழ்க் கொண்டு வரப் போர் செய்தனர் என்பதனை அறியமுடிகின்றது.

**பொருளாசை**

பண்டைக் காலத்தில் அரசன் குடிகளிடமிருந்து வரி வசூலிப்பான். அது அவனுக்குப் போதாத நிலை வரும்போது, பிறநாடுகளின் மீது படையெடுத்துச் சென்று அவற்றைக் கவர்வதும் கொள்ளையிடுதலும் அங்குள்ள அரசர்களிடம் திறையைப் பெறுவதும் வாயிலாக ஈடுசெய்திருக்கிறான். இவ்வாறு போர்மூலம் மூவேந்தர்களும் பொருள் திரட்டினர் என்பதனை,

"வென்றியோடு வில்லலைத் துண்ணும்
வல்லாண் வாழ்க்கை தமிழ்கெழு மூவர்"[107]

என்ற பாடல் அடிகளில் நல்லியக் கோடன் என்னும் தமிழ் மன்னன் முடிமன்னர்களின் அரண்களை அழித்துப் பெரும் பொருளைக் கவர்ந்து, அப்பொருள்களைப் பாணர்களுக்கு வழங்கினான். அவ்வாறே "அவனது படைத்தலைவர் குறுநில மன்னர்களையும், முடியுடைய வேந்தர்களையும் அழித்துப் பொருள் கொண்டு வந்து கொடுப்பர் என்ற செய்தியை சிறுபாணாற்றுப்படையின் மூலம் அறியலாம்."[108] பண்டைக்காலத்துப் புலவர்கள் அரசர்கள் போரின் மூலமாகப் பொருள் தேடுவதை அறத்திற்குப் புறம்பான செயலாகக்

கொள்ளவில்லை. அதனாலேயே குறுங்கோழியூர்கிழார் என்னும் புலவர் சேரமான் யானைக்கட்சேய்மாந்தர் சேரலிரும்பொறையை,

> "திறனறி வயவரொடு தெவ்வர்தேய, அட்டு
> பிறர் மண்ணுண்ணும் செம்மல்"[109]

என்று போற்றுகிறார். எனவே அரசர்களைப் புகழ்கின்ற புலவர், கூத்தர், பாணர், பொருநர், விறலியர் போன்றவர்களுக்குப் பொருள் வழங்குவதற்கும், அரசர்கள் சிறப்பான வாழ்க்கை நடத்துவதற்கும் தன் இனத்து மன்னர்களிடமே போரிட்டுப் பொருள் கவர்ந்திருக்கின்றனர்.

**திறை செலுத்த மறுத்தவர்கள் மீது போர் தொடுத்தல்**

ஓர் அரசன் மற்றோர் அரசனைப் பார்த்து, என்னை உன் தலைவனாக ஏற்றுக்கொள், 'என் ஆணை வழி ஒழுகு' என்று கூறும்போது அவ்வரசன் மறுத்தால் அவன் மீது போர் தொடுத்திருக்கும் செய்தியினை எட்டுத்தொகை நூல்கள் வழி அறியப்படுகின்றது. சோழ மன்னன் முதலாம் குலோத்துங்கன் கலிங்க மன்னன் அனந்தவர்மனைத் தனக்குக் கீழ்ப்படிந்து திறை செலுத்துமாறு பணிகிறான். அனந்தவர்மன் மறுத்துவிடவே குலோத்துங்கன் போர் தொடுக்கிறான். இப்போரினால் அனந்தவர்மன் சிறை பிடிக்கப்படுகிறான். மேலும் கலிங்கத்துப் பரணியில் சோழனிடம் போரில் தோற்ற சேர, பாண்டிய மன்னர்களின் மனைவியர் குலோத்துங்கனின் மனைவியர்க்குப் பணிப்பெண்களாகத் தொண்டு செய்த காட்சி பல்வேறு இடங்களில் காட்டப்பட்டிருக்கிறது. அவ்வாறே சேர, பாண்டிய மணிமுடிகள் சோழன் திருவடிகளில் கிடக்கும் காட்சியை செயங்கொண்டார் வர்ணித்துச் சொல்கிறார். இவ்வாறு தமிழ் மன்னர்களில் ஒருவர் தலைமையை மற்றொருவர் ஏற்க மறுத்தால் போர் தொடுக்கும் செயலை நிறைய இலக்கியச் சான்றுகள் உணர்த்திக் காட்டுகின்றன.

**போரால் ஏற்பட்ட அழிவுகள்**

தமிழ் மன்னர்கள் ஒருவருக்கொருவர் போர் தொடுக்கின்றபோது அவர்கள் மக்களுக்குச் செய்கின்ற அழிவை எண்ணும்போது நெஞ்சு நெகிழ்கிறது. இதையே தொல்காப்பியர் 'எரிபரந்தெடுத்தல்' என்ற ஒரு துறையாகக் காட்டிச் சொல்கிறார். ஒரு அரசன் மற்றொரு அரசன் மீது போர் தொடுக்க எண்ணும் போது அப்போருக்கு கால்கோள் விழாவாக எரியூட்டுதலை நிகழ்த்துவான். இதனால் மக்கள் குடியிருக்க வீடின்றி அவதிப்படுவர். மேலும் அவர்களுக்குக் குடிக்க நீர் கிடையாதபடியும் அவ்வரசர்கள் செய்வர். அதியமான் மகன் பொகுட்டெழினியை ஔவையார் பாடும்பொழுது அவன் செய்த செயல்களைப் புகழ்கிறார். போர் தொடுக்கும் அரசன் ஊர்களை எரித்தான். நீர்நிலைகளை அழித்தான். வயல்களைப் பாழாக்கினான்.

தலைநகரத்து அரண்களைத் தரைமட்டமாக்கினான் என்று (புறம். 392) பாடலில் குறிப்பிடுகிறார். "தலையாலங்கானத்துச் செருவென்ற பாண்டியன் நெடுஞ்செழியன் செய்த செயல்களை மாங்குடி மருதனார் மதுரைக் காஞ்சியில் விரித்துக் கூறுகிறார்."[110] நெடுஞ்செழியனே் நீ ஊரிலே தங்கியிருக்க மனம் கொள்ளாமல் பகைவர் மீது படையெடுத்து அவர்களின் அரண்களை அழித்தாய். அவர்களுடைய பொழில்களைக் கெடுத்தாய். அங்குள்ள மருதநிலத்து வயல்களில் தீ வைத்தாய், அதனால் அவர்களின் நாடு பேய்க் காடு என்று பெயர் பெற்றது என்று பாண்டியன் செய்த செயல்களைக் குறிப்பிடுகிறார். இச்செயல்கள் மூலம் அந்நாட்டில் வாழ்ந்த மக்கள் எத்துணை துன்பத்தினை அடைந்திருப்பர் என்று அரசன் அறிந்து கொள்ளவில்லை. இச்செயலை அக்காலத்து அரசர்களும் சரி, புலவர்களும் சரி, போர் அறச்செயல் என்று கருதினர். பல மன்னர்கள் எரியூட்டிய நிகழ்ச்சியினைப் பல்வேறு இலக்கியங்கள் வழி அறிந்துகொள்ள முடிகின்றது.

தமிழ்மொழி பேசுகின்ற தமிழ் இனத்தைச் சேர்ந்த மூவேந்தர்களும், குறுநில மன்னர்களும் ஒருவரையொருவர் போரிட்டுக் கொன்று குவித்தனர். இவர்களின் செயலால் ஒன்றும் அறியாத அப்பாவி மக்கள் பெரும் துன்பத்திற்கு ஆட்பட்டனர். தமிழ் மன்னர்களின் ஒற்றுமையின்மையால் வேற்று இனத்து அரசர்கள் உட்புகுந்து ஆட்சியைப் பிடித்தனர். அவர்களின் ஆட்சியால் தமிழர்களின் பண்பாடுகளும் மரபுகளும் அழிக்கப்பட்டன. சங்ககாலத்தைச் சேர்ந்த மூவேந்தர்களும் சரி, குறுநில மன்னர்களும் சரி ஒருவருக்கொருவர் சண்டையிட்டுக் கொண்டு வாழ்ந்தனரே தவிர மக்கள் நலன் கருதி ஆட்சி செய்யவில்லை. இவர்களின் ஒற்றுமையின்மையின் காரணமாகவே களப்பிரர் என்ற வேறு ஒரு இனம் தமிழகத்தைக் கைப்பற்றி ஆட்சி செய்தது. இவ்வினத்தவரை முறியடித்துப் பின்னர் பல்லவர் தமிழகத்தைக் கைப்பற்றி ஆட்சி செய்தனர்.

சங்க கால மூவேந்தர்கள் எவ்வாறு ஆட்சி செய்தனர் என்பதற்கு வரலாற்றுச் சான்றுகள் அதிகம் கிடைக்கப்பெறவில்லை. இலக்கியச் சான்றுகளே அதிகம். சங்ககாலச் சோழ மன்னர்களில் கரிகால சோழன் காவிரிநதியில் கல்லணையைக் கட்டி, நீரைத்தேக்கி, அந்நீரைப் பாசனங்களுக்குப் பயன்படுத்தச் செய்திருக்கின்றான். சங்ககால அரசர்கள் கிராமங்களை எவ்வாறு அமைத்தார்கள். சாலை அமைப்புகள் எவ்வாறு அமைந்திருந்தன. கட்டிட அமைப்புகள் எந்நிலையில் அமைந்திருந்தன என்பதற்கு மூலச்சான்றுகள் எதுவும் கிடைக்கவில்லை.

பல்லவர்கள் காலத்திற்குப் பின்னர் ஆட்சிசெய்த சேர, சோழ, பாண்டியர்கள் சிறப்பான ஆட்சி செய்தனர் என்பதற்கு வரலாற்றுச் சான்றுகள் அதிகம் உள்ளன. பிற்காலத்தமிழ் மன்னர்கள் காலத்தில் ஆரியர்கள் தமிழகத்தில் புகுந்துவிட்டனர். ஆரியர்களின் அறிவுரையை தமிழ் மன்னர்கள் அதிகம்

கேட்டதால், தங்களுக்குக் கோட்டைகள் கட்டுவதைவிட கோவில்களையே அதிகம் கட்டினர். சோழர்கள், தஞ்சைப் பெரியகோவில், கங்கைகொண்ட சோழபுரம் கோவில், தாராசுரம் கோயில், திரிபுவனம் கோயில் மற்றும் பாண்டியர்கள் மதுரை மீனாட்சியம்மன் கோவில் போன்று தமிழகத்தில் நூற்றுக்கு மேற்பட்ட கோவில்களை கட்டினர்.

சங்ககாலத்தில் சமயத்தின் பெயரால் அதிகச் சண்டைகள் ஏற்படவில்லை. களப்பிரர் காலத்திற்குப் பின்னரே சமயச் சண்டைகள் உருவாயின. திருநாவுக்கரசர் சமணத்திலிருந்து விலகி சைவசமயத்தில் சேர்ந்ததற்காகச் சமண சமயத்தவரால் எவ்வளவு துன்பத்திற்கு ஆளானார் என்பதனை அறியலாம். பக்தி இலக்கிய காலகட்டத்தில் சமயச் சண்டை உச்சகட்டத்தை அடைந்தது. (கி.பி. 640 லிருந்து 670 வரை) பாண்டியர் ஆட்சி செய்த காலத்தில் திருஞானசம்பந்தர் 8000 சமணர்களை வாதத்தில் வென்றார் என்பதற்காக, அவர்கள் அனைவரையும் கழுவில் ஏற்றினர்.

தொடக்கத்தில் சமணம், பௌத்த மதங்களோடு சண்டையிட்டுக் கொண்டதமிழர்கள் பின்னர் தங்களுக்குள்ளே சைவம், வைணவம் என்ற இருபகுப்பாகப் பகுத்துக் கொண்டு எம்மதம் சிறந்தது என்பதனை நிலைநாட்டுவதற்காகச் சண்டையிட்டுக் கொண்டனர்.

**சேரர்களின் நிர்வாகத்திறன்**

வண்புகழ் மூவர் தண் பொழில் வரைப்பு என்பர். பழந்தமிழ் நாட்டைச் சக்தி வாய்ந்த சேர, சோழ, பாண்டியன் என்னும் மூவேந்தர்களும் ஆண்டனர். இவர்களுள் சேரர்களின் வரலாற்றை தெரிந்து கொள்ளும் வரலாற்று மூலமாகத் திகழ்வது பதிற்றுப்பத்து. இந்நூல் ஒரு முறையான அரச பாரம்பரியத்தை விளக்குகின்றது. இப்பாடல்களை ஆராயுங்கால் கடைச்சங்க காலத்தில் உதியன்

மரபினர், இரும்பொறை மரபினர் என இரு சேரர் குடியினர் சேர மண்டலத்தைத் தனித்தனிப் பகுதிகளிலிருந்து அரசாண்டனர் என்பது நன்கு புலனாகின்றது. அவ்விரு மரபினரும் தாயத்தினர் ஆவர். அவர்களுள் எண்மரே எட்டுப் பத்துக்களின் தலைவர்களாக உள்ளதைக் காண்கின்றோம். இமயவரம்பன் நெடுஞ்சேரலாதன், பல்யானைச் செல்கெழுகுட்டுவன், களங்காய்க்கண்ணி நார்முடிச்சேரல், கடல் பிறக்கோட்டிய செங்குட்டுவன், ஆடுகோட்பாட்டுச் சேரலாதன் ஆகிய எவரும் உதியன் மரபினர். செல்வக்கடுங்கோ வாழியாதன், தகடுறெறிந்த, பெருஞ்சேரலிரும் பொறை, இளஞ்சேரலிரும் பொறை ஆகிய மூவரும் இரும்பொறை மரபினர் ஆவர்

**அரசு**

சமூக நிறுவனங்கள் அனைத்திலும் அதிகாரமிக்க நிறுவனமாக அரசு விளங்குகின்றது. மனிதர்கள் முற்காலத்தில் சிறு சிறு இனக்குழுக்களாக வாழ்ந்தனர். ஒவ்வொரு பெரும் கூட்டத்திற்கும் தலைவன் உண்டு. அவன் தன் உடல் வலிமை, துணை வலிமையாலும் மற்ற சமூகங்களைத் தன் ஆணைக்கு உட்படுத்துகின்றான். பல சமூகங்களைக் கொண்டது ஒரு நாடு. வாழ்க்கைப் போராட்டத்தில் தன்னைத் தக்க வைத்தக் கொள்வதற்கும், பலத்தைக் காட்டுவதற்கும், மற்றும் ஆநிரை மேய்த்தல், விவசாயம் ஆகியவற்றைச் செய்யும் போதும், ஒரு கட்டுப்பாடு, ஒழுக்கம் மிக்க நிர்வாகம் அவர்களுக்குத் தேவைப்பட்டது.

**நிர்வாகம்**

தனி மனிதனே சமூகத்தின் ஆணிவேர். இவனுள்ளிருந்தே சமூக வளர்ச்சிக்குரிய கிளைகள் தோன்றுகின்றன. பல சமுதாயங்கள் ஒருங்கிணைந்து வாழத் தலைப்படும்போதே வாழ்க்கைநெறி பழக்க வழக்கங்கள், கலையுணர்வு,

சிந்தனை வளர்ச்சி இவை அனைத்தும் புதுவளர்ச்சி மற்றும் மாற்றங்களைப் பெற்று நிர்வாகத்தை மேம்படுத்த உதவும் வகையில் அமைந்தன.

மக்கள் நலத்திற்கு அடித்தளமாகவும், ஆதாரமாகவும் இருப்பது நிர்வாகமாகும். நிர்வாகம் பொது நிர்வாகம், காவல் நிர்வாகம் என்ற இரு பிரிவுகளை உடையது. இவற்றுள்ளுள் அரசுரிமை, அரசனின் குணநலன், அமைச்சர், சமூகப் பொருளாதார நிலை, கல்வி, பெண்கள் குணநலன், அமைச்சர் , சமூக நலன், வரி, பொதுப் பணித்துறை, வணிகமும் தொழிலும், பல்வேறு தொழில் நுட்பம் ஆகியவை அடங்கும். இவற்றுள் சேரர்களின் பொது நிர்வாகச் சிந்தனைகள் சிலவற்றைக் காணலாம்.

**அரசுரிமை**

சங்ககாலத்தில் அரசுரிமை தந்தை, அதன்பின், அவன் மகன் என்ற முறையில் இருந்து வந்தது. இச்சேரர் மரபில் இம்முறை இருப்பினும், அண்ணன், அவன்பின் அவன் தம்பி, அவன் ஆட்சியின் பொழுதே நாட்டின் இன்னொரு பகுதியை ஆளுதல் என்னும் முறை இருந்துள்ளது.

> "ஒரு வேந்தனுக்கு மூவர் மக்களென்றால் ஒருவர் பின் ஒருவராக முடிசூட்டிக் கொள்ளும் வழக்கத்தைக் காட்டுகின்றன"[111]

என்பார் ஔவை துரைசாமிபிள்ளை. "இமயவரம்பன் நெடுஞ்சேரலாதன் முடிவேந்தனாக இருக்கப் பூழி நாட்டை அவன் தம்பி பல்யானைச் செல்கெழுகுட்டுவன் குட நாட்டில் இளவரசனாக இருக்க, இரண்டாம் மனைவியின் மக்கள் களங்காய்க் கண்ணி நார்முடிச்சேரல் மரந்தையிலும், ஆடுகோட்பாட்டுச் சேரலாதன் தொண்டியிலும் இமய வரம்பனுக்குக் கீழ் ஆட்சி புரிந்தனர்."[112] இவர்களுக்குள் தயாதி சண்டை இல்லை. நிர்வாகச் சுமையை

அவர்கள் பகிர்ந்து கொண்டதை இச்செய்திகள் உணர்த்துகின்றன. சங்க காலத்திலேயே சோழ மரபில், தந்தைக்கு எதிராகப் பையன்கள் அரசுரிமை பெற நலங்கிள்ளிக்கும் நெடுஞ்கிள்ளிக்குமிடையே நடந்த போர் என நடந்த போர்களைக் காணும் பொழுது, நாட்டில் அமைதி நிலை, ஆட்சி சிறப்புற நிர்வாகம் ஒழுங்குபட சேரர்கள் மேற்கொண்ட முறை போற்றுதற்குரியது.

**சாலைகள் அமைத்தல்**

ஒரு நாட்டின் வளர்ச்சியில் வாணிகம் சிறப்பிடம் பெறும். "உள்நாட்டு வாணிகம், வெளிநாட்டு வாணிகம் என அவை விரிந்து ஒரு நாட்டின் பொருளாதாரம் மேம்பட உதவும். உள்நாட்டு வாணிகம், சாலை வழி நிகழ்வது. இன்று தேசிய நெடுஞ்சாலைகளை ஏற்படுத்தி போக்குவரத்தை எளிமைப்படுத்தி வளம் காட்டுவதைப் போன்று சேர நாட்டிலும் பல்வேறு ஊர்களும் நெடுஞ்சாலைகள் வாயிலாகத் தொடர்பு பெற்றிருந்தன. நெடுஞ்சாலைகளின் இரண்டு பக்கமும் பழ மரங்கள் நடப்பட்டிருந்தன. அவ்வழிச் செல்வோரின் பசியை அவை ஆற்றின. இவ்வாறு நல்ல முறையில் போக்குவரவு வாயில்களை அமைத்த சேரலாதன் ஆட்சி பிற்காலத்து ஆட்சியாளருக்கும் சிறந்த எடுத்துக்காட்டு என விளக்குகின்றது பதிற்றுப்பத்து சொற்பொழிவுகள்."[113]

சிறந்த நிர்வாகத்திற்கு எடுத்துக்காட்டாக சேரர்களின் ஆட்சித்திறம் விளங்கியிருக்கிறது. இமய முதல் குமரி வரையிலும் உள்ள தம் ஆட்சிப் பகுதியில் தமிழை ஆட்சி மொழியாகக் கொண்டு பல்லோரும் போற்றக்கூடிய வகையில் ஆண்ட அவரின் மாண்பு போற்றுதற்குரியது.

**சேர மன்னர்களின் கொடைப்பண்பின் பெருமிதம்**

பெருமதி வாழ்க்கைக்குக் கொடைப்பண்பு வேண்டும். "உயிர்க்கு. ஊதியம் ஈதலும், இசைபட வாழ்தலும்"[114] என்கிறார் திருவள்ளுவர். இவர்களின்

இத்தொடர்களுக்கு இலக்கியமாய்ச் சேரமன்னர்கள் வாழ்ந்துள்ளனர். இவர்களின் "கொடைப்பண்பு முதல், இடை, கடை வள்ளல்களுக்கு றநிகரானதாகும். இமயவரம்பன் நெடுஞ்சேரலாதன் குமட்டூர் கண்ணனார்க்கு உம்பர்காட்டுப் பகுதியில் ஐந்நூறு ஊர்களை வரியிலி பூமியாகக் கொடுத்தான். மேலும் தன் தென்னாட்டு வருவாயில் ஒரு பங்கை முப்பத்தெட்டு ஆண்டுகள் பெறுமாறு வகைசெய்தான்."[115]

பல்யானைச் செல்குழுக்குட்டுவனைப் பாலைக் கௌதமனார் மூன்றாம் பத்தில் பாராட்டிப் பாடியுள்ளார். அப்புலவர் தாமும், தம் பெரும்பொருளைக் கொடையாகத் தந்து பத்து கேள்விகள் இயற்றி அவர்கள் வீடுபேறு அடையச்செய்தான். நான்காம் பத்துப்பாடிய காப்பியாற்றுக் காப்பியனார்க்குக் களங்காய்க்கண்ணி நார்முடிச்சேரல் நாற்பது நூறாயிரம் பொன் கொடுத்துத் தான் ஆள்வதில் ஒரு பாகமும் ஈந்தான். சேரன் செங்குட்டுவன் தன்னைப்பாடிய (ஐந்தாம் பத்து) பரணர்க்கு உம்பர்காட்டுப் பொருள்களையும், தன்மகன் குட்டுவன் சேரலையும் ஈகமாகக் கொடுத்தான். உலகில் இங்ஙனம் பெற்ற பிள்ளையையே கொடையாகக் கொடுத்தது புதுமையும், புரட்சியும் வாய்ந்தது. காக்கைப்பாடினி நச்செள்ளையார் ஆடுகோட்பாட்டுச் சேரலாதனை ஆறாம் பத்தில் பாடியுள்ளார். இவர் பெண்பாற்புலவர் ஆதலினால் அணிகலன் செய்து அணிய ஒன்பது காப்புப் பொன்னும், நூறாயிரம் காணமும் கொடுத்தான்.

அப்பழுக்கற்ற அந்தணராகிய கபிலர் ஏழாம்பத்தில் செல்வக் கடுங்கோ வாழியநாதனை வாழ்த்திப் பாடியுள்ளார். கபிலர்க்கு அம்மன்னன் நூறாயிரம் காணம் கொடுத்து, 'நன்றா' என்னும் குன்றில் ஏறச்செய்து, அவர் கண்ணில்பட்ட நிலமெல்லாம் கொடையாகக் கொடுத்தான். பெருஞ்சேரல் இரும்பொறையை அரிசில்கிழார் எட்டாம்பத்தில் பாடியுள்ளார். அம்மன்னன் அப்புலவர்க்குத் தானும் தன் மனைவியுமாகச் சேர்ந்து, ஒன்பது நூறாயிரம் காணம் தந்து, அரியணையும்

ஈந்தான். அப்புலவர் பெருமகனார் 'பான் இரப்ப இதனை ஆள்க' என அவனை மீண்டும் அரசனாக்கி, தாம் அமைச்சனாக விளங்கினார். பெருங்குன்றூர்க் கிழார் இளஞ்சேரல் இரும்பொறையை ஒன்பதாம் பத்தில் பாராட்டிப் பாடினார். இதற்காக அவ்வரசன் முப்பத்திரண்டாயிரம் பொன் தந்து ஊரும் மனையும் பல கொடுத்து, மேலும் அளவற்ற அருங்கலம் ஈந்தான். இங்ஙனம் சேர மன்னர்கள் கொடையில் தலைசிறந்து விளங்கினர். உலக வரலாற்றில் சேர மன்னர்கள் கொடை கொடுத்த பெருமித வாழ்வும், புகழும் கொண்டு விளங்கிய அருமையை எங்கும் காணமுடிகின்றது.

சேரமன்னர்கள் தங்களைப் புகழ்ந்து பாடிய புலவர்களுக்கு மட்டுமின்றி அனைவருக்கும் வாரி வழங்கியுள்ளார். "உலகம் புரக்கும் கமஞ்சூல், வளங்கெழு கமஞ்சூல்"[116] போல வழங்கியுள்ளனர். இமயவரம்பன் "அக்குரன் அனைய கைவண்மையே"[117] என்று போற்றப்பட்டுள்ளான். முதலேழு வள்ளல்களுள் அக்குரன் ஒருவனாவன். பாணர், கூத்தர், விறலியர் என்னும் பரிசில் வாழ்க்கை வாழ்வோர்க்கு, அவர்கள் வறுமை நீங்க ஆடுகோட்பாட்டுச் சேரலாதன் வழங்குவான். இதனை, "மின்னிழை விறலியர் நின்மறம்பாட இரவலர் புண்கண் தீர நாடொறும். உரைசால் நான்கலம் வரைவில் வீசி"[118] என்று காக்கைப்பாடினியார் பாராட்டுவார். கபிலர், செல்வக்கடுங்கோ வழியாதனைப் "பாணர் புரவல் பரிசிலர் வெறுக்கை"[119] எனப் போற்றுகிறார். அதாவது இச்சேரன் பாணர்க்குப் புரவலனாகவும், பரிசிலர்க்குச் செல்வமாகவும் விளங்குகிறான் என்பதால் இவனது கொடைச்சிறப்பு விளங்கும். இங்ஙனம் சேரர் யாவர்க்கும் கொடை கொடுப்பதில் சிறந்து விளங்கினர்.

**தொகுப்புரை**

தன்னை விட வலிமை குறைந்தவரோடு போரிடுதல் அக்காலத்தில் அறமாகப் போற்றப்படவில்லை. தன்னை ஒத்த வலிமை உடையவரோடு போரிடுவதே அறமாக இருந்தது. மனிதனாய்ப் பிறந்த ஆண்மகன் தன் புகழை வீரத்தினால் நிறுவவேண்டும் என்று ஆண்மகனுக்கு இலக்கணம் கூறுவதாய் பாடல் அமைந்துள்ளது. மன்னர் நால்வகைப் படையுடன் பொலிந்தனர். கடற்படை கொண்டு கடலிலும் தம் ஆணையைச் செலுத்தினர் என்பதும் விளங்குகின்றது.

பாரியின் மகளை வேண்டி பெண்கேட்டபொழுது பாரி மன்னன் பெண் கொடுக்க மறுக்கின்றான். ஆகையால் மகள் மறுத்தல் என்னும் துறையாகின்றது. வலிமையான அம்பு செலுத்தும் வில்லாற்றல் பெற்றதால் ஓரி வல்வில் ஓரி என்னும் சிறப்பினைப் பெற்றான் என்பதனை அறியமுடிகின்றது.

ஆண்களுக்குக் குழந்தைப் பருவத்திலேயே அணிவிக்கப்படும் ஐம்படைத்தாலி போன்ற வீரக்குறியீடுகள் வீரத்தை உணர்த்துகின்றது. தமிழகத்தை ஆண்ட முடியுடை மூவேந்தரும் தம் ஒப்புயர்வற்ற வீரச் செயல்களால் உலகப் புகழ் பெற்று வாழ்ந்தனர். வீரத்தின் திருவுருவங்களாகவே விளங்கினர்.

கரிகாற்சோழன் உலகத்தை ஒரு குடையின் கீழ் வைத்து ஆண்டவன். குடி மக்களின்பால் குறையாத அன்பு கொண்டவன். அறங்கூறும் நூல்களை அறிந்து அம்முறையைப் பின்பற்றி ஆட்சி செய்தவன். கரிகாற் சோழன் வெண்ணி என்ற இடத்திலே சேரனையும், பாண்டியனையும் போரிலே தோற்கடித்து வெற்றிமாலை சூடினான்.

பாண்டியன் நெடுஞ்செழியன் சேரன், சோழன், திதியன், எழினி, எருமையூரன், இருங்கோவேண்மான், பொருநன் என்னும் ஏழு மன்னர்களையும்

போரிலே புறமுதுகிட்டோடும்படி செய்தவன். தலையாலங்கானம் என்ற இடத்திலே இந்த எழுவருடன் போர் புரிந்து வெற்றி பெற்றான்.

பெரும்பாணாற்றுப்படையின் பாட்டுடைத் தலைவன் தொண்டைமான் இளந்திரையன் ஆவான். இவன் காஞ்சியைத் தலைநகராகக் கொண்டு ஆண்டான். பதிற்றுப்பத்தின் இரண்டாம் பத்தில் குமட்டுர் கண்ணனாரால் பாடப்பெற்ற சிறப்புமிக்கவன் இமயவரம்பன். இவ்வரசரது பெயரே இவனது வீரத்தை, வெற்றியைப் பறைசாற்றுகிறது.

தகரூர் போரில் பெற்ற வெற்றியால் ‘தகரூர் எறிந்த பெருஞ்சேரல் இரும்பொறை’ என்று போற்றப்பட்ட இரும்பொறை கல்வி, கேள்வி, கொடை தன்மையிலே சிறந்தவன். போர்க் கோலத்துடன் குழந்தையைப் பார்த்தால் குழந்தையும் வீரம் மிகுந்ததாகக் காணப்படும் என்ற நம்பிக்கை சங்ககால மன்னர்களிடையே இருந்துள்ளது. ஆடவர் மட்டுமல்லாது மகளிரும் மறமேம்பாடு மிக்கவராய் திகழ்ந்து வந்திருக்கின்றனர் என்பதை புறநூல்கள் நன்கு விளக்கி இருக்கிறது.

உழிஞை, நொச்சிப் போர்கள் மதிலினை அடிப்படையாகக் கொண்டு நிகழ்வன. பகைவருடைய மதிலைக் கைப்பற்றக் கருதி அதனை வளைத்தல் உழிஞைத்திணை. பகைவருடைய தாக்குதலினின்றும் தம்முடைய மதிலைக் காத்தல் நொச்சித்திணை. தமிழர் தொல்காப்பிய காலந்தொட்டே போர்க்கருவிகளைக் கையாள்வதிலும், அவற்றை வடிவமைத்துக் கொள்வதிலும் பழக்கமுடையவராக இருந்துள்ளனர்.

சங்ககாலத் தமிழர் போர்க்கருவிகளைப் பெரும்பாலும் இரும்பால் ஆக்கி கொண்டனர். அவற்றைப் புதிதாக உருவாக்கிட, சீர் செய்ய உலைக்கூடங்களை அவர்கள் அமைத்துக் கொண்டனர். தொல்காப்பியர், புறத்திணையியலில்

கூறியுள்ள சூத்திரங்களில் 20 சூத்திரங்கள் போர் முறையைப் பற்றியே விவரித்துக் கூறுகிறார்.

தமிழ் மன்னர்கள் ஒருவருக்கொருவர் போர் தொடுக்கின்றபோது அவர்கள் மக்களுக்குச் செய்கின்ற அழிவை தொல்காப்பியர் "எரிபரந்தெடுத்தல்" என்ற ஒரு துறையாகக் காட்டிச் சொல்கிறார். சங்ககாலப் பெண்கள் மனத்திண்மையுடையவராய் விளங்கினர். தம் புதல்வரின் விழுப்புண் கண்டு மகிழ்ந்த வீரத்தாயார் பலர் தமிழ்நாட்டில் இருந்தனர்.

# சான்றெண் விளக்கம்

1. புறம்., பா.15, 6, 7
2. மேலது., பா.10, 11
3. மேலது., பா. 20, 21
4. மேலது., பா. 7, 10
5. மேலது., பா.165, வரி. - 2
6. மேலது., பா. 9, வரி. 2- 5
7. மேலது., பா.104
8. மேலது., பா.72, வரி.1 - 12
9. தொல்., புறம்., பா.1008
10. மேலது., பா.1020
11. புறம்., பா. 76
12. அகம்., பா. 36
13. மேலது., பா. 297
14. மேலது., பா. 109, வரி.1-5 - 18
15. மேலது., பா.152, வரி.2-6
16. மேலது., பா. 201, வரி.11 - 20
17. மேலது., பா. 287, வரி.3 - 7
18. மேலது., பா.184.

19. மேலது., பா. 235.

20. பொருந., வரி.130

21. பட்டினப். வரி. 221 - 227

22. பொருநர்., வரி. 228 - 231

23. மேலது., வரி.188

24. மேலது., வரி.138 - 148

25. பட்டினம்., வரி. 228 - 239

26. மதுரைக்., வரி.10 - 13

27. மேலது., வரி.149 - 151

28. நெடுநல்., வரி.176 - 177

29. பெரும்பாண்., வரி. 40 - 43

30. மேலது., வரி. 550 - 558

31. மேலது., வரி. 70 - 80

32. பொருநற். புா. 252.

33. பதிற்று., பா. 6

34. மேலது., பா. 6.53, வரி.12 - 13

35. மேலது., பா. 6.55, வரி.17 - 18

36. மேலது., பா. 6.53, வரி.10 - 13

37. மேலது., பா. 6.51, வரி.26 - 28

38. மேலது., பா. 6.51, வரி.31

39. மேலது., பா. 6.54, வரி.16 - 17

40. மேலது., பா. 6.59, வரி.10

41. மேலது., பா. 6.55, வரி.10 - 11

42. மேலது., பா. 6.56, வரி.7 - 8

43. மேலது., பா. 6.52, வரி.11 - 12

44. மேலது., பா. 6, வரி.10

45. மேலது., பா. 6.5, வரி.14

46. மேலது., பா. 6.51, வரி.11 - 15

47. மேலது., பா. 6, வரி.2 - 10

48. மேலது., பா. 655.

49. மேலது., பா. 6.55, வரி.1

50. மேலது., பா. 6.52, வரி.14 - 24

51. புறம்., பா. 45

52. பதிற்று., பா.11, வரி.2-6

53. மேலது., பா.11, வரி.23 - 25

54. மேலது., பா.1, வரி.11

55. மேலது., பா. 29, வரி.13 - 14

56. மேலது., பா. 22, வரி.17 - 27

57. சிலம்பு., பா. 28, வரி.143 - 1

58. பதிற்று., பா. 76, வரி.2

59. மேலது., பா. 71, வரி.6 - 8

60. மேலது., பா. 71, வரி.23 - 24

61. புறம்., பா. 180

62. மேலது., பா. 186

63. மேலது., பா. 18

64. மேலது., பா. 187

65. மேலது., பா. 172

66. மேலது., பா. 315

67. மேலது., பா.100

68. மேலது., பா. 95

69. மேலது., பா. 140

70. தொல்., பொருள்., நூ. 616

71. மதுரைக்., வரி. 47 - 54

72. தொல்., பொரு., மரபி, நூ. 628

73. கந்தையாபிள்ளை, தமிழகம், ப. 176

74. மேலது.,

75. புறம்., பா. 97

76. மேலது., பா. 312

77. மேலது., பா. 63

78. மேலது., பா. 100

79. மேலது., பா. 99

80. மேலது., பா. 302

81. மேலது., பா. 274

82. மேலது., பா. 88

83. மேலது., பா. 63

84. மேலது., பா. 279

85. தொல். புறத்திணையியல்., நூ. 16

86. அகம்., பா. 105

87. புறம்., பா. 310

88. மேலது., பா. 9

89. மேலது., பா. 98

90. மேலது., பா. 312

91. மேலது., பா. 95

92. முல்லைப்., வரி. 37 - 42

93. குறள். 872

94. மேலது., 772

95. மேலது., 614

96. மேலது., 828

97. களவழி., பா. 5

98. சிலம்பு., பா. 5, வரி. 89

99. மணிமேகலை, வரி. 69 - 70

100. மேலது., வரி. 64

101. புறம். பா. 42

102. புறம்., பா. 24

103. அகம். பா. 61

104. புறம். பா. 93

105. மேலது., பா. 8

106. புட்டினப்பாலை, பா. 227-28.

107. அகம். பா. 31

108. சிறுபாண்., வரி. 247 - 249

109. புறம்., பா. 20

110. மதுரை., வரி. 147 - 176

111. பாலசுப்பிரமணியன், கு.வெ.சங்க இலக்கியத்தில் புறப்பொருள்., ப. 7

112. அ. சிதம்பரனார், சேரர் வரலாறு, ப. 53

113. பதிற்று. பா. 60, வரி. 5 - 7

114. குறள்., 231

115. பதிற்று., பா. 2

116. மேலது., பா. 9, வரி.1

117. மேலது., பா. 14

118. மேலது., பா. 54, வரி.6 - 8

119. மேலது., பா. 65, வரி.11

# இயல் - 3

# புற இலக்கியங்களில் அரசர்களின் மாண்புகள்

**முன்னுரை**

புற இலக்கியங்களில் அரசர்களின் மாண்புகள் எனும் நிலையில் அரசர்கள் உலகுடன் ஒன்றி வாழ்தல், அரசியல் நிலை, தனிமனித ஒழுக்கம், இறத்தல் இழிவு, இன ஒற்றுமை, பிறர் நலம் பேணல், செய்நன்றி அறிதல், மக்கள் நிலையறிந்து வரி விதித்தல், மன்னர்களின் வாய்மையின் பண்பு, மன்னர்களின் சாண்றான்மை திறன் போன்ற நிலைகளன்களின் அடிப்படையில் மன்னர்களின் முதற் கடமை மக்களை காப்பதே என்னும் சொல்லுக்கு இணங்க அரசர்களின் மாண்புகள் எவ்வாறு நிலைத்திருந்தன என்பதை ஆராயும் முகமாக இவ்வியல் ஆராய்கிறது.

**பிறாக்கென வாழ்தல்**

நார்முடிச் சேரலை, 'பகுத்தூண் தொகுத்த ஆண்மைப் பிறர்க்கென வாழ்பவன்' எனக் காப்பியனர் போற்றியுள்ளார். இனியவை தொகுத்தலும், தொகுத்தவற்றைப் பகுத்துண்டலும் பிறர்க்கென வாழ்பவர் ஆவார். இவையே அவர்களின் நல்லியல்புகளாகும். இவற்றை,

"பகுத்தூண் தொகுத்த ஆண்மை,
பிறர்க்கு என வாழ்தி நீ ஆகன்மாறே"[1]

என்ற இப்பாடலின் மூலம் பிறாக்காக வாழ்வதே நன்மை பெறும் வழியாகும் என்பதை அறிய முடிகிறது. இஃது உலகப்பொதுமைத் தன்மையாகும். இஃது எல்லா காலத்து மக்களுக்கும் பொருந்தும் பொதுவான பண்பாகும். எனவே

இப்பாடல் உலகப்பொதுமைத் தன்மையுடையதை எண்ண முடிகிறது. திருக்குறளிலும் இத்தன்மை கூறப்பட்டுள்ளது.

தான் தேடிய செல்வத்தைப் பலருக்கும் பகுத்துக் கொடுத்து தானும் உண்ண வேண்டும். வருந்தும் உயிர்கள் பலவற்றையும் காப்பாற்ற வேண்டும். இவைகளே அறநூலோர் தொகுத்துக் கூறியிருக்கும் அறங்களுக்குள்ளே தலைசிறந்தது. இவற்றை,

"பகுத்துண்டு பல்லுயிரோம்புதல் நூலோர்
தொகுத்தவற்றுள் எல்லாம் தலை"[2]

என்று திருக்குறள் கூறுகின்றது. இக்கருத்து மேலே சொல்லப்பட்ட பதிற்றுப்பத்தின் கருத்தைப் போல் உள்ளது. இக்கருத்து பின் நூலோர் கடைபிடிக்கக் கூடிய வகையில் உள்ளதால் தலைமைப்பண்பும் கொண்டு விளங்குகின்றது.

**நன்றி மறவாமை**

சங்க காலத்தில் மக்கள் நன்றியுடன் இருந்தனர். பிறர் தமக்குச் செய்த சிறு உதவியையும் மறவாமல் வாழ்ந்தனர் என்பதற்குச் சான்றாக,

"புலர்ந்த சாந்தின், புலரா ஈகை,
மலர்ந்த மார்பின், மா வண் பாரி"[3]

என்ற அடிகளின் மூலம் கபிலா பெருவேந்தனான செல்வக் கடுங்கோ வாழியாதனைப் பாடி, பரிசு பெற வந்தவிடத்தும் கூட பாரி பற்றி முதல் பத்து அடிகளில் புகழ்ந்து பாடி பின்புதான் வாழியாதனைப் பாடுகின்றார். இச்செயலானது பாரியினிடத்து அவர் கொண்ட அன்பையும், அவரது நன்றி மறவாமையையும் வெளிப்படுகின்றது. நன்றி மறவாமைப் பண்பு மக்களுக்கு

இருக்க வேண்டிய பொதுப்பண்பாகும். இப்பாடல் உலகப் பொதுமைப்பண்பு கொண்டதாகவும், உயாசிந்தனையுடைய பாடலாகவும் விளங்குகின்றது. இப்படிப்பட்ட செவ்வியல் தன்மை கொண்ட இப்பண்பை வள்ளுவரும் கூறியுள்ளார்

.

"நன்றி மறப்பது நன்றன்று நன்றல்லது
அன்றே மறப்பது நன்று"[4]

என்ற குறளில் நன்றியை மறக்கக்கூடாது. நன்று அல்லாத செயலை அன்றே மறக்க வேண்டும் என்கின்றார்.

**நல்வழிப்படுத்தும் அறக்கருத்துகள்**

ஒரு மனிதனை நல்வழிப்படுத்தக் கூடிய அறக்கருத்துகளை பதிற்றுப்பத்தில் பாலைக் கோதமனார் கூறியுள்ளார்.

"சினனே, காமம், கழி கண்ணோட்டம் ,
அச்சம் பொய்ச்சொல், அன்பு மிக வுடைமை,
தெறல் கடுமையொடு, பிறவும், இவ்வுலகத்து
அறம் தெரி திகிரிக்கு வழியடை ஆகும்"[5]

என்ற பாடலில் புலவர் சினத்தை ஒழிக்க வேண்டும். காமத்தை ஒழிக்க வேண்டும், கண்ணோட்டம் கூடாது, அச்சம் கூடாது, பொய் சொல்லக் கூடாது, அன்பு உடையவர்கள் பால் அறம் இறந்த அன்பு கூடாது போன்றனவற்றை அரசன் மேற்கொண்டால் அவனது ஆட்சி சிறந்த செங்கோல் ஆட்சிக்கு வழிவகுக்கும். இவ்வாறு மன்னனுக்குக் கூறும் அறிவுரை உலக மக்களுக்கும் உரிய பொது அறிவுரைகளாகும். எனவே பதிற்றுப்பத்துப்பாடல் பொதுமைப் பண்பு கொண்டு விளங்குகின்றது.

**கொற்றவைக்குப் பலியிடல்**

போர் முரசை முழக்கிப் போருக்குப் புறப்பட்டுச் செல்வது தமிழ் மன்னரின் மரபு. போர் முரசில் கொற்றவை உறைகிறாள் என்பது பண்டைத் தமிழரின் நம்பிக்கை. எனவே முரசுறை தெய்வமான கொற்றவைக்குக் குருதிப்பலி கொடுத்துப் போரில் வெற்றிபெற வேண்டி வழிபட்டனர்.

"நிறம் படு குருதி புறம்படின் அல்லது,
மடை எதிர்கொள்ளா அஞ்சுவரு மரபின்
கடவுள் அயிரையின் நிலைஇ"[6]

எனவும்,

"குருதி விதிர்த்த குவவுச் சோற்றுக் குன்றோடு
உருகெழு மரபின் அயிரை பரைஇ"[7]

எனவும் குருதிப்பலி கொடுத்த செய்திகள் அரிசில்கிழாராலும், பெருங்குன்றூர் கிழாராலும் கூறப்பெற்றுள்ளன. இவ்வழிபாட்டுச் சடங்குமுறை வீரயுகத்தின் தொடர்ச்சியாகும். செவ்வியல் பண்பான மதச்சடங்குகள் சாராதது ஆகும்.

**பிரிவுத்துயர்**

தேவியின் பிரிவுத்துயர் அறிந்தவராய அவளது விழைவை நிறைவேற்ற மன்னனைப் பாசறை விட்டே அந்தப்புரம் செல்லுமாறு பெருங்குன்றூர் கிழார் இளஞ்சேரல் இரும்பொறையை வேண்டினார். இதனை,

"மாண் இழை அரிவை காணிய, ஒருநாள்,
பூண்க மாள, நின் புரவி நெடுந்தேர்"[8]

என்கிறார் குமட்டூர்க் கண்ணனார்.

"பாலும், கொளாலும் வல்லோய் நின்
சாயல் மார்பு நனி அலைத்தன்றே?"[9]

என்ற பாடலின் மூலம் மனைவியிடம் விரைந்து செல்ல நெடுஞ்சேரலாதனை ஏவினார். பிரிவுத்துயா தாங்காத மகளிர் சுவரில் பிரிந்த நாட்களைக் கோடிட்டுக் குறித்தனர். இயல்பாகவே சிவந்திருக்கும் மகளிர் விரல்கள் இவ்வாறு எழுதி எழுதி மிகச் சிவந்தன? என அன்னாரின் வேட்கையினைக் கபிலர் சித்தரித்துள்ளார்.

"பாயல் இன்மையின் பாசிழை ஜெகிழ,
நெடுமண் இஞ்சி நீள் நகர் வரைப்பின்,
ஒவுஉறழ் நெடுஞ் சுவர் நாள் பல எழுதிச்
செவ்விரல் சிவந்த, அவ்வரிக் குடைச்சூல்"[10]

என்ற பாடல் அடிகளின் வழி ஆடவர், மகளிர் விழைவுகள், துன்பங்கள் பதிற்றுப்பத்தில் பதிவாகியுள்ளன. உலக வழக்கில் அமைந்த இப்பொது மனித உணர்வுகளையும், விழைவுகளையும் பதிவு செய்த பதிற்றுப்பத்து செவ்வியல் இலக்கியமாகும்.

**மனித நேயம்**

தம் வாழ்வை மட்டும் குறிக்கோளாகக் கொண்டவன் மனிதன் அல்லன். மனிதன் என்றால் இரக்கத்தன்மை வேண்டும். குற்றங்களைப் பொறுத்துக் கொள்ளும் குணம் வேண்டும். விட்டுக்கொடுக்கும் தன்மை வேண்டும். உறுதியும் ஆண்மையும் உள்ளத்தில் நிலைத்திருக்க வேண்டும். இவைகள் மனிதத் தன்மையுள்ளவனிடத்தில் மாறாமல் அமைந்திருக்க வேண்டிய குணங்கள் ஆகும்.

"நட்டோர்க்கு அல்லது கண் அஞ்சலையே;
நிலம் திறம் பெயரும் காலை ஆயினும்,

கிளந்த சொல் நீபொய்ப்பு அறியலையே”[11]

என்ற பாடலின் மூலம் நண்பர்களிடந்தான் கண்ணோட்டங்காட்டுவாய். மற்றவர்களிடம் இரக்கமின்றி நடந்து கொள்ள அஞ்சமாட்டாய், நிலம் தனது வலிமை குன்றிய காலத்திலும் கூட, சொல்லிய சொல்லுக்கு மாறாக நடக்காது. அதே போல நீ பொய்யொழுக்கத்தை மேற்கொள்ளமாட்டாய் என்று புலவர் கூறியிருப்பதன் மூலம் நட்டோர்களிடம் விட்டுக் கொடுக்கும் குணமும், உரைத்த மொழியைக் காப்பாற்றும் உறுதியும் உயர்ந்த மனிதத்தன்மைகள் என்பதை அறிய முடிகிறது. ஆகவே, இப்பாடல் செம்மொழிப்பண்புகளான உயர் சிந்தனைகொண்ட கருத்துடைய பாடலாகும்.

**நாட்டின் உயர்வுக்கு உழவுத்தொழிலே காரணம்**

உழவுத்தொழிலில் உயர்ந்து விளங்கும் நாடே பஞ்சத்தில் வீழ்ந்து பரிதவிக்காது. உழவுத்தொழில் உடைய நாட்டில் வாழ்வோர் இன்புறுவர். அந்த நாடே செல்வத்திலே சிறந்து விளங்கும். இவ்வுண்மையைப் பண்டைத் தமிழர்கள் உணர்ந்திருந்தனர். இதனை,

"கருவி வானம் தண் தளி சொரிந்தென,
பல் விதை உழவின் சில் ஏராளர்
பனித் துறைப் பகன்றைப் பாங்குடைத் தெரியல்,
கழுவுறு கலிங்கம் கடுப்ப, சூடி,
இலங்கு கதிர்த் திருமணி பெறூஉம்
அகன் கண் வைப்பின் நாடு கிழவோயே”[12]

என்கிறார் புலவர். இப்பாடலின் மூலம் மேகங்கள் மழை பெய்தவுடன் பலவிதமான விதைகளையும் வைத்திருக்கின்ற உழவிலே சிறந்த உழவர்கள் தங்கள் வேலையை ஊக்கத்துடன் செய்கின்றனர். குளிர்ந்த நீர்த்துறையை

அடைகின்றனர். அழகான பகன்றைப் பூமாலைகளை ஆடைகளைப் போல அணிகின்றனர். விளைந்து விளங்குகின்ற கதிர்களிலிருந்து அழகிய தானிய மணிகளைப் பெறுகின்றனர். இத்தகைய வளமுடைய பெரிய நாட்டின் தலைவனே என்று கூறுவதன் மூலம் ஒரு நாட்டின் உயர்வுக்கு உழவுத் தொழிலே காரணம் என்பதை அறிய முடிகின்றது. இத்தொழில் இன்றும் இன்றியமையாத ஒன்றாக விளங்குகின்றது. இத்தொழிலால் தான் இன்று மக்கள் நல்ல உணவினை உண்ண முடிகின்றது. ஆகவே, இப்பண்பு எக்காலத்திற்கும் பொருந்தும் வகையில் உள்ளதால் இப்பாடல் பொதுமைப் பண்பும், நிலைபேறு உடையனவாகவும், உயர்ந்த கருத்தை மக்களிடம் விளைவிப்பதாகவும் விளங்குகின்றது.

**விழுப்புண் போற்றல்**

சான்றோர்கள் தங்களுடைய மார்பில் புண் ஏற்பட்டால், அவற்றைப் போற்றும் மரபு அக்கால மக்களிடம் இருந்தது.

"சிரல் பெயர்ந்தன்ன நெடு வெள் ஊசி
நெடு வசி பரந்த வடு வாழ் மார்பின்"[13]

என்ற அடிகளில் செங்குட்டுவனின் மார்பு புண்பட்ட மார்பினைத் தைக்கும் காலத்து நெடிய வெண்மையான ஊசியினாலாகிய தழும்பும், வடுவும் உடையது.

அவன் மார்பு,

"மை அற விளங்கிய, வடு வாழ் மார்பின்,
வசை இல் செல்வ் வானவரம்ப"[14]

என்கிறார் புலவர்.

நார்முடிச்சேரல், வீரரது புண்பட்ட மார்புக்கு உவமை கூறுமிடத்து, இறைச்சியைத் துண்டிப்பதற்கு அடியிலே வைக்கும் மரக்கட்டையாகிய ஊனத்தைக் கூறுவார். கத்தி பட்டு மேடும் பள்ளமுமாய்க் கிடக்கும் ஊனம் போன்று மார்பு விளங்கிற்று. அம்மார்பைச் சந்தனத்தால் பூசி மறைத்தனர். இதனை,

"வளை தலை மாத்த தாழ் கரும் பாசவர்
எஃகு ஆடு ஊனம் கடுப்ப, மெய் சிதைந்து,
சாந்து எழில் மறைத்த சான்றோர் பெருமகன்"[15]

என்ற பாடலால் அறியலாம். மேலும் செல்வக்கடுங்கோ வாழியாதனுடைய வீரர்கள் வாளினால் முகத்தில் புண்பட்டனார். இவ்வாறு போரில் புண்பட்ட வீரர் முகமும், மார்பும் புலவாகள் போற்றும் புகழ்பெற்றதாகும். இன்றும் இப்பாடல் மக்கள் மனதில் நிலைத்து நிற்கும் தன்மையைக் கொண்டனவாக விளங்குகின்றது.

**போற்றுதலையுடைய மன்னர்கள்**

புலவரால் புகழப்படும், போற்றப்படும் புகழில் ஆர்வமுடையவர்களாகச் சங்க காலத்து மன்னர்கள் விளங்கினார்கள். சேர மன்னர்கள் அனைவரும் புலவரால் பாடப்பெறும் புகழுடையவர் ஆயினர். இதனை,

"................................... சான்றோர்
வண்மையும், செம்மையும், சால்பும், அறனும்,
புகன்று புகழ்ந்து அசையா நல் இசை,
நிலம் தரு திருவின், நெடியோய் நின்னே"[16]

என்ற அடிகளின் மூலம் பெருங்குன்றூர் கிழார் இரும்பொறையைப் புகழ்ந்து பாராட்டியுள்ளதை உணரமுடிகிறது.

"வாய்மொழி வாயர் நின் புகழ் ஏத்த் " (பதிற். 37)

என்ற அடியின் மூலம் காப்பியனார் நார்முடிச்சேரலைப் போற்றி உள்ளார். மேலும்,

"கெடாஅ நல்இசை நிலைஇத்
தவா அலியரோ, இவ் உலகமோடு உடனே "[17]

என்ற அடிகளின் வழி குமட்டூர்க் கண்ணனார் இமயவரம்பனை வாழ்த்தும் வாழ்த்துரையையும் அறியமுடிகின்றது. இவ்வாறு சங்ககாலத்தில் சேர மன்னர்கள் புலவரால் போற்றப்படுவதையும், புகழப்படுவதையும் பெரிதும் விரும்பினார்கள்.

**கள்ளுண்டு மகிழ்தல்**

அக்காலத்தில் மக்கள் திருவிழாவின் போதும், விருந்தின் போதும் தம் வீட்டிற்கு வரும் இரவலர்கள் அனைவருக்கும் வகைவகையான கள் வரிசையாக அளித்தனர். அவ்வாறு கொடுக்கப்பட்ட கள், பாலைப்பண்கள் ஒவ்வொன்றையும் மாறி மாறி இசைத்தது போல் உள்ளது. மிகுதியாகக் கள்ளை அளித்தமை சேறுசெய் மிகுமழைக்கு உவமிக்கப்பட்டுள்ளது. பூவும், இஞ்சியும், விரையும் ஊட்டப்பட்ட கள்ளினை ஆடவரும், மகளிரும் உண்டு மகிழ்ச்சியில் திளைத்தனர். மன்னனின் நாண்மகிழ் இருக்கையாகிய திருவோலக்கக் காட்சியைக் கண்டு மகிழ்ந்தனர். இதனை,

"தீம் தொடை நரம்பின் பாலை வல்லோன்
பையுள் உறுப்பின் பண்ணுப் பெயர்த்தாங்கு,
சேறு செய் மாரியின், அளிக்கும் நின்
சாறு படு திருவின் நனை மகிழானே"[18]

என்ற அடிகளின் மூலம் அறிய முடிகிறது. செவ்வியல் இலக்கியத்தின் பண்பான மகிழ்ச்சியும் இங்கு சிறப்புற சித்தரிக்கப்பட்டுள்ளது.

**விருந்தோம்பல்**

பண்டைத் தமிழ் வேந்தர்கள் வேள்வியையும், விருந்தையும் ஒரு தன்மையாகவே உணாரந்தனர். தெய்வங்களுக்கு விருந்தளிப்பது வேத வேள்வி. மக்களுக்கு உணவளிப்பது விருந்து. அக்கால மக்கள் வருகின்றவாகளைத் தடுக்காமல் அன்புடன் உண்டு செல்லும்படி வேண்டிக் கொண்டனர். விருந்தினாகள் திரும்பிப் போகாமல் இருந்து உண்ணும் பொருட்டும் ஆட்டு வணிகர் இறைச்சி வெட்டும் கருவியினால் வெட்டி எடுத்த சிறந்த மாமிசத்தைக் குய்யென்ற ஓசையுடன் பொரித்து எடுத்தனர். இவ்வாறு நகரின் நடுவிலே சமைக்கின்ற அவ்வேள்வியிலிருந்து கடலொலிபோல, சமைக்கின்ற ஓசை எழுந்தது என்கிறார் புலவர். இதனை,

"வருநர் வரையார் வாரவேண்டி
விருந்து கண்மாறாது உணீஇய, பாசவர்
ஊனத்து அழித்த வால்நிணக் கொழுங்குறை
குய்யிடுதோறும் ஆனாது ஆர்ப்ப,
கடல் ஒலி கொண்டு, செழுநகர் வரைப்பின்
நடுவண் எழுந்த அடு நெய் ஆவுதி"[19]

என்கிறார் புலவர். பண்டைத் தமிழ் வேந்தர்கள் வேள்வியையும், விருந்தையும் ஒரு தன்மையாகவே உணர்ந்தனர் என்பதற்கு இப்பாடல் சான்றாகும். இப்படிப்பட்ட உயர்ந்த கருத்துக்கள் கொண்ட பாடல்கள் பதிற்றுப்பத்தில் நிறைந்து காணப்படுகின்றன. இவ்வாறு, இப்பாடல்கள் பொதுமைப்பண்பு கொண்டுள்ளமையோடு, செவ்வியல் பண்புகளான உயர்சிந்தனையுடன் நிலைபேறு உடையனவாக விளங்குகின்றன.

**உலகுடன் ஒன்றி வாழ்தல் பண்பாடு**

பழந்தமிழர் பண்பாடு மிக உயர்ந்தது. உலகமெல்லாம் பாராட்டிப் பின்பற்றக் கூடியது. தமிழ் மக்கள் உலகத்தை ஒன்றென்று கருதினார். உலக மக்களை ஒரே குலத்தவராக எண்ணினர். எல்லா ஊர்களும் எம்முடைய சொந்த ஊர்கள். எல்லா மக்களும் எம்முடைய உறவினர்கள். நன்மையும், தீமையும் பிறரால் வருவன அல்ல. யாம் இன்புறுவதும் துன்புறுவதுங் கூட அவை போலத்தான் இறத்தல் இயற்கை. ஆகையால் இவ்வுலக வாழ்வு இனிமையானது என்று மகிழவுமாட்டோம். கடுஞ்சினத்தால் இவ்வாழ்வு துன்பமுடையது என்று வெறுக்கவுமாட்டோம். இதனை,

> "யாதும் ஊரே; யாவரும் கேளிர்;
> தீதும் நன்றும் பிறாரதர வாரா;
> நோதலும் தணிதலும் அவற்றோரன்ன;
> சாதலும் புதுவது அன்றே; வாழ்தல்
> இனிது என மகிழ்ந்தன்றும் இலமே; முனிவின்,
> இன்னாது என்றலும் இலமே;"[20]

என்ற பாடலில் கணியன் பூங்குன்றனார் உலக சமாதானத்தை நிலை நாட்டும் உயாந்த குறிக்கோளுடைய ஒப்பற்ற நிலையை விளக்கி உள்ளார். ஆகவே இப்பாடல் செவ்வியல் பண்புகளான உயாசிந்தனைக் கருத்துகளையும், உலகப்பொதுமைப் பண்பினையும் தலைமைப் பண்பினையும் கொண்டு விளங்குகின்றது.

முன்னோர் கூறிய கருத்தைப் பின்னோர் ஏற்றலும் என்ற செவ்வியல் பண்பு போல திருவள்ளுவர் புறநானூற்றுப் பாடலின் கருத்தை விளக்குவதாகவே பின்வரும் குறள் ஒன்றினை அமைத்துள்ளார்.

"யாதானும் நாடாமால் ஊராமால் என்ஒருவன்
சாந்துணையும் கல்லாத வாறு"[21]

என்ற குறளும் மேலே கூறிய பாடலின் கருத்தையே விளக்குவதை உணர முடிகின்றது.

**தனி மனித ஒழுக்கம்**

ஒருவனுடைய ஒழுக்கப்பண்பே அவனுக்கு மேன்மையும், சிறப்பையும் தருவதால் உயிரினும் மேலாக ஒழுக்கம் போற்றப்பட வேண்டுமென்பது வள்ளுவரின் கொள்கையாகும். இதனை,

"ஒழுக்கம் விழுப்பம் தரலான் ஒழுக்கம்
உயிரினும் ஓம்பப் படும்"[22]

என்ற குறளின் மூலம் அறியலாம். குடும்பம், சமூகம், நாடு இவை அனைத்தும் ஆடவனின் உயரிய சிந்தனையால் வழி நடத்தப்படுவதால் ஆடவனின் ஒழுக்கம் உயாவாகப் போற்றப்படுகிறது. ஆடவர்கள் நல்லவர்களாகவும் ஒழுக்கமுடையவர்களாகவும் காணப்படும் போதுதான் நாடும், வீடும், சமூகமும் செழித்து வளரும். இதனைப் புறநானூற்றில் பின்வரும் பாடல் வழி உணர முடிகிறது.

"நாடாகொன்றோ; காடாகொன்றோ:
அவலாகொன்றோ; மிசையாகொன்றோ;
எவ் வழி நல்லவர் ஆடவர்,
அவ் வழி நல்லைளு வாழிய நிலனே் "[23]

என்கிறார் ஔவையார். உயர்ந்த பண்பையும், ஒழுக்க நெறிகளையும் கொண்ட ஒருவனின் ஆளுமைத்திறன், பண்படாத சமூகமாக இருந்தாலும் அவற்றைச்

செழிப்பான, வளமிக்க ஒரு சமூகமாக மாற்ற முடியும் என்பது ஔவையாரின் கருத்தாகும். இவ்வாறாக எக்காலத்திற்கும் பொருந்தும் என்றும் நிலைத்து நிற்கும் ஒழுக்கப் பண்பையும், உயரிய சிந்தனையைக் கூறும் செவ்வியல் பண்பையும் கொண்டதாக இப்பாடல் விளங்குகின்றது.

**அறம்**

அனைவரையும் ஒன்றாகக் கருதி விருப்பு வெறுப்பு இன்றி சமமாக நீதி வழங்கும் அறநெறியைப் பின்பற்றுவதே ஆட்சியின் அடிப்படைக் கடமையாகும். அதிகாரச் செருக்கால், படைபலத்தால் மக்களை அடக்கி ஆள முடியாது. இவ்வுண்மையைப் புறநானூற்றுப் பாடல் உணர்த்துகின்றது. இதனை,

"கடுஞ் சினத்த கொல் களிறும்; கதழ் பரிய கலி மாவும்,
நெடுங் கொடிய நிமிர்தேரும், நெஞ்சு உடைய புகன்மறவரும், என
நான்குடன் மாண்டது ஆயினும், மாண்ட
அற நெறி முதற்றே, அரசின் கொற்றம்;"[24]

என்கிறார் மருதன் இளநாகனார். அரசாட்சியின் வெற்றி படைபலத்திலே இல்லை. யானைப்படைகள் இருந்தால் என்ன? விரைந்து பாயக்கூடிய குதிரைப்படைகள் குவிந்திருந்தால் என்ன? நீண்ட கொடிகள் பறக்கின்ற உயர்ந்த தோப்படைகள் திரண்டிருந்தால் தான் என்ன? கலங்காத நெஞ்சமே, புகழும் உடைய காலாட் படைகள் கணக்கின்றியிருந்தால்தான் என்ன? இப்படிப்பட்ட வலிமையான நான்கு படைகளைப் பெற்றிருந்தாலும் வெற்றியில்லை. அரசாட்சியின் வெற்றி அறநெறி வழியாக ஆட்சிபுரிவதால் மட்டுமே நாட்டின் இறையாண்மையைப் பாதுகாக்க முடியும் என்று இப்பாடல் வழியாக விளக்கியுள்ளார். ஆகவே இப்பாடல் செவ்வியல் பண்புகளான பொதுமைப்பண்பும், உயரிய அறக்கருத்தும் தலைமைப்பண்பும் கொண்டதாக விளங்குகின்றது.

**பழிக்கு அஞ்சும் பண்பு**

உயிரைவிட மேன்மையாகக் கருதப்படுவது ஒழுக்கம். ஒழுக்கத்தில் சிறந்ததாகக் கருதப்படுவது மானம் என்னும் தன்மான உணர்வு. புகழ் உண்டாகுமானால் தன் உயிரையும் கொடுப்பார்கள். பழி உண்டாகுமானால் உலகையே பரிசாகக் கொடுத்தாலும் தவிர்க்கும் பண்புகள் கொண்டவர்கள் சான்றோர்கள். இதனை,

‟பிறர் அஞ்சுவது அஞ்சி,
புகழ் எனின், உயிரும் கொடுக்குவர், பழிஎனின்,
உலகுடன் பெறினும், கொள்ளலர்;”[25]

என்கிறார் கடலுள் மாய்ந்த இளம்பெருவழுதி. ஆகவே இப்பாடல் உலக பொதுமைப்பண்பு கொண்டு விளங்குகின்றது.

**மறப்போரில் மகளிர்**

மகளிர் போர்களம் புகுந்து போரிடவில்லை எனினும் மறவுணர்வு மிக்கவர்களாக இருந்தனர். தங்கள் குடும்பத்திலுள்ள ஆடவர்களைப் போரிடத் தூண்டி நின்றமையைக் காணலாம்.

‟ஒரு மகன் அல்லது இல்லோள்
செருமுகம் நோக்கிச் செல்க என விடுமே”[26]

என்னும் இப்பாடலில் தன் தந்தை, கணவன் என அடுத்தடுத்துப் போரில் இறந்தாலும் தனது ஒரே மகனைச் செருமுகம் நோக்கிச் செல்லத்தூண்டும் மகளிர் மற உணர்வு வெளிப்படுகிறது. மேலும்,

"......................... சிதைந்து வேறு ஆகிய

படு மகன் கிடக்கை காணாஉ,

ஈன்ற ஞான்றினும் பெரிது உவந்தனளே " (புறம். 278)

என்று கூறும் பாடல் அடிகளால் தன் மகன் போர்களத்தில் புறமுதுகு காட்டிருந்தால் அவனுக்குப் பாலூட்டி வளர்த்த மார்பை அறுத்து எறிவேன் என வஞ்சினம் கூறும் மகளிரின் மறப்பண்பையும் காண முடிகின்றது. இப்பாடல் பெண்களின் வீரம் கூறும் பாடலாகவும், மரபுப்பண்பைக் கொண்டதாகவும் விளங்குகின்றது.

**நன்னெறி**

இவ்வுலகிற்கு நன்னெறியை உணாரத்தும் பொருட்டு நரிவெரூஉத் தலையார் என்ற புலவர்,

"நல்லது செய்தல் ஆற்றீர் ஆயினும்,

அல்லது செய்தல் ஒம்புமின்;"[27]

என்று அறிவுரை கூறியுள்ளார். பிறர்க்கு நல்லது செய்தல் என்பது அனைவராலும் இயலாத ஒன்று. ஆனால் தீயன செய்யாதிருத்தல் எல்லோருக்கும் இயலும். ஆதலால் நல்லது தான் செய்ய இயலாவிடினும், தீயனவாவது செய்யாதிருங்கள் என்று வாழ்வின் நெறியினை எடுத்துரைக்கின்றார். தீமை செய்யாமல் இருப்பதே நல்ல ஒழுக்கம். அதுவே நல்ல வழிக்கு இட்டுச் செல்லும் என்று வலியுறுத்துகின்றார். மேலும்,

"அறவினை யன்றே விழுத்துணை அத்துணை

புணைகை விட்டோர்க்கு அரிதே துணை அழத்"[28]

என்னும் அடிகளால் ஒருவன் இறந்த பிறகு அவனுடன் துணையாகப் போவது நல்லறம் மட்டுமே. ஆகவே இம்மைக்கும் மறுமைக்கும் வித்தாகும் நல்லறம் மட்டுமே செய்ய வேண்டும் என்கிறார் புலவர்.

இப்பாடல்கள் எல்லாச் சமூகத்தினருக்கும் பொருந்தும் வகையில் உள்ளன. ஆகவே பொதுமைப் பண்பு கொண்டு விளங்குகின்றன.

**இரத்தல் இழிவு**

பண்டைத் தமிழ் மக்கள் உழைப்பால் முயன்று வாழும் நிலையுடையவர்கள். அவ்வாறு முன்னேறாமல் இரந்து உண்டு வாழ்தல் இழிவெனக் கருதினார்கள். இதனை,

"ஈ என இரத்தல் இழிந்தன்று; அதன் எதிர்,
'ஈயேன்' என்றல் அதனினும் இழிந்தன்று;
'கொள்' எனக் கொடுத்தல் உயர்ந்தன்று; அதன் எதிர்,
'கொள்ளேன்' என்றல் அதனினும் உயர்ந்தன்று"[29]

என்கிறார் புலவர்.

ஈயென இரத்தல் இழிவு என்றும், இல்லை என்று மறுத்தல் அதனினும் இழிவானது. வறியோரைக் கண்டால் அவர்கள் கேட்கும் முன்னே கொடுப்பது உயர்ந்த குணம். அவ்வாறு கொடுக்கும் போது அதை வேண்டாம் என்று மறுத்தல் அதனைவிடவும் உயர்ந்தது என்பதை இப்பாடல் உணர்த்துகின்றது.

சான்றோர்கள் தமக்கு வறுமை நேர்ந்த காலத்திலும் பிறரிடம் சென்று ஈயென இரப்பதற்கு நாணுவர். இதனை,

"ஈ என இரத்தலோ அரிதே"[30]

என்ற அடியின் மூலம் கொடு என்று கேட்பது கடினமானது தான், எனினும் உனது பெருங்குணத்தை எண்ணியே வந்துள்ளேன் எனப் புலவர் பாடியுள்ளார். ஆகவே இக்கருத்து செறிந்த பாடல் அனைத்து மக்களும் பின்பற்ற வேண்டியதாகத் திகழ்கிறது. ஆகவே இப்பாடல் தலைமைத்தன்மையுடையதாக விளங்குகின்றது.

**இன ஒற்றுமை**

ஒரு குடியில் பிறந்த நலங்கிள்ளி, நெடுங்கிள்ளி என்ற இருவரும் சண்டையிட்டுக் கொள்ளும் பொழுது கோவூர்கிழார் அவ்விருவரையும்,

"ஒருவீர் தோற்பினும், தோற்ப நும் குடியே;
இருவீர் வேறல் இயற்கையும் அன்றே"[31]

என்று சமாதானம் செய்விக்கின்றார். போரில் யாராகிலும் ஒருவர் தோற்பது அல்லது ஒருவர் வெல்வது இயற்கை. ஆனால் ஒரு குடியில் பிறந்த நீவிர் யார் தோற்றாலும் அது உம் குடிக்கே இழுக்கு. மற்றவர்க்கும் இச்சொல் நகைப்பிற்கு உரியதாகும். ஆதலால் ஒரு குடியில் பிறந்த சகோதரர்கள் இன ஒற்றுமை காக்க வேண்டும் என்று கூறுகின்றார். இப்பாடல் கருத்து இன்றும் மக்களை சண்டையிட்டுக் கொள்ளாமல் சமாதானமாகச் செல்ல உதவும் வகையிலே உள்ளது. ஆகவே இப்பாடல் வாழ்வியல் உண்மைகளை வெளிக்காட்டி நிற்கின்றது.

**பிறர் நலம் பேணல்**

தன்னலமின்றி பிறர் நலம் பேணி உழைக்கும் சான்றோர்களின் பண்புகளை எடுத்துக் கூறுமுகமாக உயர்ந்த பண்புகளை அழுத்தம் பெறக்காட்டுகிறார் புலவர். இதனை,

"உண்டால் அம்ம, இவ்வுலகம் - இந்திரா
அமிழ்தம் இயைவது ஆயினும் இனிது எனத்
தமியர் உண்டலும் இலரே�ளூ முனிவு இலர்;
துஞ்சலும் இலர்ளூ பிறர் அஞ்சுவது அஞ்சி,
புகழ் எனின், உயிரும் கொடுக்குவர், பழியெனின்,
உலகுடன் பெறினும், கொள்ளலர்ளூ அயர்விலர்;
அன்ன மாட்சி அனையர் ஆகி,
தமக்கென முயா நோன் தாள்,
பிறர்க்கு என முயலுநர் உண்மையானே"[32]

என்கிறார். அமிழ்தம் கிடைத்தாலும் தனியே உண்ணுதல் கூடாது, பிறரிடம் வெறுப்புக் கொள்ளுதல் கூடாது, பிறர் துன்பம் கண்டு இரங்குதல் வேண்டும். புகழை விரும்புதல் வேண்டும், பழியை ஏற்றுக் கொள்ளுதல் கூடாது, சோர்வு அடையாது, தன்னலம் கருதாது உழைத்தல் வேண்டும் என்பன போன்ற பண்புகளைச் சான்றோர்களுக்கு உரியனவாக இப்பாடல் கூறுகின்றது.

எப்பொழுதும் பிறர் நன்மைக்காகவே உழைக்கும் பண்பு உள்ளவர்களாகவும், தம் கொள்கையிலே உறுதியுள்ளவர்களாகவும் திகழ வேண்டும் என்ற மக்கள் பண்பையே இப்பாடல் சுட்டி நிற்கின்றது. இந்தபாடல் தமிழ்நாட்டினாக்கு மட்டும் கூறியதன்று. தமிழாக்கு மட்டும் சொல்லியதன்று. உலக மக்கள் அனைவருக்கும் எடுத்துரைப்பது போல் அமைந்துள்ளது. ஆகவே இப்பாடல் செவ்வியல் பண்புகளுள் ஒன்றான நிலைத்த உண்மைகளைக் கொண்டு விளங்குகின்றது.

**செய்ந்நன்றி அறிதல்**

செய்ந்நன்றி அறிதலின் சிறப்பைப் புறநானூறுப்பாடல் பின்வருமாறு கூறுகின்றது. இதனை,

"நிலம் புடை பெயர்வது ஆயினும், ஒருவன்
செய்தி கொன்றோர்க்கு உய்தி இல் என,
அறம் பாடின்றே - ஆயிழை கணவ்"[33]

என்கிறார் புலவர். ஒருவன் செய்த நன்றியை மறந்தவர்க்கு நற்கதி இல்லை, நரகம் தான் கிடைக்கும் என இப்பாடல் செய்ந்நன்றி மறத்தலை வன்மையாகக் கண்டிக்கிறது.

இதே கருத்தினையே திருக்குறளும் பின்வருமாறு எடுத்து இயம்புகின்றது.

"எந்நன்றி கொன்றார்க்கும் உய்வுண்டாம் உய்வில்லை
செய்ந்நன்றி கொன்ற மகர்க்கு"[34]

என்ற குறளின் மூலம் உணரலாம். இவ்வாறு சங்க இலக்கியம் உலக மக்கள் அனைவருக்கும் உரியது என்று கருதத்தக்க வண்ணம் பொதுமை நிலையில் மேற்காட்டியபடி பல நிலைபேறுடைய கருத்துக்களை எடுத்துரைக்கின்றது.

**ஈகைப் பண்பு**

தம்மிடம் இருக்கும் பொருளைப் பிறருக்குக் கொடுத்தலாகிய கொடை, வள்ளமை முதலியன மாந்தரிடம் இருக்க வேண்டிய ஒரு பண்பாகும். இப்பண்பை மறைமுகமாக வலியுறுத்தும் பொருட்டு,

"செல்வத்துப் பயனே ஈதல்;
துய்ப்பேம் எனினே, தப்புந பலவே"[35]

என்கிறது புறநானூறு. மாந்தர்கள் தம்மிடமுள்ள செல்வத்தைப் பிறர்க்குக் கொடாது, தாமே துய்ப்போம் என்றால் அஃது அவர்களிடம் நில்லாது. அவர்களை விட்டுச் சென்று விடும். செல்வத்தின் பயனே ஈதலாகும். பிறாக்குக் கொடுக்கும்

பொழுது தான் செல்வம் வளரும் தன்மை உடையதாகிறது. ஆதலால் பிறர்க்குப் பொருளைக் கொடுக்கும் ஈகையாகிய பண்பை மேற்கொள்ள வேண்டும் என்று கூறுகின்றது இப்பாடல். மேலும்,

"நீர் இன்று அமையா யாக்கைக்கு எல்லாம்
உண்டி கொடுத்தோர் உயிர் கொடுத்தாரே;"[36]

என்ற பாடலின் மூலம் இவ்வுலகமானது நீரின்றமையாது; அதுபோல, உயிர்கள் உணவின்றி வாழ முடியாது. ஆதலால் பிறர்க்கு உணவு கொடுத்தல் அவர்களுக்கு உயிர்கொடுத்தல் போன்றதாகும் என்கிறது. இவ்வாறான நிலைத்த உண்மைகளைக் கூறுவதால் இவை மரபுடைமை பண்பைக் கொண்டு விளங்குவதை உணர முடிகின்றது.

**மக்கள் நிலையறிந்து வரிவிதித்தல்**

அன்பின்றி குடிமக்களிடம் பொருள் பறிப்பதையே நோக்கமாகக் கொண்ட அரசன். யானை புகுந்தபுலம் போன்றவன். அவனும் உண்டு வாழ மாட்டான். அவனுடைய நாடும் நாசமாகும். இதனை,

"காய் நெல் அறுத்துக் கவளம் கொளினே;
மா நிறைவு இலலதும், பல் நாட்கு ஆகும்;
நூறு செறு ஆயினும், தமித்துப் புக்கு உணினே,
வாய் புகுவதனினும் கால் பெரிது கெடுக்கும்;
அறிவுடை வேந்தன் நெறியறிந்து கொளினே,
கோடி யாத்து, நாடு பெரிது நந்தும்;
மெல்லியன் கிழவன் ஆகி, வைகலும்
வரிசை அறியாக் கல்லென் சுற்றமொடு,
பரிவு தப எடுக்கும் பிண்டம் நச்சின்,

யானை புக்க புலம் போலத்,

தானும் உண்ணான், உலகமும் கெடுமே”[37]

என்கிறார் புலவர். இப்பாடலின் கருத்து எந்தக் காலத்திலும் அழியாமல் நிற்கும் அரும் பொருள் கொண்டது. மக்களுக்காக வாழும் அரசாங்கம் எதுவும் இவ்வுண்மையை மறக்க முடியாது. மதிக்காமற் புறகணிக்கவும் முடியாது. இப்பாடல் அந்தக் காலத்துக்கும் சரி, இக்காலத்துக்கும் சரி ஏற்புடையதாகவே உள்ளது. ஆகவே இப்பாடல் தொன்மைத்தன்மை உடையதாகவும், உயாசிந்தனை உடையதாகவும் விளங்குகின்றது.

**நரையின்றி வாழ்தலுக்கு சிறந்த ஆட்சியும் ஒரு காரணம்**

உங்கள் வயது பலவாகியும் இன்னும் நரையில்லாமலிருக்கின்றார்களே இது எப்படி முடிந்தது என்று கேட்கின்றீர்களா? என்பதற்குப் பதில் தருகிறார் புலவர் பிசிராந்தையார். என் மனைவி சிறந்த குணமுடையவள். என் மக்கள் அறிவு நிரம்பியவாரகள். என் மேற்பார்வையில் வேலை செய்யும் தொழிலாளர்கள் என் உள்ளம் போல் ஒத்துழைக்கின்றனர். எனது நாட்டு மன்னவனும் குடிமக்களுக்கு கொடுமை செய்யாமல் காப்பாற்றுகின்றான். நான் வாழும் ஊரிலே அறிவும் அடக்கமும் உள்ள ஆன்றோர்கள் பலர் வாழ்கின்றனர். அவர்கள் சிறந்த கொள்கையை உடையவர்கள். இதனால் தான் நான் கவலை இன்றி நரை திரையின்றி நன்றாக வாழ்கின்றேன் என்று கூறுகின்றார் புலவர். இதனை,

“யாண்டு பல ஆக, நரை இல ஆகுதல்

யாங்கு ஆகியா? என வினவுதிர் ஆயின்,

மாண்ட என் மனைவியொடு, மக்களும் நிரம்பினர்;

யான் கண்டனையர் என் இளையரும்; வேந்தனும்

அல்லவை செய்யான், காக்கும்; அதன் தலை

ஆன்று அவிந்து அடங்கிய கொள்கைச்
சான்றோர் பலர், யான் வாழும் ஊரே”[38]

என்கிறார் பிசிராந்தையார். உயர்ந்த நாடு என்றால் அந்த நாட்டிலே உள்ளோர் அனைவரும் கல்வி கற்றிருக்க வேண்டும். அறிஞர்களின் ஆதரவைக் கொண்டு அரசாட்சி நடைபெற வேண்டும். எத்தகைய அநீதிக்கும் அரசாட்சி இடந்தரக் கூடாது. நாட்டைப் பட்டினியும் நோயும் சூழ்ந்து பயமுறுத்தாமல் பாதுகாக்க வேண்டும். இத்தகைய நாட்டில் உள்ளவர்கள் தாம் உள்ளத்திலே ஒரு கவலையுமின்றி உடல் உரமுடன் நரை திரையின்றி நீண்ட நாள் உயிர் வாழ்வார்கள். இவ்வாறான உயரிய கருத்தை இப்பாடல் எடுத்துக்காட்டுகின்றது. ஆகவே இப்பாடல் செவ்வியல் பண்புகளான பொதுமைப்பண்பையும், உயாசிந்தனையையும் கொண்டு விளங்குகின்றது.

**மன்னனும் மக்களும் அறநெறியோடு வாழ்தல்**

அறநெறி முதற்றே அரசின் கொற்றம் என அரசரின் ஆட்சியானது அறநெறிப்பட்டு நடக்க வேண்டும் என்கிறது புறநானூறு. அரசர்கள் போர் செய்யும் போது சில போர் அறங்களையும் பின்பற்றினார்கள். இவ்வுலகில் அரசர்கள் பெற்ற செல்வம், அறம், பொருள், இன்பங்களை ஆற்றுவதற்கேயாகும். அவற்றைச் செய்யாவிடில் குற்றம் பொருந்திய பிறப்பை உண்டாக்கும். ஆதலால் அறத்தைச் செய்க என்கிறார் புலவர். இதனை,

“அதனால், அறனும் பொருளும் இன்பமும் மூன்றும்
ஆற்றும், பெரும் நின் செல்வம்;
ஆற்றாமை நிற் போற்றாமையே”[39]

என்கிறார் புலவர். மேலும்,

"சிறப்புடை மரபின் பொருளும் இன்பமும்
அறத்து வழிப்படூஉம் தோற்றம் போல"[40]

என்கிறார் புலவர். இவற்றுள் அரசாட்சி அறவழிப்பட்டு நடக்க வேண்டும் என்பது மன்னனுக்கே உரித்து. ஆனால் மன்னன் மட்டுமன்றி மக்களும் அறச்சிந்தனையுடன் வாழ வேண்டும் என்பதைச் சங்கப் புறப்பாடல்கள் சுட்டுகின்றன. இவ்வாறு அறநெறியை உணர்த்தும் பாடலால் இவை தலைமைப் பண்பும், பொதுமைப்பண்பும், உயரிய சிந்தனையும் கொண்டு இப்புறப் பாடல்கள் விளங்குகின்றன.

உலகத்தில் நடைபெறும் நிகழ்ச்சிகளை எடுத்துக்காட்டி மக்களுக்கு உலக உண்மைகளைப் புலவர் பின்வருமாறு உணார்த்துகின்றார். இதனை,

"ஓர் இல் நெய்தல் கறங்க, ஓர் இல்
ஈர்ந் தண் முழவின் பாணி ததும்ப,
இன்னாது அம்ம, இவ்வுலகம்;
இனிய காண்க, இதன் இயல்பு உணர்ந்தோரே"[41]

என்கிறார் புலவர். ஒரு வீட்டில் சாப்பறை ஒலிக்கும். மற்றொரு வீட்டில் திருமணத்தில் மத்தள ஓசை கேட்கும். இவ்வுலகத்தின் இயற்கை கொடுமையானது. ஆதலால் இவ்வுலக இயல்பை அறிந்தவர்கள் நன்மை தரும் செயல்களைக் கண்டறிந்து நற்செயல் செய்து இன்பம் அடைக என்கிறார் புலவர். இவ்வாறு இன்பமும், துன்பமும் மாறி மாறி வருதல் உலக நடப்பு. இவை தான் உலக வாழ்வு என உலக இயல்பினை எடுத்துக்காட்டி மக்கள் தாம் வாழும் காலத்தில் நன்மை தரும் செயல்களைச் செய்ய வேண்டும் என்று அறிவுறுத்துகிறது இப்புறப்பாடல். இப்பாடல் பொதுமைப்பண்புடன் திகழ்கிறது.

**மன்னர்களின் வாய்மையின் பண்பு**

வாய்மை என்னும் சொல்லுக்கு உண்மை, மெய்ம்மை, சொன்ன சொல் தவறாமை எனப்பல பொருண்மைகள் உண்டு. "பிறர்க்குத் தீங்கு பயவாதவை வாய்மையாகும்"[42] எனத் திருவள்ளுவர் கூறியுள்ளார். பழங்காலச் சேரமன்னர்கள் பொய்யாமை உடையவராய்த் திகழ்ந்தனர். பல ஆண்டுகள் உயிர்கள் துன்புறுமாறு மழை பெய்யாது பொய்த்தாலும், இமயவரம்பன் நெடுஞ்சேரலாதன் தன்னை நாடி விரும்பி வந்த பரிசிலர் விரும்பும் பொருளைக் கொடுப்பதில் எப்போதும் பொய்க்கமாட்டான். இவனது வாய்மைப் பண்பை குமட்டூர்கண்ணனார்,

"தண்இயல் எழிலி தலையாது மாறி
மாரி பொய்க்குது ஆயினும்
சேர லாதன் பொய்யலன் ஆயினும்"[43]

எனப் பாராட்டுகிறார்.

செல்வக் கடுங்கோ வாழியதனின் பல்வேறு மாண்புகளைக் கபிலர் பாராட்டுகிறார். இந்நிலவுலகம் தன் இயல்பை இழந்து தன் கூறுபாடு எல்லாம் நீங்கும் ஊழிக்காலமாயினும் வாழியாதன் தான் சொன்ன சொல் மட்டும் எப்போதும் தவறாத வாய்மையுடையவன் என்பதை,

"நிலம்திறம் பெயரும் காலை ஆயினும்
கிளந்த சொல்நீ பொய்ப்பு அறியலையே"[44]

என்ற கபிலரின் பாடலால் அறியமுடிகின்றது. வாழியாதலின் வாய்மைப் பண்பைக் கபிலர் மற்றொரு பாடலிலும் பாராட்டியுள்ளார்.

"நகையினும் பொய்யா வாய்மை பகைவர்
புறஞ்சொல் கேளாய் புரைநீர் நன்மை"[45]

என்றார். அதாவது விளையாட்டிற்குக் கூட வாழியாதன் பொய் கூறுதலை அறியான். அவன் பகைவர் கூறும் புறங்கூறலைக் கேளான். குற்றமற்ற தெளிவான அறிவுடையவன் என்றெல்லாம் கபிலர் பாராட்டுவதிலிருந்து வாழியாதனின் வாய்மைப்பண்பு புலப்படுகிறது. இரும்பிடர்த்தலையார் நிலம் பெயரினும் நின்சொல் பெயரல் என்று கருங்கை ஒள்வாள் பெரும்பெயர் வழுதியை நோக்கிக் கூறியது இங்கு நினைவிற் கொள்ளல் வேண்டும். நிலம் பிறழ்ந்து பெயர நேர்ந்தாலும் சொன்ன சொல் தவறக் கூடாது என்று அறிவுறுத்தினார்.

**குடிமக்களைப் பாதுகாக்கும் பண்பு**

அரசனின் கடமைகள் இரண்டாகும். ஒன்று நாட்டுக் குடிமக்களைக் காப்பது. மற்றொன்று நீதி வழங்குவது. இவ்விரண்டு கடமைகளையும் அரசன் தன் இருகண்கள் போலக் கருதுதல் வேண்டும். ஓர் அரசன் குடிமக்களை நன்கு காப்பானேயானால், அவன் பகையரசரும் அவனுக்கு அடிபணிவர்.

பழங்காலச் சேர மன்னர்கள் தம்குடிமக்களைக் கண்ணும் கருத்துமாகப் பாதுகாத்தனர். குமட்டூர் கண்ணனார்

"...................... ஞாலத்து
கூலம் பகர்நர் குடிபுறந் தாராஅ
குடிபுறந் தருநர் பாரம் ஓம்பி"[46]

என்று இமயவரம்பன் நெடுஞ்சேரலாதனின் குடிகளைப் பாதுகாக்கும் பண்பைப் பாராட்டியுள்ளார். சேரலாதன் வணிகர் குடிகளையும், உழவர் குடிகளையும் பாதுகாப்பவன். அதனால் மேகமானது மழை தேவைப்படும் காலங்களில் பெய்விக்கும். எனவே, நோய்த் துன்பமும், பசித்துன்பமின்றி, மக்கள் பல வளங்களைப் பெற்று வாழ்ந்தனர். ஆகவே மக்களைக் காக்கும் மன்னன் நாட்டில்

இயற்கையும் இணைந்து உதவும் என்பது புலப்படுகிறது. ஆடுகோட்பாட்டுச் சேரலாதன் நாட்டுமக்களை நன்கு காப்பவன். 'தன்னைச் சார்ந்தோர்க்கு அரணம்' என்று காக்கைப்பாடினியார் பாராட்டியுள்ளார். அதேசமயம் அறியாமல் போர்புரிந்து, தோற்றுக் கப்பம் கட்டும் பகைநாட்டினரையும் அவன்தான் காக்க வேண்டுமென வேண்டுகிறார். அவரது வேண்டுகோளை,

"பாடுசால் நன்கலம் தருஉம்
நாடுபுறந் தருதல் நினைக்குமார் கடனெ!"[47]

என்ற பாடலில் அறிந்துகொள்ள முடிகிறது. எனவே, அக்கால அரசர்கள் தங்கள் நாட்டு மக்களுடன் பகை நாட்டு மக்களையும் காத்த மனிதநேய மாண்பினை அறிகிறோம்.

**சேர மன்னர்களின் ஆற்றல் பண்பு**

பொதுவாக மூவேந்தருள் சேரர் ஆற்றல் பண்பில் தலைசிறந்து விளங்கினர் . இமயவரம்பன் நெடுஞ்சேரலாதன் டுபராற்றல் படைத்தவன். இமயத்தில் வில்பொறிந்து, இமயம் முதல் குமரிவரை ஆண்ட திறம் படைத்தவன். நிலம், நீர், காற்று, வானம் ஆகிய நான்கும் போல, உன் பெருமையை, ஆற்றலை அறிந்து கொள்ளல் அரிதாகும் எனக் குமட்டூர்கண்ணனார் இமயவரம்பன் நெடுஞ்சேரலாதன் ஆற்றலைப் பாராட்டிப் பாடியுள்ளார். இதனை "நிலநர் வளிவீசும் என்ற நான்கின் அளப்பரியையே"[48] என்பதில் அறியலாம். நிலத்தின் அகலம், நீரின் ஆழம், காற்றின் வேகம், வானின் உயர்வு ஆகியன அளந்து அறிய அரியனவாகும். அவனது அளவற்ற ஆற்றலை 'அளப்பு அரியை' எனப் போற்றினார். 'இருகடல் நீரும் ஒருபகல் ஆடி' (3-வது பதிகம்) பல்யானைச் செல்குழுகுட்டுவனின் பேராற்றலைப் பாலைக்கௌதமனார் பாராட்டியுள்ளார்.

காப்பியாற்றுக் காப்பியனார். "போர்மிகு குரிசில்"[49] என்று களங்காய்கண்ணி நார்முச் சேரனின் பேராற்றலை வியந்து பாடினார்.

**சேர மன்னர்களின் ஆட்சியின் மாட்சி**

இமயவரம்பன் நெடுஞ்சேரலாதனின் தந்தையாக உதியஞ்சேரலாதன் நிலையான புகழையும், அறநெறிக்கு மாறாக அரசாணை உடையவன். இதனை

"மன்னிய பெரும்புகழ் மறுவில் வாய்மொழி
இன்னிசை முரசின் உதியஞ் செரலாதற்று"[50]

என்ற பாடலில் காணமுடிகின்றது. இமய வரம்பன் நெடுஞ்சேரலாதன் "இமிழ்கடல் வேலித் தமிழகம் விளங்கத் தன்கால் நிறிஇத் தகைநூல் சிறப்பின்"[51] என்ற வகையில் ஆட்சி செய்தானெனக் குமட்டுர் கண்ணனார் பாராட்டுகிறார். அதாவது, கடலால் சூழப்பட்ட தமிழகத்தின் சிறப்பானது உலகமெங்கும் விளங்கச் செய்த செங்கோலாட்சியை இமயவரம்பன் நெடுஞ்சேரலாதன் நிலைபெறச் செய்தான். உலகம் முழுவதும் தமிழகத்தின் பெருமை விளங்கியமைக்கு அவனது செங்கோலாட்சியே காரணம் என்பதால் அவனது ஆட்சியின் மாண்பு புலப்படும்.

"சினனே காமம் கழிகண் ணோட்டம்
அச்சம் பொய்ச்சொலல் அன்புமிக உடைமை
தெற்கடு மையொடு பிறவும் இவ்வுலகத்து
அறம்நெறி திகரிக்கு வழிநடை யாகும்
ஊழி உய்த்த உரவோர் உம்பல்!"[52]

என்று பல்யானைச் செல்குடு குட்டுவனிடம், பாலைக் கௌதமனார், அவனது முன்னோரின் நல்லாட்சியின் நற்பண்புகளைப் பாராட்டிப் பாடியுள்ளார். 'மிக்க சினம், பொய் பேசுதல், நட்டோரிடம் அதிக அன்பு, மிகுதியான தண்டனை அளித்தல் ஆகியன இவ்வுலகில் அறநெறிப்பட்ட அரசியல் நடத்தத் தடைகளாகும்.

இத்தடைகளாகிய குற்றங்கள் தம் நாட்டில் இல்லையாக்கி, அறத்தை மிகுதியாகச் செய்து, நல்லாட்சி செய்த பேரரசர் வழித் தோன்றலே!' என்று பாராட்டுகிறார். இதனால் இம்மன்னனின் முன்னோர் அறத்திற்கு மாறான தீமைகளை ஒதுக்கி, நல்லாட்சி புரிந்த மாட்சி புலப்படும். நீயும் அவர்களைப் போல முறையான ஆட்சி நடத்த வேண்டுமென்பது குறிப்பாகும். இதனால் சேரர் பரம்பரை மன்னரின் மாட்சிகள் தெரிகின்றன.

மேலும் சேரநாட்டு மக்கள் பிறரைத் துன்புறுத்திலர். பிறர் பொருளை விரும்பலர். குற்றமற்ற அறிவினர். செம்மைநெறி ஒஒழுகுபவர். தம்வாழ்க்கைத் துணையாய்ப் பிரிந்திலர். மூத்த யாக்கையினராயினும் நோயிலர். பலர்க்குப் பகுத்தளித்து உண்டு மகிழ்ந்தனர். கடலும் கானும் தந்தனவற்றைப் பிறர்க்கு வழங்குவர். இங்ஙனம் மக்கள் பண்புடன் வாழ்ந்தமைக்குச் சிறந்த அறிவுடன் மனஉறுதி கொண்ட உன் முன்னோரின் அறநெறியான ஆட்சியின் மாட்சியே காரணியாகும் என்றார். இதிலிருந்து மக்களின் நல்வாழ்க்கைக்கு மன்னரின் நல்லாட்சியே அடிப்படை என்பது விளங்கும்.

"அளப்பு அருமையின் இருவிசும்பு அனையை
.......................... படாமையின் முந்நீர் அனையை"[53]

என்று பாராட்டுகிறார். அவன் செங்கோல் ஆட்சியின் அரசியல் பிழை செய்யாதவன் என்று அவனது ஆட்சியின் மாட்சிக்கு அவனது இயற்கைக் குணங்களும் காரணியுமாய் அமைந்தன எனப் பாராட்டுகிறார்.

**மன்னர்களின் சான்றாண்மைத் திறன்**

சங்க இலக்கியத்தில் சான்றோன் என்ற சொல் வீரம் என்றே அழைக்கப்படுகிறது. திருக்குறள் கூட சங்க இலக்கிய நூலாகக் கருதும் தெ.பொ.மீ. 'சான்றோன்' எனும் சொல்லிற்கு வீரம் என்றே பொருள் கொள்கிறார்.

புறநானூற்றில் ‘சான்றோனாக்குதல் தந்தைக்குக் கடனே’ என்ற ஓர் அடி வருகிறது. இதில் சான்றோன் என்ற சொல்லுக்கு வீரன் என்றே பொருள் கொள்கிறோம். பதிற்றுப்பத்திலும் ‘சான்றோர் மறை’ என்ற இச்சொல் ‘மை’ விகுதி கொண்ட பண்புப் பெயராவதால் மன்னனின் குணநலன்களைச் சிறப்பிக்க இடம்பெறுகிறது. இமயவரம்பன் நெடுஞ்சேரலாதன் இரண்டாம் பத்திற்குப் பாட்டுடைத் தலைவன் அவனது சான்றாண்மை பல நிலைகளில் ஆராயப்படுகிறது.

நெடுஞ்சேரலாதனைப் பற்றி பேசும் இரண்டாம் பத்தில் சான்றோர் மெபய்மறை என்ற அடி வருகிறது. இதுவே இப்பாடலுக்கு தலைப்பாகவும் அமைந்துள்ளது. பதிற்றுப்பத்து முழுவதும் சேர மன்னனின் வீரத்தைப் புகழ்ந்தாலும், இப்பாடல் ஒன்றே சான்றோர் பற்றி பேசப் போதுமானது. மற்ற பதிற்றுப்பத்து பாடல்கள் ஏன் எனக்கேட்கத் தோன்றுகின்றதை,

“நிலம்நீர் விளிவிசும்பு என்ற நான்கின்
அளப்பரியையே!
நாள்கோள் திங்கள் ஞாயிறு கனை அழல்
ஐந்தொருங்கு புணர்ந்த வளிக்கத் தனையை
போர்தலை மிகுந்த ஈரைம் பதின்மரோடு
அக்குரல் அனைய கைவண்மையையே
அமர்கடந்து மலைந்த தும்பைப் பகைவர்
போர்பீடு அழித செருப்புகல்முன்ப
கூற்று வெகுண்டு வரினு மாற்றும் ஆற்றலையே
எழுமுடி கெழீஇய திருஜஞெமரகலத்து
நோன்புரித் தடக்கைச் சான்றோர் மெய்மறை”[54]

என்ற பாடல்களில் இதில் மன்னன் நிலம், நீர், காற்று, விசும்புடன் நாள் மீன்களும், கோள்களும், திங்களும், ஞாயிறும் என்ற ஐந்தும் பெற்ற ஒளியுடையவன் என்றே பேசப்படுகிறான். போரில் தும்பைப் பகைவரை அழித்தவன் என்றும், இயமன் என்ற எமனை முதுகிட்டு ஓடச்செய்யும் ஆற்றல் பெற்றவன் நீ என்றும், மன்னனின் மார்பு வன்மை பொருந்தியது, பெரிய கைகளை உடையது என்றும் உயர்வுபடச் சொல்வதையும் அறிய முடிகிறது. மேலும் அறப்போர் செய்யும் ஆற்றலும், ஆண்மையும், அஞ்சாமையும் உடைய வீரர் சான்றோர் என்ற உலக வாழ்க்கை கூற வந்த புகழாதலால் 'சான்றோர் மெய்ம்மறை' என்று இப்பாடல் அழைக்கப்படுகிறது.

திருக்குறளில் அறத்திற்கென்றே வள்ளுவர் ஓர் அதிகாரத்தை வகுத்துள்ளார். அறம், பொருள், இன்பம் என்று முப்பாலாகப் பிரித்து அறத்திற்கு 38 அதிகாரங்கள் வகுத்துள்ளார். அறத்துப்பாலில் சொல்லாத கருத்தைப் பொருட்பாலில் கூறுகிறார். அறத்தைப் பற்றி வலியுறுத்திக் கூறும் வள்ளுவர்,

"மனத்துக்கண் மாசிலன் ஆதல் அனைத்தறன்
ஆகுல நீர பிற"[55]

என்று அறத்தின் பயன் இதுதான் என வள்ளுவர் எடுத்துரைக்கின்றார்.

தமிழில் வீரநிலைப் பாடல்கள் என்ற ஒன்று உண்டு. அது வீரத்தை மட்டுமே பேசக்கூடியது. க.கைலாசபதி இப்பாடல்கள் பற்றி ஆய்வு மேற்கொண்டுள்ளார். அறிஞர் பெருமக்கள் இவ்விலக்கியத்தைச் சான்றோர் இலக்கியம் எனக் குறிப்பிடுகின்றார்கள். மறம் பற்றி பேசும் பாடலில்,

"வயவர் வீழ வாளரின் மயக்கி
இடங்கவர் கடும்பின் அரசுதலை பனிப்பக்
கடம்புமுதல் தடிந்த கடுஞ்சின வேந்தே"[56]

போரில் மறவர்கள் தோல்வி அடைந்து கீழ விழவும், கடம்ப மரத்தை அடியோடு வெட்டி அழித்த சினம் உடைய சேர மன்னனின் சிறப்பைப் புலவர் மேற்கொண்ட பாடல் அடிகளில் புகழ்கிறார்.

"தொறுத்தவயல் ஆரல் பிறழ்நவும்
ஏறுபொருத செறு உழாது வித்துநவும்
கருப்பின் பாத்திப் பூத்த நெய்தல்
இருங்கண் எருமையின் நிரைதரடுக்குநவும்,
..........................................................
புனல் வாயில் பூம்பொய்கைப்
பாடல்சான்ற பயங்கெழு வைப்பின்
நாடுகவின் அழிய நாமம்தோற்றிக்
கூற்றரூடுஉ நின்ற பாக்கை போல"[57]

இப்பாடலில் பகைவர் நாட்டின் அழகை வருணிக்கும் பாடலாக அமைகிறது. இப்படிப்பட்ட அழகு பொருந்திய பகைவரின் நாடானது அழகு கெடுமாறும் இது இயமனால் அழிக்கப்படும் உடல் ஒரு முறை அழிவது போன்று அழிந்தது என்கிறார் புலவர். இப்படி அழகுடைய ஊரையும் வேந்தனையும் புலவர்,

"பாடல் சான்ற பயங்கெழு வைப்பு"[58]

"கடம்புமுதல் தடிந்த கடுஞ்சின வேந்தே"[59]

இச்செய்தி புறநானூற்றுப் (பாடல் எண் 57) முரணான செய்தியாக உள்ளது.

"வல்லா ராயினும் வல்லுந ராயினும்
புகழ்தலுற் றோர்க்கு மாயோ னன்ன
உரைசால் சிறப்பின் புகழ்சால் மாற

நின்னொன்று கூறுவ துடையேன் என்னெனின்
நீயே பிறர்நாடு கொள்ளுங் காலை யவர்நாட்டு
இறங்குகதிர்க் கழனிநின் இளையருங் கவர்க
நனந்தலைப் பேரூர் எரியும் நைக்க
மின்னுநிமிர்ந் தன்னநின் ஒளிறிலங்கு நெடுவேல்
ஒன்னார்ச் செகுப்பினும் செகுக்க என்னதூஉம்
கடிமரந்தடிதல் ஓம்புநின்
நெடுதல் பானைக்குக் கந்தாற்றாவே"[60]

இப்பாடல் விளக்கவந்த காவிரிப்பூம்பட்டினத்து காரிக்கண்ணனார் என்ற புலவர் வல்லராயினும் வல்லவராய் இல்லாது போயினும் புகழ்பவர்க்கு மாயோனைப் போன்ற பாண்டியனே என்று புகழ்வதைப் பார்க்கிறோம். அவர் மன்னனுக்கு ஒன்றைச் சொல்லுவேன் என உரைக்கிறார். பகைவர் நாட்டிலுள்ள வயலை உன் வீரர் கொள்ளையிட்டாலும், அகன்ற இடத்தை உடைய ஊரைத் தீயிட்டு எரிக்க நேர்ந்தாலும், மின்னல் போன்ற ஒளியுடைய வேல் பகைவரை அழித்தாலும் அழிக்கட்டும். பகைவரின் காவல் மரத்தை வெட்டுவதைக் கைவிடுவாயாக என்று அறிவுறுத்துவதை காணமுடிகின்றது.

மேலும்,

"போரடு தானைச் சேர லாத
மார்புமலி பைந்தார் ஓடையொடு விளங்கும்
வலனுயர் மருப்பில் பழதீர் யானைப்
பொலனணி எருத்தமேல் கொண்டு பொலிந்தநின்
பலர்புகழ் செல்வம் இனிது கண்டிகுமே"[61]

என்னும் பாங்கனின் வெற்றியுடைய மன்னன் பொன்னரி மாலை அணிந்து யானைப் பிடரியின் மீது அமர்ந்திருப்பதைப் பலர் புகழ் சிறப்பை உடையவன் எனப் புலவர் கூறுகிறார்.

இதே செய்தியை முத்தொள்ளாயிரத்தில் சேரனின் யானைமறம் என்ற பாடலில் அறிகிறோம்.

"வீறுசால் மன்னர் விரிதாம வெண்குடையைப்
பாற எறிந்த பரிசயத்தால் - தேறாது
செங்கண்மாக் கொதை சினவெங் களியானை
திங்கள் மேல் நீட்டும் தன்கை"[62]

வினை முடிந்து இன்ன பருவத்தே வருவேன் என்று தன் மனைவிக்குக் குறித்துச் சொல்லிய பருவம் வந்தும் சேரலாதன் மீளவில்லை. பாசறையில் தங்கினான். பாசறையையே விரும்பினான். அதனை,

"கடாஅம் வார்ந்து கடுஞ்சினம் பொத்தி
மரங்கொல் மழகளிறு முழங்கும் பாசறை
நீடினை ஆகலின் காண்குவந்திசினே
ஆறிய கற்பின் அடங்கிய சாயல்"[63]

என்ற பாடல் மூலம் விளக்கம் தருகின்றது.

"கடம்பு அறுத்து இயற்றிய வலம்படு வியன்பணை"[64] பகைவரின் இருப்பிடம் தேடிச் சென்று வெற்றிபெற்று அவர்களது காவல்மரத்தை வெட்டி வரும்படிச் செய்து முரசு செய்து கொண்டதை இவ்வடிகள் விளக்குகிறது. பகைவர் கேட்ட அளவிலேயே வெருவி ஓடும்படி முழக்குவது முரசம், மன்னனுக்கு

முழக்கத்தால் வெற்றியை வாய்க்கப் பண்ணுதல் முரசம் ஆதலால் வலம்படு வினை பயன் எனச் சிறப்பிக்கப்பட்டது.

"ஒண்பொறிக் கழல்கால் மாறாவயவர்
திண்பிணி எஃகம் புலியுறை கழிப்ப
செங்கள விருப்பொடு கூலமுற்றிய
உருவச் செந்தினை குருதியோடு தூஉய்
மண்ணுறு முரசங் கண்பெயர்த்து இயவர்"[65]

போர் வீரர்கள் முன்வைத்த காலைப் பின் வைக்கமாட்டார்கள். அதனைக் குறிக்க கழல்கால் மாறா வாயவ எனச் சிறப்பிக்கப்பட்டுள்ளது. மேலும் ஒளிபொருந்திய வாளை நாட்டுதல் வழக்கம். இந்த செய்தியை மோசீக்கிரனார் என்ற புலவர் சேரமான் தகடூர் எறிந்த பெருஞ்சேரல் இரும்பொறையை இயன்மொழி வாழ்த்தலின் மூலம் வாழ்த்துகிறார்.

"மாசற விசித்த வார்புற வள்பின்
மைபடு மருங்குல் பொலிய மஞ்ஜை
ஓலிநெடும் பீலி ஒண்பொறி மனித்தார்.
பொலங்குழை உழிஞையொடு பொலியச்சூட்டி
குருதி வேட்கை உருகெழு முரசம்"[66]

என்ற பாடல்மூலம் அறியமுடிகின்றது.

"பதிபிழைப்பறியாது துய்த்தல் எய்தி
நிரையம் ஒரிஇய வேட்கைப் புரையோர்"[67]

இவ்விரு அடிகளில், ஒரு நாட்டில் பகை, பிணி, பசி இவையிருந்தால் மக்கள் நாட்டைவிட்டு வரிடம் செல்வர். இத்தகைய இயல்பு சேரலாதனின் நாட்டில்

இல்லை என்பதை 'பதி பிழைப்பு அறியாது' என்ற செய்தி மூலம் புலவர் விளக்குகிறார். அதோடு, 'நிரையம் ஒரிஇய வேட்கை புரையோர்' என்ற அடியின் மூலம் நரகத்திற்கும் செல்லாத வகையில் மன்னன் நல்வினை மற்றும் நல்ல செயல்கள் மூலம் சான்றோனாக இருக்க வேண்டுமென்பதைப் புலவர் வலியுறுத்திக் கூறுகிறார். புறநானூற்றுப் பாடலோடு தொடர்புடையதாக இருக்கிறது.

"நிரயம் கொள்பவரோடு ஒன்றாது காவல்
குழவிகொள் பவரின் ஓம்புமதி
அளிதோ தானே அதுபெறலங் குரைத்தே"[68]

என நரிவெரூஉத்தலையார் செவியறிவுறா உத்துறையில் மன்னனுக்கு விளக்குகிறார். பெற்றதாய் தன் குழந்தையைப் பாதுகாப்பது போல நீயும் உன் நாட்டைப் பாதுகாப்பாயாக எனப் புலவர் தேவையான நேரத்தில் மன்னனுக்கு எடுத்துரைப்பதிலும், கடிந்து கூறுவதிலும் பொறுப்புடன் செயல்பட்டுள்ளார் என்பதை இப்பாடல் அடிகள் நமக்கு நினைவூட்டுகின்றன.

இவ்வாறாக, பதிற்றுப்பத்து இரண்டாம் பத்தில் பல வீரச்செயல்களைக் காணமுடிகிறது. சங்க இலக்கியத்தில் வெண்ணிப்போர், ஆலங்கானப்போர் தலையாலங்கானத்துப் போர்களைப் பற்றிப் படிக்க நேர்கையில் அன்றைய பண்பாட்டுச் சூழலோடு வீரத்தையும் அறிகிறோம். பகைவரின் நாட்டை வருணிக்குமிடத்தில் அந்நாட்டிலுள்ள நெய்தல், ஆம்பல், கழினி, பூக்களோடு பொய்கையும் அழித்தான் மன்னன் என்ற அவனது வீரத்தையும், சிறப்பையும் போற்றுகிறார் புலவர்.

மனித வாழ்வை முன்னேற்றவும் நல்வழிப்படுத்தவும் ஏற்ற வலுமிக்க கருவிகளுள் ஒன்றாகவும், மனித நாகரிகத்தின் சின்னமாகவும் இலக்கியம்

திகழ்கிறது. சமுதாயத்தைப் பிரதிபலிக்கும் ஒரு வரலாற்றுச் சான்றாகவும் இலக்கியம் திகழ்கிறது. ஒவ்வொரு கால கட்டங்களில் வாழ்ந்த மக்களின் வாழ்க்கை முறையினைத் தெரிந்து கொள்வதற்கு இலக்கியம் உறுதுணையாக இருக்கின்றது. சங்ககாலத்தில் முடியாட்சிமுறை இருந்தாலும் அரசர்கள் எதேச்சதிகாரப் போக்கினைக் கையாளாமல் அறத்தின் வழி ஆட்சி செய்தனர். இதனை "அறநெறி முதற்றே அரசின் கொற்றம்"[69] என்ற தொடரில் அறியப்படுகின்றது.

**ஈதலின் சிறப்பு**

"ஈதல் இசைபட வாழ்தல் அதுவல்லது
ஊதியமில்லை உயிருக்கு"[70]

என்னும் குறளுக்கு இலக்கணமாகத் திகழ்ந்தவர்கள் புரவலர்கள். பகுத்துண்டு பல் உயிர் ஒப்புதலையும், ஈத்துவக்கும் இன்பத்தையும் பகுத்துண்டு பல் உயிர் ஓம்புதலையும், ஈத்துவக்கும் இன்பத்தையும் கொண்டு தம்முடைய அரசாட்சியை செய்தவர்கள் மன்னர்கள்.

"அறமெனப்படுவது யாதெனக் கேட்பின்
மறவாதிதுகேள்; மன்னுயிர்க் கெல்லாம்
உண்டியும் உறையுளும் அல்லது கண்டதில்"[71]

என்ற சாத்தனாரின் கருத்திற்கேற்ப சேரமன்னர்கள் இரவலர்களுக்கும், புரவலர்களுக்கும் உணவும், உடையும் வரையாது வழங்கி உள்ளனர். வறுமையுடையவர்களின் துன்பத்தை உணர்ந்து துன்பம் நீங்கும் அளவு பொருட்கொடை நல்கியவர்கள்.

"எந்தை நீ இரவலர்ப் புரவே"[72]

"நின், உள்ளிவந்த ஒங்குநிலைப் பரிசிலை
வள்ளியை ஆதலின் வணங்குவன் இவன் என
கொள்ளா மாந்தர் வணங்குவன் இவன் என
கொள்ளா மாந்தர் கொடுமைகூற நின்
உள்ளியது முடித்தோய் மன்ற"[73]

என்ற பாடலில் புகழ்ந்து கூறியுள்ளனர்.

வறுமையின் செம்மையான வாழ்வை வாழ்ந்தவர்கள் புலவர்கள். இதனை, "ஈயாய் ஆயினும் இரங்குவென் அல்லன்"[74] என்ற வரியால் அறியலாம். பழுமரம் தேறும் பறவை போல, தேர்ந்த புரவலர்களை நாடிச் சென்று பரிசில்களைப் பெற்றனர் புலவர்கள்.

புலவர் ஏத்த ஓங்கு புகழ் சேரலாதன், தன்னைப் பாடியப் புலவருக்கு உம்பற்காட்டு ஐந்நூறு ஊர் பிரதாயம் கொடுத்து, முப்பத்து எட்டு ஆண்டு தென்னாட்டுள் வருவதனிற்பாகம் கொடுத்தான். இவன் கொடைச்சிறப்பை,

"அருளிலை நன்கலம் வயிரமொடு கொண்டு
.................................. பாடினார் பத்துப்பாட்டு"[75]

என்று அறியப்பெறுகின்றது.

மூன்றாம்பத்து பல்யானைச் செல்கெழுக் குட்டுவனைப் பாலைக் கௌதமனார் பாடியுள்ளார்.

"வருநர் வரையார் ..... நன்கலம் தரூஉம்"[76]

"மன்றம் போந்து ..... பொலந்தார்க்குட்டு"[77]

என்றும் பரிசிலர் பரிசில் பெற்றதனை இப்பத்து மொழிக்கின்றது.

நான்காம்பத்து களங்காய்க் கண்ணி நார்முடிச் சேரரைக் காப்பியாற்றுக் காப்பியனார் பாடியது. சேரனின் கொடைச்சிறப்பினை,

"பகுத்தூண் தொகுத்த ஆண்மை
பிறர்க்கு என வாழ்த்தி"[78]

என்றும்,

"பிறர்க்கு என வாழ்த்தி நீ ஆகமன்றே
எமக்கு இல் என்னார்"[79]

என்றும், விறலியர் பரிசில் பெற்றதனை,

"சில் வளை விறலி … நல்குவன் பலவே"[80]

என்ற வரிகளாலும் புலவர் விளக்குகிறார்.

களங்காய் கண்ணி நார்முடிச் சேரல், தன்னைப் பாடிய காப்பியாற்றுக் காப்பியனாரக்கு நாற்பது நூறாயிரம் காணம் பொன் கொடுத்துத்தான் ஆள்வதிற் பாகம் கொடுத்தான்.

ஐந்தாம் பத்தில் கடல் பிறருக்கு ஓட்டிய செங்குட்டுவனை பரமணர் பாடியுள்ளார். இவர் பெற்ற பரிசில் உம்பற்காட்டு வரியையாகும்.

சேரன் போர்க்களத்தில் பெற்ற குதிரைகளை மிகுதியாக இரவலர்க்குக் கொடுத்தவன். விறலியர், படைவீர், பாணர்கள் இவர்களுக்கு சேரன் கொடுத்தப் பரிசிலை

"உறவர் ஆர ஓம்பாது உண்டு …. கொளை முடிவின்"[81]

ஆறாம் பத்தில் ஆடு கோட்பாட்டுச் சேரலாதனைக் காக்கை பாடினியார் பாடியுள்ளார். இவருக்கு சேரன், 'கலன் அணிக' என்று ஒன்பது காப்பொன்றும், நூறாயிரம் காணமும் கொடுத்தான்.

இரவலர் புன்கண்தீர நன்கலம் வரைவுஇல கொடுத்ததை,

"மின் இழை விறலியர் … நெடிது மன்னியரோ"[82]

என்ற வரிகளால் புலவர் புலப்படுத்துகிறார் பரிசில் பெற பரிசிலர் வராவிட்டால் இரவலர் வேண்டி, தேரின்தந்து, அவர்க்கு ஆர்பதன் நல்கக்கூடியவன் சேரன், ஏழாம்பத்து செல்வக் கடுங்கோ வாழியாதனைக் கபிலர் பாடியது. இவர்பெற்ற பரிசில், சிறுபுறம் என நூறாயிரம் காணம் கொடுத்து நன்றா என்றும் குன்று ஏறி நின்று தன் கண்ணிற்கண்ட நாடுகளை எல்லாம் பெற்றார். புலரா நகையினை உடைய சேரன் பரிசிலர்க்குப் பரிசில் தரும்போது,

"ஈத்தது இரங்கான், ஈத்தொறும் மகிழான்
ஈத்தெழும் மாவள்ளியன"[83]

போன்றவன் என்கிறார். அந்தணர்க்கு அருங்கலம் ஈந்தவன்ளூ பசியுடைய சுற்றத்தாரை அப்பசி நீங்கும்படி செய்தவன். பரிசில் பெற செல்லும் பாணனைப் பார்த்து நீ உன் சுற்றத்தோடு சேரனைப் பாடிச் சென்றால் கொடுமணம் என்னும் ஊரிலேபுண்டான நல்ல ஆபரணங்களையும், பந்தரென்றும் பெயரையுடைய பெரிய புகழையுடைய பழைய ஊரினடத்தேயுள்ள தெளிந்த கடலின் விளைந்த முத்துக்களோடு நன்கலம் பெருகுவை என்கிறான். இதன் மூலம் சேரனின் கைவண்மையை காணமுடிகின்றது.

எட்டாம் பத்து தகடூர் எறிந்த பெருஞ்சேரல் இரும்பொறையை அரிசில் கிழார் பாடியது. பெற்ற பரிசில் காணம் ஒன்பது நூறாயிரத்தோடு அரசு கட்டில்.

"இரப்போர்க்கு ஈதல் தண்டா தன்மை உடையவன்
உயிர்போற்றலையே.... தேய்ந்த ஆண்மை"[84]

என்ற வரிகளில் சேரனின் பரிசில் வழங்கும் சிறப்பினை விளக்குகிறது.

ஒன்பதாம் பத்து குடக்கோ இளஞ்சேரல் இரும்பொறையைப் பெருங்குன்றூர் கிழார் பாடியது. இவருக்குச் சேரன் மருள் இல்லார்க்கு மருளக் கொடுக்க என்று உவகையின் முப்பதாயிரம் காணம் கொடுத்து, அனுப்பினான் சேரன்.

பதிற்றுப்பத்தில் சேர அரசர்கள் இரவலர்களும், புலவர்களுக்கும் முதலில் அவர்கள் பசியைப் போக்கி, பின் நல்ல ஆடை அணிகலன்களை நல்கி, பரிசில்களை நல்கினார். பரிசிலர் யாராக இருந்தாலும் பரிசு பெறுதற்குரிய தகுதிகள் அவர்களிடம் இல்லையென்றாலும் எல்லோருக்கும் கொடுப்பதைக் கடமையாகக் கொண்டிருந்தனர்.

கடலின் கண்படியும் முகில்கள் நீரை மொள்ளாமல் மீளாது. அதுபோலப் பரிசிலரும் தேருடன் கூடிய உயர்ந்த தலைமிக்க யானைகளைச் சேரனிடம் பரிசிலாகப் பெறாமல் மீளமாட்டார்கள்.

புலவர்கள் அனைவரும் தத்தமக்கென்று சில கொள்கைப் பிடிப்புகளைக் கொண்டு திகழ்ந்தனர். அத்தனித்தன்மையாலேயே அரசர்களின் உள்ளத்தில் புலவர்கள் உயர்ந்து நின்றனர். அரசின் புகழையும் அரசின் பெருமையையும் காப்பதில் முனைந்து நின்ற புலவர்களுக்கு அரசர்களும் பரிசில்களும் பட்டங்களும் வழங்கிச் சிறப்புச் செய்தனர். அரசர்கள் புகழுக்காக மட்டும் கொடை வழங்கவில்லை. புலவர்களின் வறுமை உணர்ந்து அவர்களின் வாழ்வு வளம்பெற்று அவ்வாழ்வானது தொடர்ந்து வறுமையில்லாத வாழ்வாக அமைதலை நோக்கமாகக் கொண்டு வழங்கி வந்தனர்.

**தொகுப்புரை**

சங்க கால மக்கள் பிறர்க்கென வாழ்தலும், நன்றி மறவாமையுடன் இருந்துள்ளனர். போரிலும், அரசாட்சியிலும் அறமானது சிறப்பாகக் கையாளப்பட்டுள்ளது. சங்க காலத்தில் மக்கள் மனிதநேயத்தோடும், அறநெறியோடும் வாழ்ந்துள்ளனர். மறப்போரிலே மகளிரும் பங்கு கொண்டனர்.

சங்ககாலத்தில் விருந்தோம்பல் பண்பு சிறப்பாக விளங்கியுள்ளது. சங்ககாலத்தில் வாழ்ந்த காவலரும், பாவலராகத் திகழ்ந்து நிலைபேறு உடைய பாடல்களைப் புனைந்துள்ளனர்.

சங்ககால மக்கள் பலவகையான கலைகளில் தேர்ச்சி பெற்றவர்களாகத் திகழ்ந்துள்ளனர். சங்க எட்டுத்தொகை இலக்கியங்களில் புறஇலக்கியங்களாகிய பதிற்றுப்பத்து, புறநானூறு ஆகிய நூல்களில் அரசர்களின் மாண்புகளை அறியமுடிகிறது.

# சான்றெண் விளக்கம்

1. பதிற். பா. 38.
2. பரிமேலழகர் (உ.ஆ), திருக்குறள், குறள் எண். 322.
3. பதிற். பா. 61.
4. மேலது, குறள் எண். 108.
5. பதிற். பா. 22.
6. மேலது., பா. 79.
7. மேலது., பா. 88.
8. மேலது., பா. 81.
9. மேலது., பா. 16.
10. மேலது., பா. 68.
11. மேலது., பா. 63.
12. மேலது., பா. 76.
13. மேலது., பா. 42.
14. மேலது., பா. 38.
15. மேலது., பா. 67.
16. மேலது., பா. 82.
17. மேலது., பா. 14.
18. மேலது., பா. 65.
19. மேலது., பா. 21.

20. புறம். பா. 192.

21. பரிமேலழகர் (உ.ஆ), திருக்குறள், குறள் எண். 397.

22. மேலது, குறள் எண். 131.

23. புறம். பா. 187.

24. மேலது., பா. 55.

25. மேலது., பா. 182.

26. மேலது., பா. 278.

27. மேலது., பா. 195.

28. மேலது., பா. 357.

29. மேலது., பா. 204.

30. மேலது., பா. 154.

31. மேலது., பா. 45.

32. மேலது., பா. 32.

33. மேலது., பா. 34.

34. மேலது, குறள் எண். 110.

35. புறம். பா. 189.

36. மேலது., பா. 18.

37. மேலது., பா. 184.

38. மேலது., பா. 191.

39. மேலது., பா. 28.

40. மேலது., பா. 31.

41. மேலது., பா. 194.

42. குறள். 291

43. பதிற்று., பா. 63, வரி.6 - 7

44. மேலது., பா. 70, வரி.12 - 13

45. புறம்., பா. 3, வரி.14

46. பதிற்று., பா. 13, வரி.22 - 24

47. மேலது., பா. 59, வரி.10

48. மேலது., வரி.18 - 19

49. மேலது., பா. 14, வரி.1-2

50. மேலது., பா. 3, வரி.36

51. பதிற்று., இரண்டாம் பத்துப் பதிகம் 1-2

52. மேலது., 2-வது பதிகம் 5-6

53. மேலது., பா. 22, வரி.1 - 11

54. மேலது., பா. 90, வரி.14 - 16

55. குறள். 34

56. பதிற்று., பா. 12, வரி.ஸ - 3

57. மேலது., பா. 13, வரி.1 - 11

58. மேலது., பா. 13. வரி.9

59. மேலது. பா. 12. வரி.3

60. புறம்., வரி. 57

61. பதிற்று., பா. 11, வரி.60 - 20

62. முத்தொள்ளாயிரம்., வரி. 113

63. பதிற்று., பா. 16, வரி.7 - 10

64. மேலது., பா. 17, வரி.5

65. மேலது., பா. 19, வரி.3 - 7

66. புறம்., பா. 50

67. பதிற்று., பா. 15, வரி.30 - 31

68. புறம்., பா. 5

69. மேலது., பா. 56

70. குறள், 231

71. மணிமேகலை., பா. 25. வரி. 228 - 231

72. புறம். பா. 203-12

73. மேலது. பா. 211-6-10

74. மேலது. பா. 209-13

75. மேலது., பா. 2, வரி.10 - 14

76. மேலது., பா. 21, வரி.9 - 19

77. மேலது., பா. 23, வரி.5 - 10

78. மேலது., பா. 38, வரி.15 - 16

79. மேலது., பா. 39, வரி.1-2.

80. மேலது., பா. 40, வரி.21 - 31

81. மேலது., பா. 43, வரி.19 - 30

82. மேலது., பா. 54, வரி.6 - 11

83. மேலது., பா. 61, வரி.12 - 13

84. மேலது., பா. 79, வரி. 1-6

# இயல் - 4

# புற இலக்கியங்களில் அரசாட்சியும் பொருளாதாரமும்

**முன்னுரை**

சமூகத்தின் தலைவனாக மன்னனையே சங்க இலக்கியம் குறிப்பிடுகிறது. 'மன்னர் உயிர்த்தே மலர்தலையுலகம்' என்று மன்னனின் தலைமையின்றிச் சமுதாயம் சீராக இயங்க முடியாது. மேலும் சங்க இலக்கியங்களில் பல குடிகளைச் சார்ந்த மன்னர்கள் அறியப்படுகின்றனர். நிலத்தின் தன்மைக்கேற்ப பொருளாதாரமும், பொருளாதார வளர்ச்சிக்கு ஏற்ப அரசியலும் வளர்ந்தன.

தமிழ்க்குடியின் அரசியல் அரசாட்சி வரலாறு பழமை வாய்ந்தது. நாகரீகச் சிறப்பு வாய்ந்த பழந்தமிழரிடையே தொல்பழங்காலம் முதலாகவே அரசு என்னும் அமைப்பு இருந்து வந்துள்ளது. அத்தகைய தொன்மை வாய்ந்த அரசுகளைப் பற்றியும், அரசாட்சித் திறம் குறித்தும் அவற்றால் சங்ககால மக்களின் பொருளாதார மேம்பாட்டின் நிலை பற்றியும் ஆராய்வதே இவ்வியலின் நோக்கமாகும்.

**அரசாட்சி - பொருளாதாரம்**

சங்க இலக்கியங்களில் பல குடிகளைச் சார்ந்த மன்னர்கள் அறியப்படுகின்றனர். ஆண்ட நிலப்பரப்பாலும், நிலத்தின் தரத்தாலும், பிறந்த குடியாலும், செல்வ வளத்தாலும், அரசியல் வளர்ச்சியாலும் அவர்கள் தம்முள் வேறுபட்டனர். நிலத்தின் தன்மைக்கேற்ப பொருளாதாரமும், பொருளாதார வளர்ச்சிக்கு ஏற்ப அரசியலும் வளர்ந்தன. ஆறுகள் பாய்ந்த வளம் செழித்த

மருதப் பகுதிகளில் ஏற்பட்ட உழவுத் தொழில் வளர்ச்சியும் வணிகப் பெருக்கமும் பேரரசு உருவாகத் துணை புரிந்தன.

ஓரிடத்தில் தங்கி நிலைத்து வாழத் தலைப்பட்ட சமுதாயமாகச் சங்கச் சமுதாயம் மாறியதைத்தான் திணைப் பாகுபாடுகள், திணைநிலை வாழ்வுகள் காட்டுகின்றன. கூட்டு வாழ்க்கை முறை நிலவிய இனக்குழுச் சமுதாயத்தினைத் தொடர்ந்து நிலவுடைமையாக மாறிய காலம் சங்க காலம் என்பதினை அறியமுடிகிறது.

மேலும் அரசு உருவான சூழில் நில எல்லைப் பெருக்கமே அரசின் அடிப்படை நோக்கமாகியது. நால்வகை நிலங்களும் அரசில் இணைந்தன. அந்நால்வகை நிலங்களில் மருதம் வேளாண் பொருளாதாரத்திற்கும், நெய்தல் வணிகப் பொருளாதாரத்திற்கும் அடிப்படைகளாய் அமைந்தன. அந்த அடிப்படையில், சங்ககால அரசியல் - பொருளாதாரம் அரசன் அரசாட்சி, வணிகம், வேளாண்மை என்னும் நிலைகளில் அதன் வளர்ச்சினை அரசாட்சி எனலாம்.

தமிழகத்தில் அரசு என்னும் அமைப்பு மிகப் பழங்காலத்திலேயே தோற்றம் பெற்றிருக்க வேண்டும் என்பது வரலாற்றுக் குறிப்புகளால் புலனாகிறது. எனினும் சங்க இலக்கியத்தில் குறிக்கப் பெறும் நால்வகை நிலங்களில் முல்லை நிலப்பகுதியே முறையான அரசு தோற்றம் பெற்றது என்று கூறுவர். இதனை "பண்டைத் தமிழர்களிடையே தொல் பழங்காலம் முதல், அரசு என்னும் அமைப்பு இருந்து வருகின்றது. மன்னன், குரிசில், கோன், ஏந்தல், வேந்தன், இறைவன், குறுநில மன்னன் போன்ற பழந்தமிழ்ச் சொற்கள் இதற்குச் சான்று பகர்கின்றன. அரசன் மக்களை ஆள்வது ஆட்சி எனப்பட்டது. 'ஆள்' என்பது குடிமகனாகிய ஒரு மனிதனைக் குறிப்பது. 'ஆட்சி' என்பது குடிமக்களை இடையன் ஆட்டுமந்தைகளைக் காப்பதுபோல் பகைவரிடமிருந்து காவல் காத்துக்

காவல்புரிவதாகும். இதனால் அரசு என்பது முதன்முதலில் முல்லை நிலத்தில் தோன்றி இருக்கலாம் என எண்ணத் தோன்றுகிறது"[1] என்று கூறுவர்.

கிரேக்க வீரநிலைக் காலக்கவிதைகளில் மன்னனை ஆட்டிடையனாக அல்லது தானைக் காப்பவனாக வருணனை செய்வது மரபாகும். அதேபோன்று அரசனைக் குறிக்கும் 'கோன்' என்ற சொல்லும் இடையர் கையில் வைத்திருக்கும் கோல் என்னும் சொல்லின் வழிவந்ததாகும். ஆடுகளை மேய்க்கும் கருவி ஆணையிடும் செங்கோலைக் குறிப்பதாயிற்று. பின்னர் அதுவே நடுநிலை காட்டும் துலாக்கோலாகவும், கொடுங்கோலாகவும் மாறியது என்னும் அறிஞரின் கூற்று மேற்குறித்த கருத்திற்கு அணி சேர்ப்பதாக அமைகின்றது. இதனால் அரசு என்னும் அமைப்பு முறையாக முல்லை நிலத்தில் தோற்றம் பெற்றிருக்கலாமென்று கருத இடமுண்டு.

**சமூகமும் அரசும்**

அரசு என்பது சமூகத்தைப் போன்றே வளர்ந்தும் மாறியும் வரும் ஒரு சமூக நிறுவனமாகும். "ஆதிகாலச் சமூக அமைப்பில் மக்கள் அனைவரும் சமமானவராய் இருந்தனர். எவருக்கும் எந்தத் தனிச்சலுகையும் இருக்கவில்லை. வர்க்க மோதல்கள் எதுவும் ஆதிச் சமூகத்தில் இல்லை. சமுதாயம் வர்க்கங்களாகப் பிளண்டபோதுதான் அதாவது மற்றக்குழுவின் உழைப்பைத் தொடர்ந்து அபகரித்து வருகின்ற சுரண்டுகிற குழுவைக் கொண்ட மக்கள் குழுக்களாச் சமுதாயம் பிளவுண்ட போதுதான் அரசு தோன்றியது"[2] என்று கூறுவர் சமூகவியலாளர் பொகுலாங்ஸ்கி.

மேலும், சமூகம் என்பது குடும்பம், உடைமை, கல்வி, சமயம் போன்ற பல நிறுவனங்களை உட்கொண்ட அமைப்பு ஆகும். இவ்வாறான நிறுவனங்களைக் கட்டுப்படுத்தும் ஆற்றல் அரசுக்கு உண்டு.

"சமூகத்துக்கு உட்பட்டுள்ள தனிமனிதன், குழு, அமைப்பு, நிறுவனம் ஆகியவற்றின் மொத்த கட்டுப்பாட்டு நிறுவனமே அரசு"[3] எனக் கருதலாம்.

**அரசியல் மேம்பாடு**

மனித இனத்தின் தொடக்கக் காலத்தில் குடும்பம் என்ற அமைப்பு இல்லை. மனிதர் தனித்தனிக் குழுக்களாக வாழ்ந்தனர். தனிச் சொத்துடமை இல்லை. இரு குழுக்களிடையே உணவு முதலான காரணங்களால் போர் ஏற்படும் பொழுது திறனுள்ளவன் தலைமைப் பொறுப்பேற்றான். அப்பொழுது அதிகார விருப்பமும், சுகமும் தலைவனால் அறியப்பட்டது, தனிச் சொத்துடைமை தோன்றியது. அதன்வழி வாரிசுரிமையும் அரசும் ஏற்பட்டது.

"எங்கு எப்பொழுது சமுதாயம் வர்க்கங்களாக பிரிந்ததோ, அதாவது மக்களிடையே ஒரு பிரிவினர் மற்றப் பிரிவினரின் உழைப்பை நிரந்தரமாகத் தன்வயமாகக் கொள்ள முடிகிற ஒருவகையினர் மற்ற வகையினரைச் சுரண்டுகின்ற மக்கள் குழுக்களாகப் பிரிந்ததோ அங்கு அப்பொழுது அரசு என்பது மக்களை நிர்ப்பந்திக்கும் தனி இயந்திரமாகத் தோன்றியது என்று வரலாறு காட்டுகிறது"[4] என்கிறார் லெனின்.

**அரசின் அடிப்படைக் கூறுகள்**

> "மக்கள், வரையறுக்கப்பெற்ற நிலப்பரப்பு, முறையான ஆட்சி, இறைமை இந்நான்கும் அரசின் அடிப்படைக் கூறுகள் ஆகும்"[5]

மக்கள் கூட்டத்தினின்றும் தலைமை முகிழ்த்து, தலைமையின் வல்லாண்மையால் அரசு தோன்றுகிறது. வலிமை குன்றுமாயின் அரசும் அழிந்துவிடும். எனவே அரசுக்கு முதல் அடிப்படை, வலிமை வாய்ந்த மக்கள் குழுவாகும். இரண்டாவதாக வரையறுக்கப்பெற்ற நிலப்பரப்பு இருக்க வேண்டும். மக்கள் வாழிடம் அரசின்

கட்டுப்பாட்டில் இருக்க வேண்டும். எல்லையுடன் வரையறுக்கப்பெற்ற நிலப்பரப்பு இடம் பெறுகின்றது.

மூன்றாவதாக முறையான ஆட்சிமுறை அமைய வேண்டும். ஆட்சிமுறை குடியாட்சியாகவோ முடியாட்சியாகவோ பிறவகைகளிலோ அமையலாம். எப்படியிருப்பினும் அவ்வாட்சி முறையான ஆட்சியாக இருத்தல் வேண்டும்.

நான்காவதாக இறைமை. இறைமை என்பது மக்களுக்கும், நிலப்பரப்புக்கும் ஏற்றவகையில் மேலான அதிகாரங்கள் பெற்றுத் தனித்தன்மையுடன் இயங்குவதாகும். இந்நான்கும் நிறைவு பெற்றிருப்பதே 'அரசு' எனப்படும்.

இவ் அடிப்படையில் சங்க இலக்கியத்தை ஆய்வோமாயின் தற்போது நாம் வரையறுக்கும் இலக்கணத்துக்குட்பட்ட அரசு அமைந்திருக்கவில்லை. எனினும் "சங்க இலக்கியத்தில் கண்டவாறு மேற்கூறிய அடிப்படைக் கூறுகள் இப்பகுதியில் தெளிவுபடுத்தப் பெறுகின்றன"[6] என்பார் அ. ஆறுமுகம்.

**மக்கள்**

மக்களிடமிருந்தே மக்களைக் கட்டுப்படுத்தத் தலைமை தோன்றுகிறது. இத்தலைமையின் வல்லாண்மை வடிவமாக அரசு வளர்கிறது. எனவே அரசின் உறுப்புகளில் மக்கள் குழு முதன்மை இடத்தைப் பெறுகிறது. எனவே வல்லாண்மைக்குட்பட்டு வாழும் மக்கள் குழு ஒவ்வொரு தலைவனுக்கும் உண்டு.

"மக்களின் எண்ணிக்கை, அடர்த்தி, பகிர்வு, இனக்குழு, இடப்பெயர்வு (அ) நிலைபேறு ஆகியவற்றின் அடிப்படைக்கேற்ப அரசும் அமையும்."[7] இவ் அடிப்படையிலேயே மன்னன், வேந்தன், அரசன் இவர்குட்பட்ட மக்கள் குழு அமைந்திருக்க வேண்டும்.

அரசுக்கு இன்றியமையாத மக்கள், அரசால் காக்கப்பட வேண்டியவராவர். அரசனது செங்கோல் தவறுமாயின் குடிமக்கள் பழிதூற்றுவர் என்பதை,

"நகுதக்கனரே, நாடு மீக்கூறுநர்

...........................................................

இரப்போர்க்கு ஈயா இன்மை யான் உறவே"[8]

என்ற பாடல் அறியமுடிகின்றது.

குடிமக்களைக் காக்க வேண்டுவது அரசின் கடமை. அரசின் குடை நிழல் மக்கட்குக் குளிர்ச்சியுடையதாய் இருக்க வேண்டும் என்பதனை,

"வில்லாப் பூவின் கண்ணி சூடி,
'நல் ஏமுறுவல்' என, பல் ஊர் திரிதரு
நெடு மாப் பெண்ணை மடல் மானோயே!
கடன் அறி மன்னர் குடை நிழற் போலப்
பெருந்தண்ணென்ற மரநிழல் சிறியது இழிந்து,
இருந்தனை சென்மோ - 'வழங்குக சுடர்!' என
அருளிக் கூடும் ஆர்வ மாக்கள்"[9]

என்ற பாடல் வரிகளில் அறிவுறுத்துகின்றது. தங்குமிடங்களை அமைத்துக் குடிமக்களை நிலைக்க வைக்க வேண்டுவது அரசின் கடமை என்பதை,

"பிறங்கு நிலை மாடத்து உறந்தை போக்கி,
கோயிலொடு குடிநிறீஇ"[10]

என்ற வரிகளால் அறியலாம்.

மக்களைக் காப்பாற்ற வேண்டிய பொறுப்பு அரசுக்கு உண்டு என்பதைத் தெளிவாக அறிந்திருந்தனர்.

எல்லா வளங்களும் பெற்றுத் தன்னிறைவுடன் நல்ல தலைமையைப் பெற்ற மக்கள் பிற இடங்கட்கு இடம் பெயர்ந்து செல்ல வேண்டுவதில்லை. புகார், மதுரை, வஞ்சி போன்ற இடங்களில் வாழ்ந்தவர்கள் இத்தகைய வாய்ப்புடன் வாழ்ந்தவர்கள் என்பதைச் சங்க இலக்கியத்தின் மூலம் அறிய முடிகின்றது.

வேளாளர், வணிகர் போன்ற குடிகளே வளம் பெற்ற செல்வத்தோடு வாழ்ந்திருக்க இயலும். அவர்களே இடம் பெயர வேண்டிய தேவையின்றி நிலைத்திருப்பவராவர். இத்தகைய பதியெழுவறியாப் பழங்குடி பற்றி மலைபடுகடாம் கூறுவதை,

"நிதியம் துஞ்சும் நிவந்து ஓங்கு வரைப்பின்
பதி எழல் அறியாப் பழங்குடி கெழீஇ
வியல் இடம் பெறாஅ விழுப்பெரு நியமத்து,
யாறு எனக் கிடந்த தெருவின், சாறு என,
இகழுநர் வெரூஉம், கவலை மறுகின்,
கடல் என, கார் என ஒலிக்கும் சும்மையொடு
மலைஎன, மழை, என, மாடம் ஓங்கி,
துனிதீர் காதலின் இனிது அமர்ந்து உறையும்,
பனி வார் காவின் பல்வண்டு இமிரும்,
நனி சேய்த்தன்று, அவன் பழவிறல் மூதூர்"[11]

என்ற பாடல் தெளிவுறுத்துகின்றது.

**நிலப்பரப்பு**

ஓரிடத்தில் தங்கி நிலைத்து வாழத் தலைப்பட்ட சமுதாயமாகச் சங்க சமுதாயம் மாறியதைத்தான் திணைப்பாகுபாடுகள், திணைநிலை வாழ்வுகள் காட்டுகின்றன. கூட்டு வாழ்க்கை முறை நிலவிய இனக்குழுச் சமுதாயத்தினைத் தொடர்ந்து நிலவுடைமையாக மாறிய காலம் சங்க காலம் என்பதில் கருத்து

வேறுபாடில்லை. திணைநிலை வாழ்வு, அந்தந்த நில இயல்பை அடிப்படையாகக் கொண்டதைப் போல் நிலவுடைமையும் நிலத்தையே அடிப்படையாகக் கொண்டது. இவ்வாறு நிலம் மையப்படுத்தப்பட்ட நிலையில் உற்பத்திக்கான அடிப்படை ஆதாரமாக நிலமே அமைகின்றது.

வாழ்வின் அடிப்படைத் தேவைகளில் முதன்மையான உணவு உற்பத்திக்கு ஆதாரமான நிலம், சமுதாயப் பொது உற்பத்திக்கும் பொது துய்ப்பிற்கும் அடிப்படையாக இருந்த இனக்குழுச் சமூகநிலை மாறி, நிலவுடைமைச் சமுதாயத்தில் அது தனி உடைமையாக மாறிய நிலையில் வேளாண் வர்க்கம் உருப்பெற்றது. உடைமையாளர், உழைப்பவர் என்ற பாகுபாட்டுடன் உற்பத்தி ஆதாரமும், உற்பத்தி சக்திகளின் பெருக்கமும் உபரி உற்பத்திக்கு வழிவகுக்க, அந்த உபரி உற்பத்தி பிறிதொரு உடைமை வர்க்கமான வணிக வர்க்க உருவாக்கத்திற்கு வழிவகுத்தது. குழுத் தலைமை நிலத் தலைமையாக மாற அரசும் உருவாகியது. இவ்வாறு எல்லா வகையான மாற்றத்திற்கும் நிலமே அடிப்படையாக அமைந்தது.

அரசு உருவான சூழலில் நில எல்லைப் பெருக்கமே அரசின் அடிப்படை நோக்கமாகியது. நால்வகை நிலங்களும் அரசில் இணைந்தன. அந்நால்வகை நிலங்களில் மருதம் வேளாண் பொருளாதாரத்திற்கும், நெய்தல் வணிகப் பொருளாதாரத்திற்கும் அடிப்படைகளாய் அமைந்தன. இவ்விரண்டில், மருதத்தின் வேளாண் விளைபொருட்களின் அடிப்படையில் குறிஞ்சி, முல்லை நிலங்களின் இயற்கை விளைபொருட்களின் அடிப்படையிலும் உருவான வணிகப் பொருளாதாரம் முக்கியத்துவம் பெற்றாலும், காலந்தோறுமான சமுதாயங்களில் வேளாண் பொருளாதாரமே எவ்வகையான அரசிற்கும் அடிப்படை ஆதாரமாய்த் தொடர்ந்து இருந்து வருகின்றது.

அரசு அமைப்புகளைப் பற்றியும், அவை தொடர்பான செய்திகள் குறித்தும் ஆட்சி முறைகள் குறித்தும் சங்க அக இலக்கிங்களைவிடப் புற இலக்கியங்களே மிகுதியாகப் பேசுகின்றன. புறப்பொருள் இலக்கியங்கள் அரசு உறுப்புகள் குறித்தும், அரசனது வீரம், கொடை, ஆட்சித்திறன், அறக்கோட்பாடுகள் குறித்தும் விளக்கியுரைக்கப்படுகின்றன. இந்நிலையில் "அகப்பொருள் அல்லாத அனைத்தையும் பொதுவாகக் குறிக்கும் புறப்பொருளில் அரச வரலாறும் அடங்கும். சங்க இலக்கியங்கள் சங்ககாலத் தமிழக அரசர்களின் வரலாற்றுச் செய்திகள் பலவற்றையும் பரவலாகவே பாடியுள்ளன"[12] என்று கூறுவார் வ. குருநாதன்.

பெரும்பாலும் சங்க புற இலக்கியங்களே அரசியல் தொடர்பான செய்திகளைப் பேசுகின்றன என்றாலும், அகப்பாடல்களிலும் அரசு, அரசியல் நிலை பற்றிய குறிப்புகள் இடம் பெற்றுள்ளன. சங்ககால மன்னர்கள் அறிவிலும் கல்வியிலும் சிறந்த அறிஞரின் அறிவுரைகளை எற்று புலவரின் பொன்னுரைகளையும் போற்றி நின்று ஆட்சி செலுத்தினர் என்று சங்க இலக்கியங்களின் வழி அறிய முடிகின்றது.

புலி தன் குருளைகளைக் காப்பது போல அரசன் மக்களைப் பேணிக் காத்தான் என்பதை,

"புலிபுறங் காக்கும் குருளை போல
மெலிவில் செங்கோல் நீபுறங் காப்ப"[13]

என்று புறநானூறு அடிகள் மூலம் அறியலாம். இதனால் மக்களுக்காக அரசும், அரசுக்காக மக்களும் இருந்த நிலை புலனாகிறது. இத்தகைய பண்புகள் கொண்டவனாக மன்னன் விளங்கியமையால் மக்கள் அரசின் தலைமையினை

ஏற்றுப் போற்றினார்கள். மன்னன் குடிகளைப் பிறர் என்ற கண்ணோட்டமின்றிக் கருதினான் என அறிய முடிகின்றது.

தற்காலத்தில் தமிழக வரலாறு போற்றிக் கொண்டிருக்கும் மிக நீண்ட அரசியல் பாரம்பரியத்திற்கு அக்காலக் கட்டத்தில் நிலவிய அரசமைப்பே அடிப்படையாகவும், ஆதாரமாகவும் அமைந்திருந்தது என்பது குறிப்பிடத்தக்கது. மேலும், சங்க இலக்கியங்கள் அன்றைய நாளில் ஆண்ட மன்னனது செங்கோல் திறம்பாத ஆட்சிமுறை மன்னர்களுக்கும், மக்களுக்கும் இடையே நிலவிய உறவுநிலை, அண்டை நாடுகளுடன் இருந்த நட்பு நிலை மற்றும் பகைமை நிலை புலவர்களுக்கும் மன்னர்களுக்கும் இடையே நிலவியது குறித்து விளக்குகின்றன.

அரச நிர்வாகம் என்பது ஒரு தலைமையின் கீழ்த் தங்கிய நிருவாகமாக விளங்கினாலும், அரசின் செயல்பாடுகளையும் சட்டத்திட்டங்களையும் செயல்படுத்துவதற்குப் பல்வேறு அமைப்புகளும், குழுக்களும் இன்றியமையாத கூறுகளாக அமைந்திருந்தன.

இதனைச் செயல்படுத்துவதற்குத் தலைமைப் பண்புகள் நிறைந்த ஒரு தலைமை தேவைப்பட்டது. அத்தகு தலைமைப் பண்புகள் நிறைந்த தனிமனிதனே அரசர் என்பவராவர்.

இராசமாணிக்கனார் "தலைமை என்பது செல்வாக்கு மற்றும் மக்கள் குழு பற்றிய ஒரு சொல் முறைதான். தலைவரின் கருத்துக்கள், கொள்கைகள், நடத்தை முறை, ஆளுமைப் பண்புகள், நடை, உடை, பாவனை, பேச்சு, தோற்றம் அனைத்தும் மக்களிடம் குறிப்பிடத்தக்க செல்வாக்குச் செலுத்தி அவரின் பால் ஒரு விருப்பத்தை ஏற்படுத்தி விசுவாசத்தை உறுதிப்படுத்துகின்றது"[14] என்று கூறுவார். இத்தகு தலைமைப் பண்புகள் நிறைந்த தலைவர்களே பெருஞ்சிறப்பு பெற்றவர்களாக விளங்கினர் என்று அறிய முடிகின்றது.

**அரசபை**

சங்ககால அரச நிர்வாகம் அரசனை மையமிட்டதாக அமைந்திருந்தது. அரசபை, நிருவாகத்தின் தலைமைச் செயலகமாக விளங்கி; இருக்கை ஓலக்கம், வேந்தவை என்ற பெயர்களால் அழைக்கப்பட்டது. அரியணை, செங்கோல், வெண்கொற்றக்குடை ஆகியவை அரசச் சின்னங்களாக மக்களிடமிருந்து வேறுபடுத்திக் காட்டின. ஆடம்பர அணிகளுடன் அரசனும், அரசியும் தோன்றினர் என்று தெரிகின்றது.

அரசபையில் அரசனோடு அரசியும் உடன் இருந்திருக்க வேண்டும் என்ற செய்தியினை,

"அரசனுடன் கோப்பெருந்தேவியும் உடனிருப்பது வழக்கமாக இருந்திருக்கலாம். மலை வளத்தைக்காணச் சென்ற சேரன் செங்குட்டவனோடு அவன் பட்டத்தரசியும் உடனிருந்தனள், அமைச்சரும் தானைத் தலைவரும் உடன் இருந்தனர். கண்ணகியைக் கோயில் கட்டி வழிபடவும் என்று பட்டத்தரசி சொன்னாள் என்பன போன்ற செய்திகளை நோக்கும் போது அத்தாணி மண்டபத்தினுள் அரசியும் உடனிருந்திருக்கலாம் என்று கொள்ளுதல் பொருத்தமாகும்"[15] என்றும் இராசமாணிக்கனார் குறிப்பிடுகின்றார்.

அவையில் அரச குடும்பத்தாரும் உயர் அதிகாரிகளும் அறிஞர் புலவர் பெருமக்களும், தூதுவர்களும் பங்கேற்றனர். இவர்களுக்குத் தனித்தனி இடங்கள் ஒதுக்கப்பட்டிருந்தன. புலவன், பெருங்கணி, அமைச்சர்கள், தானைத் தலைவர்கள் அவர்களுக்கென்று ஒதுக்கப்பட்ட இடங்களில் அமருவர்.

அவையில் பங்கேற்ற பெருமக்கள் வேந்தனுக்கு ஆலோசனைகள் கூறுவதுடன் மன்னன் இடும் கட்டளைக்கு எதிர் நோக்கிக் காத்திருப்பர்.

மன்னனின் கட்டளையே சட்டமாக மதிக்கப்பட்டது என்றாலும், அரசவை சட்டம் இயற்றும் அரங்கமாக அமையவில்லை. வழக்காறுகளும், மரபுகளும் சட்டமாக விளங்கின. மன்னன் சட்டத்தின் காவலாக விளங்கினான். எனவேஅரசவை நிர்வாகத் தலைமையகமாக விளங்கியது. அரசவை இருக்கும் இடம் தலைநகரமாகக் கருதப்பட்டது. பொது மக்களின் விண்ணப்பங்கள் இதில் ஏற்றுக்கொள்ளப்பட்டன. அதில் முறை வைத்துக் காரியங்கள் செய்திருக்க ஒழுங்கேற்படுத்தினான் அரசன்”[16] என்று செல்வம் என்ற ஆய்வாளர் கூறுகின்றார்.

**அரசனது பணி**

அரசவையில் இருந்துகொண்டு ஆளும் மன்னர்கள் செய்ய வேண்டியிருந்த முக்கியப் பணிகளாக,

மிகப்பெரிய நிலப்பரப்பினைக் கொண்ட நாட்டினை ஆளும் வேந்தர்கள் தாம் நிருவாகம் செய்வதற்குத் தகுந்த முறையில் நாட்டைப் பல பிரிவுகளாகப் பகுத்து ஆட்சி செய்துள்ளனர். நிர்வகிக்கும் பொறுப்பினைப் பெற்றுள்ள அரசன், அயல்நாட்டு உறவுகளை நிர்ணயித்தல், போர் நடத்துதல், நாட்டின் பாதுகாப்புக்கு வேண்டிய படைகளை வைத்திருத்தல், அரசாங்கத்தைப் பல துறைகளாகப் பிரித்தமைத்தல், ஒவ்வொரு துறையின் கொள்கைகளையும் வகுத்தல், அதை நிறைவேற்றுதல், வரிகளை விதித்து வசூலித்தல், அவற்றைச் செலவு செய்தல், அலுவல் குழுவினரை நியமித்தல், அமைதி நிலவச் செய்தல், அதற்காகப் போதுமான காவற் படையினரைத் திரட்டி வைத்துக் கொள்ளுதல், குற்றவாளிகளைத் தண்டித்தல், மன்னிப்பளித்தல், ஆட்சி மன்றங்களை ஆளுதல், சமூகப் பொருளாதார நலத்தைப் பெருக்குதல், சட்டங்களை எல்லாம் அமல்செய்தல் அரசாங்கம் செய்ய வேண்டும் என்று சட்டம் கூறும்

செயல்களையெல்லாம் செய்தல் என்பனவற்றைக் கலைக்களஞ்சியங்கள் குறிப்பிடுகின்றன.

ஆள்வோன் என்னதான் பல்திறன் கொண்டவனாக இருந்தாலும் பல்வேறு துறைகளிலும் ஆற்றல் கொண்ட அறிஞர் பெருமக்களின் அறிவுறுத்தல்களின் வழி ஆட்சி நடத்தினால்தான் நாடு செழிக்கும். நல்லது நிலைக்கும். அதே நேரத்தில் அந்த அமைச்சர்கள் கொள்கை மாறாதவர்களாகத் தலைவனின் நலனுக்கும் மகளிர் நல்வாழ்வுக்கும் இடுக்கண் விளைவிக்காதவர்களாக அமைந்திட வேண்டும் என்பதை,

"பால் புளிப்பினும், பகல் இருளினும்
நாஅல் வேத நெறி திரியினும்
திரியாச் சுற்றமொடு முழுது சேண் விளங்கி"[17]

என்று புறநானூற்றுப்பாடல் வரியின் மூலம் அறிகின்றோம்.

சங்க காலத்தில் ஆட்சிமுறை அரசனை அச்சாணியாகக் கொண்டு இயங்கியுள்ளது. இவ் ஆட்சி முறையில் அரசனே நடுநிலையாக விளங்கியுள்ளான். மன்னர்கள் தலைமையில் நடைபெறும் அரசினை 'முடியரசு' என்று கூறுகின்றனர். சங்க இலக்கியங்களில் காணப்பெறும் அரசு முடியரசாகும். இவற்றில் எட்டுத்தொகை நூல்களில் புறநானூறும், பதிற்றுப்பத்தும் குறிப்பிடும் அரசு முடியரசே ஆகும். சேர, சோழ, பாண்டிய மன்னர்களே பண்டைய தமிழகத்தில் செங்கோலோச்சிய முடியரசர்கள் ஆவர். வேந்தரது அரசுரிமை பரம்பரையாகப் பெறப்பட்டது. அனைத்து அதிகாரங்களும் அரசனிடமே இருந்தன. இவற்றின் அடிப்படையில்தான் சங்ககாலத்தில் முடியாட்சி தவிர வேறு முறையிலான ஆட்சிமுறை இருந்ததற்கான சான்றுகள் இல்லை. அரசு அல்லது ஆட்சிமுறை கோவரசு (முடியரசு) (Monarcy), குடியரசு (Democracy), சீரியோரசு

(Aristocracy) என்று மூவகைப்படும் என்றும் அதில் மூவேந்தரின் அரசு முடியரசாகும்”[18] என்று தமிழறிஞர் தேவநேயப்பாவாணர் கூறுவர்.

**அரச பாகுபாடு**

பழந்தமிழர் வரலாற்றில் நான்கு வகையான தலைமைகள் படிப்படியாகத் தோன்றின. அவையாவன, 1. சீறூர் மன்னர், 2. முதுகுடி மன்னர், 3. குறுநில மன்னர், 4. வேந்தன் என பாகுபாடு வைத்து பிரித்தனர்.

"சீறூர் மன்னர் என்பவர், 'தான் மக்களுள் ஒருவர்' என்ற நிலையில் வாழ்ந்தார். 'முதுகுடி மன்னர்' என்பவர் 'தன் மக்களுக்காகத் தான்' என்ற மன நிலையில் மக்களை ஒருங்கிணைத்தார். 'குறுநில மன்னர்' என்பவர்கள் பெரும்பாலும் மக்கள் பிரதிநிதிகளாகவும் வள்ளல்களாகவும் இருந்துள்ளனர். 'வேந்தர்' என்பவர் 'அரசுக்காகத்தான் மக்கள்' என்ற நிலையில் தன்னுடைய அதிகாரத்தினைச் செலுத்தினர். இந்நான்கு தலைமைகளுக்கும் இடையேயுள்ள வேற்றுமைகள் அவர்களின் நிலப் பொருளாதாரம், நிலபிரிவு, அரசாளுமை சார்ந்து ஏற்பட்டன”[19] என்று சரவணன் என்பவரின் கூற்று நினையத்தக்கது.

**சீறூர் மன்னன்**

"பழந்தமிழரின் சீறூர் மன்னர் பற்றிய சித்திரத்தினைச் சங்க இலக்கிய அடிகளிலிருந்து உருவாக்கிக் கொள்ள முடிகிறது. குச்சுப்புல் நரைத்தது போன்ற நிறமுள்ள தாடியை உடையவர். ஊரைவிட்டு உபசரிக்கத் தன் வாளினை அடமானம் வைப்பர். விதை நெல்லைக் கொண்டும் விருந்து உபசரித்துள்ளனர். தன் வீட்டில் தனக்காக இருந்த பழைய உணவினையும் விருந்தினருக்கு அளித்துள்ளனர். காலையில் கள்ளைக் குடித்துவிட்டுத் தூசி நிறைந்த முற்றத்தில் உறங்குபவர். தான் கவர்ந்து பெற்ற செல்வத்தினை ஊருக்கு வாரிக்கொடுப்பவர்.

விலையுயர்ந்த ஆபரணங்கள் ஏதும் இல்லாதவர். போர்காலத்தில் தலைவனாகச் செயல்படுபவர். அவருக்கு யாரும் கடனுக்குக் கள் தருவதில்லை. யானைத் தந்தத்தை ஈடாக வைத்து அவர், கள் வாங்கிப் பருகினார். இவர்கள் காட்டு நாட்டார், பெரும்பாலும் அவர்களின் நிலப்பகுதி காடு சார்ந்தே அமைந்துள்ளது. நெல் விளையாத புன்செய் நிலமுடையவர்கள். வரகும் தினையும் விளையுமிடத்தினர். கள்ளிச்செடி வளர்ந்த புன்செய் நிலத்தினர். பருத்திச் செடியினை வேலியாக உடைய ஊரினர். அரிய மலையில் வாழ்பவர்"[20] என்று சரவணன் குறிப்பிடுகின்றார்.

இவர் ஊருக்கு வெளியில் இருந்த மன்றத்தில் அமர்ந்து பொதுச்சிக்கலைத் தீர்ப்பார். இந்த மன்றம் 'பொதியில்', 'நாள் மகிழ் இருக்கை', 'நாள் இருக்கை', 'நாள் அவை', 'நாள் மகிழ்', 'நறவு மகிழ் இருக்கை' என்றெல்லாம் அழைக்கப்பட்டது. ஓர் ஊருக்கு வருகைதரும் பாணர் முதலான கலைஞர்கள் இந்தப் பொது அவையில்தான் தன் கலைத்திறனை முதலில் வெளிப்படுத்துவர். இம்மன்றத்தில்தான் ஆய்ச்சியர் குரவைக் கூத்தினை நிகழ்த்துவர். என்பது மன்றம் ஊர்ப்பொது அவையாக இருந்துள்ளது. அதுவே சீறூர் மன்னரின் அவைக்களமாக இருந்துள்ளது. அவரது வாழிடம் ஊருக்குள் இருந்துள்ளது. இச்செய்தியினை,

"நாள் கள் உண்டு, நாள் மகிழ் மகிழின்,
யார்க்கும் எளிதே, தேர்ஈதல்லே;
.................................................................
பட்ட மாரி உறையினும் பலவே"[21]

"நின் மகிழ் இருக்கையே"[22]

"நோற்றோர் மன்ற தாமே கூற்றம்"[23]

"குரங்கு ஒருங்கு இருக்கும் பெருங்கல் நாடன்"[24]

"................................... கலி அழி மன்றத்து
உள்ளம் அழிய"[25]

மேற்கண்ட பல நூல்களில் விளக்கம் தருகின்றது.

சீறூர் மன்னரைச் 'சீறூர் மாதவி', 'சிறுகுடிக்கிழார்', 'சீறூர் வண்மையோன்'? 'சீறூர் நெடுந்தகை' என்றெல்லாம் சிறப்பித்துள்ளனர். இவர் மறவர் பெருமகனாக, கோவலர் வீரராக, பின்புலத்து வேலோனாகத் திகழ்ந்தார். இவர்களுடன் பலர் வள்ளல்களாகவும் இருந்துள்ளனர்.

புலவர்கள் 'வல்லாண் முல்லை' என்னும் துறையமைந்த பாடல்களால் மட்டுமே சீறூர் மன்னர்களைப் புகழ்ந்துள்ளனர். புலவர்கள் சீறூர் மன்னர்களின் மனைவியினரே 'மூதின் முல்லை' என்னும் துறையமைந்த பாடல்களால் மட்டுமே போற்றியுள்ளனர். இரண்டு துறைகளில் அமைந்த பாடல்களில் சீறூர் மன்னனின் பெயரோ அவர்களின் மனைவியின் பெயரோ குறிப்பிடப்படுவதில்லை.

சீறூர் மன்னருக்கும், மக்களுக்கும் இடையில் எந்தவித வேறுபாடும் இல்லை எனில் இவர் மக்களுள் ஒருவர். மக்கள் இவரைத் தன் தலைவராக நினைத்தால். இவருக்காக வேறு சிறப்பு உரிமைகளோ, சலுகையோ ஏதும் தந்துவிடவில்லை என்றால் ஊர் மக்களுக்குக் காவற்காரர், ஊர்த் தலைவர் என்று சொலல்வர்.

**முதுகுடி மன்னன்**

பழந்தமிழரின் சீறூர் மன்னரைவிடச் சற்று செல்வாக்கும் நிலவிரிவும் உடையவர் முதுகுடி மன்னர். இவரை 'ஓரெயில் மன்னர்', 'தண்பனைக் கிழவன்' (கிழவன் - தலைவன்), 'தொல்குடி மன்னன்' என்றெல்லாம் சிறப்பித்துள்ளனர்.

இவர்களின் நிலப்பகுதி வயல் சார்ந்தது. இவர்களைப் பற்றிய பாடல்கள் அனைத்தும் 'அகட்பாற்காஞ்சி' என்னும் துறையைச் சார்ந்ததாகவே உள்ளது. புறநானூற்றில் பாடலில் 336 முதல் 355 பாடல்கள் வரை முதுகுடி மன்னரைப் பற்றியவை.

"வேட்ட வேந்தனும் வெஞ்சினத் தினனே
.................................................................
பகை வளர்ந்திருந்த இப்பண்பு இல் தாயே"[26]

"ஆர்கலியினனே, சோணாட்டு அண்ணல்"[27]

என்ற பாடலில் பெரும்பாலும் இவர்கள் நிலவுடைமையாளர்கள். இவர்கள் வேந்தரை எதிர்த்துப் போரிட்டு அழிந்தவர்கள் ஆவர்.

**குறுநில மன்னன்**

குறுநில மன்னர்களின் வாழ்விடங்கள் பெரும்பான்மையாக மலைசார்ந்த பகுதியாகவே உள்ளன. அதியமான், பாரி, காரி, ஆய், பேகன், நள்ளி,இளவிச்சிக்கோ, ஓரி, கொண்கான் கிழான், ஏறைக்கோண், குமணன், பிட்டங்கொற்றன் போன்ற குறுநில மன்னர்கள் குறிஞ்சி நிலத்தைத் தன்னிடமாகக் கொண்டு ஆட்சி புரிந்துள்ளனர். இவர்களின் நில எல்லைகள் பற்றிய செய்தியினை,

"வலம் படு வாய்வாள் ஏந்தி ஒன்னார்
களம் படக் கடந்த கழல் தொடித் தடக்கை,
ஆர் கலி நறவின், அதியர் கோமான்"[28]

"அளிதோதானே, பாரியது பறம்பே
.................................................................
நாடும் குன்றும் ஒருங்கு ஈயும் மே"[29]

"ஓரி கொல்லோ? அல்லன் கொல்லோ?

பாடுவல் விறலி!................................."[30]

என்ற பாடல் வரிகளின் மூலம் புறப்பாடல் தமக்கு எடுத்துரைக்கின்றது.

பாரி, காரி, ஓரி, நல்லி, பேகன், ஆய், அதியன் என்ற கடையேழு வள்ளல்கள் கொடைக்கும் பெயர்ப் பெற்றவர்கள். தமிழ்ப் புலவர்களை ஆதரித்துப் போற்றினர். இவர்கள் சேர, சோழ, பாண்டிய ஆட்சியாளர்களுக்குக் கீழ்ப்படிந்தவர்கள் என்ற போதிலும் தத்தம் ஆட்சிப் பகுதிகளில் வலிமையும், புகழும் பெற்றுத் திகழ்ந்தனர்.

**வேந்தர்கள்**

நால்வகை நிலத்தினையும் தனித்தனியே ஆண்ட நிலைமாறி நால்வகை நிலத்தையும் ஒருவரே ஆளும் சூழல் ஏற்பட்ட போது, 'வேந்தர்' உருவானார். ஆற்றுப்படை இலக்கியங்கள் நானிலத்தை ஆண்ட வேந்தர்கள் பற்றி விரிவாகக் கூறியுள்ளன. பாண்டிய நெடுஞ்செழியனை நான்கு நிலத்தையும் தனித்தனியே ஆண்ட குறுநில மன்னர்கள் வணங்கியமையை,

"தென் குமரி, வட பெருங்கல்

ஒன்று பட்டு வழி மொழிய

.................................................................

வரையா ஈகைக் குடவர் கோவே!"[31]

என்று புறநானூற்று அடிகள் புலப்படுத்துகின்றன. சேரமான் கோக்கோதை மார்பன் மூன்று நிலத்தலைவர்களுக்கும் தலைவர் என்பதால் அவரை 'நாடன்' (குறிஞ்சி), 'ஊரன்' (மருதம்), 'சேர்ப்பன்' (நெய்தல்) என்பதை,

"நாடன் என் கோ? ஊரன் என் கோ?
பாடு இமிழ் பனிக் கடற் சேர்ப்பன் என்கோ?
...................................................................
பிறங்கு நீர்ச் சேர்ப்பினும், புள் ஒருங்கு எழுமே"[32]

என்று புறநானூற்றுப் பாடல் வரிகள் புகழ்ந்து பேசியுள்ளன.

வேந்தர்கள் பழங்குடியினரையும், சீறூர் மன்னர்களையும், முதுகுடி மன்னர்களையும், குறுநில மன்னர்களையும் வென்று தமது ஆட்சியை விரிவுபடுத்தினர். இதற்குப் பல சான்றுகளைக் கூறமுடியும்.

கூடல் நகரை ஆண்ட அகுதையிடமிருந்து அப்பகுதியைப் பாண்டியர் கைப்பற்றினர். கோப்பெருங்கிள்ளி ஆமூர் மல்லனை வென்று 'ஆமூர்' நகரையும் பழையனை வென்று 'போர்வை' நகரையும் கைப்பற்றினான். சேந்தன் என்பவரிடமிருந்து 'உறந்தை' என்ற நகரினைச் சோழன் வெளியன் தித்தன் கைப்பற்றினான்.

பெருஞ்செல்வமும் நிலவிரியும் ஆளுமைத்திறனும் முரசு, காலாட்படை, யானைப்படை, குதிரைப்படை, தேர்ப்படை, வெண்கொற்றக்குடை, ஆணைச்சக்கரம், மணிமுடி ஆகியவற்றை உடையவரே 'வேந்தர்'. இவர்கள் பனம் பூ, அத்திப்பூ, வேம்பூ ஆகிய அடையாளப் பூக்களைக் கொண்டிருந்தனர். புலிக்கொடி, வில்கொடி, மீன்கொடி என வேந்தர்கள் அடையாளக் கொடிகளையும் வைத்திருந்தனர்.

அரசு என்ற நிறுவனப்படுத்தப்பட்ட அதிகார நிலையைக் கைப்பற்றி ஆட்சி புரிபவர்களை இறை, கோ, கிழவன், கிழான், மன்னன், வேந்து, வேந்தன், அரசு, அரசன், குருசில், குரிசில், கொற்றன், கொற்றவன் எனப் பல்வேறு சொற்களால்

பழந்தமிழ் இலக்கியங்கள் சுட்டியுள்ளன. இச்சொற்கள் ஒன்றுக்கொன்று மிக நுண்ணிய வேறுபாடுகளைக் கொண்டுள்ளன.

நாடாளும் வேந்தன் குடிமக்களுக்கு நன்மைகள் புரிவதையே குறிக்கோளாகக் கொண்டிருக்க வேண்டும். அப்பொழுதுதான் அந்நாட்டில் கவலைகள் நீங்கி மகிழ்ச்சி நிலவும்; மக்கள் மன்னனைப் போற்றுவர். இதனை வேந்தன் நன்குணர்ந்து செயல்பட வேண்டும். அதற்கேற்றாற் போலத் தன் கடமைகளைச் செவ்வனே செய்திடல் இன்றியமையாததாகும். தொல்காப்பியம் குறிப்பிடும்போது,

"ஐவகை மரபின் அரசன் பக்கமும்"[33]

என்ற நூற்பாவிற்கு உரையாசிரியர் இளம்பூரணர் "ஓதல், வேட்டல், ஈதல், படை வழங்குதல், குடியோம்புதல்"[34] என்றும் "ஐந்து கடமைகள் எனப் பொருள் கூறுகின்றார்."[35]

இவ்வாறு வேந்தர் தமக்கு வரையறுத்த கடமைகளைப் புரிந்து வந்தமையைப் புறநானூறு மூலம் உணர முடிகிறது. குடிமக்களின் தந்தையாக வேந்தன் கருதப்பட்டான். உயிருக்கு உறுதி பயப்பவாகிய உண்ணும் உணவும், பருகும் நீரும் உலகத்துக்கு உயிராகக் கருதப்படவில்லை. மாறாக, வேந்தனின் இயக்கமே உலகத்தின் இயக்கம் என்பதை,

"நெல்லும் உயிர் அன்றே; நீரும் உயிர் அன்றே;
மன்னன் உயிர்த்தே மலர்தலை உலகம்;
அதனால், யான் உயிர் என்பது அறிகை
வேல் மிகு தானை வேந்தற்குக் கடனே"[36]

என்னும் பாடலடிகளால் அறிந்து கொள்ளமுடிகின்றது.

**அறநெறி**

சங்க இலக்கியத்தில் பல இடங்களில் அறநெறி பற்றிக் கூறப் பெற்றிருப்பினும் இதுதான் அறம் என்ற தெளிவான வரையறையைக் காண இயலவில்லை. திருவள்ளுவர் தமது திருக்குறளில் மனத்துக்கன் மாசிலன் ஆதலும், அழுக்காறு, அவா, வெகுளி, இன்னாச்சொல் நான்கும் இழுக்கா இயன்றதும், முகத்தான மர்ந்தினிது நோக்கி அகத்தானாம் இன்சொலனதாய் ஆதலும் அறம் என அறத்துக்கு ஒரு வரையறை தருகின்றார். தூய்மையான எண்ணமும் தூய்மையான செயலுமே அறம் எனப்படும். இவ்வறத்தைப் பின்பற்றலே அறநெறி எனப்படும். அறநெறியைப் பின்பற்றுவதும் பின்பற்றாமலிருப்பதும் அவனது மனசாட்சியைப் பொறுத்தது, அறநெறியுள் ஒழுங்கும் அடங்கும். எனவே மனிதனுடைய சிந்தனையோடும் செயலோடும் பொருந்தும் நெறியே அறநெறியாகும்.

செல்வம் இல்லாதவர்கட்குக் கொடுத்து வாழ்தலை ஒரு நெறியாக ஏற்றுக் கொண்டனர். கொடைப் பண்பு இவ்அடிப்படையில் தான் தோன்றுகிறது. இவ்வாறு தோன்றும் பண்பு தலைமைப் பொறுப்பு ஏற்பவர்களால் பின்பற்றப்படும் போது அவர்கட்கு ஆதரவும், புகழும் பெருகக் காரணமாக அமைகிறது. இத்தகைய பண்பைப் பெறாதவர் வேந்தரானாலும், அரசரானாலும் புலவரால் பாராட்டப்பெறுவதில்லை. எனவே ஆட்சியில் அறநெறி வேண்டும் என்பதைச் சங்க இலக்கியம் வலியுறுத்துகின்றது.

நான்குவகைப் படைகளைப் பெற்றிருப்பினும் அரசின் வெற்றிக்கு அறநெறியே அடிப்படையாகும் என்பதை,

"ஓங்கு மலைப் பெருவில் பாம்பு ஞாண் கொளீஇ
ஒரு கணை கொண்டு மூஎயில் உடற்றி,

..............................................................................

வடு ஆழ் எக்கர் மணலினும் பலவே”[37]

என்ற பாடலில் அறியமுடிகின்றது.

அறனில்லாத வேந்தன் ஆளுங்குன்றுகள் வறட்சியுற்றனவாக இருக்கும் என்பதனை,

"பல் இதழ் மென் மலர் உண்கண், நல் யாழ்
நரம்பு இசைத்தன்ன இன் தீம் கிளவி
..............................................................................
வறன் உறு குன்றம் பல விலங்கினவே”[38]

என்னும் அகப்பாடல் வழி வேந்தனது நிலப்பரப்பரப்பிலுள்ள குன்றுகளின் வறட்சிக்குக் கூட அறநெறி திரிதலே என்ற கொள்கை இக்கருத்தில் எதிரொலிக்கின்றது. ஆட்சியின் மீது கொண்ட நம்பிக்கை வளர்ச்சியை இது காட்டுகின்றது.

பாண்டியன் நெடுஞ்செழியனைப் புலவர் ‘செங்கோன்மையில் பிறழாது நின்று அரசியலறம் இதுவென ஏனையோர்க்குக் காட்டி பெரியோர் சென்ற வழியில் தப்பாமல் ஒழுகுபவன்’ எனக் கூறுவதனை,

"அரசியல் பிழையாது அறநெறி காட்டி,
பெரியோர் சென்ற அடிவழிப் பிழையாது,
குடமுதல் தோன்றிய தொன்று தொழு பிறையின்
வழிவழிச் சிறக்க, நின் வலபடு கொற்றம்!”[39]

என்ற பாடல் வரிகள் நமக்கு தெளிவுறுத்துகிறது.

இவ்வாறு ஆட்சிப் பொறுப்பிலுள்ளவர்க்கு மன்னன், வேந்தன், அரசன் அனைவரும் அறநெறியில் நின்று தம் ஆட்சியைச் செங்கோலாட்சியாய் நடத்த வேண்டும் எனச் சங்க இலக்கியம் கூறுகிறது. அறநெறி என்பது தனி மனிதன் பின்பற்றும் ஒழுக்கம் எனக் கொண்டு ஒழுகி வந்ததால் அவ் அறத்தினின்றும் ஆள்வோர் பிறழாமல் இருக்க வேண்டும் என மக்கள் விரும்பினர். அவ் விருப்பத்தைப் புலவர்கள் தங்கள் பாடல்களில் பதித்துக் காட்டுகின்றனர்.

அறம் பற்றித் தொல்காப்பியம்,

"அந்நி லைமருங்கின் அறமுதலாகிய
மும்முதற் பொருட்கும் உரிய என்ப"[40]

"இன்பமும் பொருளும் அறனுமென்றாங்கு
அன்பொடு புணர்ந்த ஐந்திணை மருங்கின்"[41]

எனக் கூறுகின்றது.

புறுநானூறு,

"சிறப்புடை மரபிற் பொருளும் இன்பமும்
அறத்துவழிப் படூஉம் தோற்றம் போல"[42]

என்றும், மேலும் கலித்தொகையில்,

"அறம் பொருள் இன்பம் என்று அம்மூன்றின்"[43]

என்று குறிப்பிடுகின்றன. நாட்டை ஆள்வோர்க்கு அறம், பொருள், இன்பம் இருப்பினும் அதனுள் அறம் முதன்மை அறங்களாக நிற்க வேண்டும் என வலியுறுத்துகின்றது.

**ஈகை, அறம்**

சங்ககாலச் சமூகம் இனக்குழுச் சமுதாய அமைப்பிலிருந்து உடைமைச் சமூகமாக மாறிக்கொண்டிருந்த ஒரு காலகட்டமாகும். சங்க இலக்கியங்களில் வேட்டையோடு தொடர்புடைய குறுநிலத் தலைவர்கள் தம்மை நாடிவந்த பாணர் பாணர், பொருநர், விறலியர், கூத்தர் முதலான கலைஞர் குழுக்களுக்கு இறைச்சியோடு கலந்த உணவும், கள்ளும், ஆடையும் வழங்கி மகிழ்ந்தது சிறப்பாகப் பாராட்டப்படுகின்றது. சிற்றரசர்களின் இவ்வகை உபசரிப்பு அறத்தகுதி பெறவில்லை.

குறுநிலத் தலைவர்களின் இவ்வகை உபசரிப்பு குறித்த பாடல்கள் பல புறநானூற்றில் இடம்பெற்றுள்ளன. அதியமான் நெடுமான் அஞ்சியைக் குறித்து ஔவையார் பாடிய பாடல்,

"புன்தலைப் பொருநன் அளியன் தான் என
தன் உழைக் குறுகல் வேண்டி, என் அரை
முதுநீர்ப் பாசி அன்னஉடை களைந்து
திருமலர் அன்ன புதுமடிக் கொளீஇ
மகிழ்தரல் மரபின் மட்டே அன்றியும்
.....................................................................
பகடுதரு செந்நெல் போரொடு நல்கி
கொண்டி பெறுக என்றானே"[44]

என்று புறப்பாடலில் அதியமான் தன் நெடுமனை முற்றத்தில் நின்று முன்னிரவு நேரத்தில் தடாரிப் பறையை இசைக்கும் பொருநனைக் கண்டவுடன், இப்பொருநன் இரங்கத் தக்கவன் என்று கருதி அவன் இடையிலிருந்த நீர்ப்பாசியன்ன பழைய ஆடையை நீக்கி மலர் போன்ற புத்தாடையை அணியுமாறு செய்து மதுவோடு ஊன் துவையலையும் சோற்றையும் வெள்ளிக் கலத்தில் இட்டு

அதனை உண்பித்ததோடு அவன் சுற்றத்தாரது வறுமை துயரத்தையும் போக்க நெற்குவியலையும் கொடுத்தார் என்று ஔவையார் பாடுகின்றார்.

பாணன் ஒருவன் ஓய்ந்த நடையினை உடையவனாய் வருத்தத்துடன் பலா மரத்தினடியில் தன் சுற்றத்துடன் தங்கியிருந்த போது அங்கு வந்த வில்லையுடைய வேட்டுவன் ஒருவன் விலங்கின் ஊனைத் தீயினில் சுட்டு அவர்களை உண்ணச் செய்ததோடு, தான் காட்டு வழியில் இருப்பதால் அவர்களுக்குக் கொடுப்பதற்கு வேறு பரிசுப் பொருள்கள் இல்லை என்று கூறித் தனது மார்பில் அணிந்திருந்த முத்து வடங்களையுடைய ஆரத்தையும் முன்கையில் அணிந்த கடகத்தையும் கொடுத்தான் என்றும் அவனது பெயரையும் நாட்டையும் கேட்டபோது கூறாமல் போய்விட்டான் என்றும் வழியில் பிறரைக் கேட்டபோது அவன் பெருநள்ளி என்பதைப் பாணன் அறிந்தான் என்றும் வண்பரணர் பெருநள்ளி என்ற குறுநிலத் தலைவனின் புகழ்விரும்பா வள்ளண்மையைப் புகழ்கின்றதை,

"................................ வீறுசால் நன்கலம்
பிறிது ஒன்று இல்லை, காட்டு நாட்டேம்என
மார்பில் பூண்ட வயங்குகாழ் ஆரம்
மடைசெறி முன்கைக் கடகமொடு ஈத்தனன்
எந்நாடோ எனநாடும் சொல்லான்
யாரீரோ என பேரும் சொல்லான்"[45]

என்னும் பாடலில் தம்பெயர் மற்றும் ஊரின் பெயரைக் கேட்டும் சொல்லாமல், உணவும் பரிசிலும் வழங்கிச்சென்ற கண்டீரக்கோ பெருநள்ளியின் செயல், உடைமைச் சமூக அறம், ஈகை குறித்த சொல்லாடல்களிலிருந்து வேறுபட்டது.

வேந்தனின் போர்மறத்தைப் பாடிய விறலியர்க்கும் பாணர்க்கும் அவர்களுடைய வறுமை முற்றாக நீங்குமாறு புகழமைந்த நல்ல அணிகலன்களைத் தொடர்ந்து வழங்கினான் என்பதை,

"மின்னிழை விறலியர் நின் மறம் பாட
இரவலர் புன்கண் தீர நாள் தொறும்
உரைசால் நன்கலம் வரைவு இல வீசி"[46]

என்ற பாடல் வரிகள் உணர்த்துகின்றது.

உயரினத்தை வகுத்தும் பனிகுளிர் மிகுந்த விடியர் காலையில் சென்ற பாணர் மகிழ சூரியன் தோன்றினாற் போன்ற இரவலர்தம் சிறுமைப்பட்ட வாழ்வு செல்வத்தால் பெருக்கமடையச் சேரலாதன் பொருள் வழங்கினான் என்பதை,

"பகல் நீடு ஆகாது இரவுப் பொழுது பெருகி
மாசி நின்ற மாகூர் திங்கள்
பனிச்சுரம் படரும் பாண்மகன் உவப்ப
..............................................................
இரவல் மாக்கள் சிறுகுடி பெருக
உலகம் தாங்கிய"[47]

என்று நச்செள்ளையார் குறிப்பிடுகின்றார்.

பாண்டிய மன்னன் வழுதி மாற்றான் நாட்டில் கிடைத்த அரிய அணிகலன்களைக் கொண்டுவந்து புலவர், கூத்தர், பாணர் முதலானோருக்கு ஈந்து மகிழ்ந்தான் என்பதை,

"பாசவல் படப்பை ஆர்எயில் பலதந்து
அவ்வெயில் கொண்ட செய்வுறு நன்கலம்
பரிசில் மாக்கட்கு வரிசையின் நல்கி"[48]

என்று புறப்பாடல் கூறுகின்றது. மேலும் வழுதியை 'தாண்டா ஈகைத் தகைமாண் குடுமி' என்று புகழ்ந்து பாடுகின்றார்.

சங்ககாலத்தில் பாரியைப் போன்று கொடைச் சிறப்பு உடையவர் வேறு யாருமில்லை. பெருஞ்சித்திரனார் வள்ளல்களைப் பட்டியலிடும் போது பாரியையே முதலில் குறிப்பிடுகின்றார்.

பாரியைப் பகைவர் நெருங்க முடியாத வகையில் மலை அரண்களைக் கொண்டிருந்தனர். ஆனால் பாணர், விறலியர் எப்போது வேண்டுமானாலும் சென்று பார்க்கும் நிலையில் பரிசிலருக்கு எளிதில் அணுகும் நிலையினனாகத் திகழ்ந்தான். மக்கள் அனைவரும் பாரியின் கொடைச்சிறப்பையே மிகுதியாகப் பேசினர். நாட்டைக் காக்க பாரியும் இங்கு உள்ளான் என்றனர். இச்செய்தியினை,

> "பூத்தலை அறாஅப் புனைகொடி முல்லை
> நாத் தழும்பு இருப்பப் பாடாது ஆயினும்
> கறங்கு மணி நெடுந்தேர் கொள்க! எனக் கொடுத்த
> பரந்து ஓங்கு சிறப்பின் பாரி மகளிர்"[49]

இவ் அடியில் முல்லைக்கொடிக்குத் தன்னுடைய தேரையே ஈந்தான் பாரி என்ற செய்தி தெரியவருகின்றது.

வறுமையுற்ற பாணனும் சுற்றத்தாரும் இளந்திரையனிடம் பரிசு பெற்று வந்ததைப் பரிசு பெற விழையும் பாணனிடம் கூறுகின்றான். களவும் கொலையும் புரியும் கொடியோர்கள் இல்லாதது இளந்திரையனின் நாடு. மூவேந்தர்களிலும் சிறப்புடையவன் இளந்திரையன். இயற்கைச் சீற்றங்களாலும் கொடிய விலங்குகளாலும் அவன் நாட்டிற்கு எத்தீங்கும் ஏற்படாது. உலக உயிர்களுக்கெல்லாம் உயிர் வாழ ஆதாரமாக இருப்பது உணவு. அந்த உணவை உற்பத்தி செய்யும் உழவர்கள் வாழ்கின்ற பகுதிகளில், வறுமையே கிடையாது என்னும் நிலையினை,

"தொல்பசி அறியாத் துளங்கா இருக்கை
மல்லல் பேரூர் மடியின் மடியா
வினைஞர் தந்த வெண்ணெல் வல்சி"[50]

என்ற பாடல் அடிகள் உழவர்கள் என்றும் வறுமையடையாதவர்கள் என்பதைச் சுட்டிக்காட்டுகின்றது. பற்பல இடங்களைக் கடந்து சென்றால், பரிசில் பெறுபவர்களுக்கு என்றுமே அடையாத நெடுங்கதவும் இளந்திரையனிடம் இருக்கின்றது. சுற்றத்தாருடன் சென்றால் அவர்கள் வறுமையையும் நீங்கப் பரிசில் வழங்குவான். அவன், பரிசில் பொருள்களோடு குதிரைகளையும் யானைகளையும் இன்னபிற பொருள்களையும் வழங்கும் வண்மையும் மனிதமும் உடையவன்.

கடல் பிறக்கோட்டிய செங்குட்டுவன் என்னும் மன்னன் கொடுக்கும் பொருள்களை அவை அரியவை என்று எண்ணாமலும், தனக்கு வேண்டும் என்று எண்ணாமலும், பிறருக்காக வழங்குபவன், தான் அணிந்த ஆபரணங்களை இரவலருக்கு மிகக் கொடுத்ததல்லாமல் கனவில்கூட, 'என்னுடைய துன்பத்தை நீக்குக' என்று பிறரிடம் கூறுதலை அறியாத குற்றமற்ற மனத்தை உடையவன் என்பதையும்,

"அரிய என்னாது ஓம்பாது வீசி,
கலம் செலச் சுரத்தல் அல்லது, கனவினும்
களைக, என அறியாக் கசடு இல்"[51]

என்ற பாடலடிகள் உணர்த்துவதன் வழி அறியமுடிகின்றது.

'அணுவைத் துளைத்து ஏழ் கடலைப் புகட்டிக் குறுகத் தரித்த திருக்குறள்' எனும் பெருமை பெற்றது திருக்குறள். உலகிற்கு அறநெறி அறிவிக்கும் திருக்குறள் உலகமொழிகளில் மொழிபெயர்க்கப்பட்ட சிறப்பினைப் பெற்றது. அறியாமை நீக்கி பகுத்தறிவைத்தரும் சிறப்பினைப் பெற்றது. எண்ணிலடங்கா

கருத்துக்களைக் கொண்ட திருக்குறள் மனிதநேயச் சிறப்பை எடுத்துரைக்கின்றது.

"அன்பிலார் எல்லாம் தமக்குரியர் அன்புடையார்
என்பும் உரியர் பிறர்க்கு"[52]

என்ற குறட்பாவில் அன்பு என்பது கடுகளவும் இல்லாதவர் தம் பொருள் எல்லாவற்றையும் தாமே பயன்படுத்துவர். ஆனால் அன்புடையோர் தம்மிடம் இருப்பதைப் பிறருக்கும் கொடுத்து பிறருக்காக வாழ்வர் என்பதை வள்ளுவர் கூறுகின்றதை,

"பகுத்துண்டு பல்லுயிர் ஓம்புதல் நூலோர்
தொகுத்தவற்றுள் எல்லாம் தலை"[53]

என்று குறிப்பிடுகின்றார். மேலும்,

"நின்நயந்து உறைநர்க்கும் நீநயந்து உறைநர்க்கும்
பன்மாண் கற்பின்நின் கிளைமுத லோர்க்கும்
கடும்பின் கடும்பசி தீர யாழநின்
நெடுங்குறி எதிர்ப்பை நல்கி யோர்க்கும்
இன்னோர்க்கு என்னாது என்னொடும் சூழாது
வல்லாங்கு வாழ்தும் என்னாது, நீயும்
எல்லோர்க்கும் கொடுமதி மனைகிழ வோயே!"[54]

என்னும் புறப்பாடல் நூலில் குமணவள்ளல் தந்த இந்த வளங்களை எல்லாம், கொடு, கொடு, எல்லோர்க்கும் கொடு, உற்றார் உறவினர்களுக்கும் நம்முடைய வறுமைக்காலத்தில் நமக்குத் தந்து உதவியவர்களுக்கும் கொடு. யாருக்குக் கொடுப்பது என்று யோசிக்க வேண்டாம். என்னைக் கேட்காமலேயே கொடு, இந்த

வளங்களையெல்லாம் நாமே வைத்துக்கொண்டு வளமாக வாழலாம் என்றெல்லாம் நினைக்காமல் எல்லோர்க்கும் கொடு என்று மனமகிழ்ச்சியோடு மனைவிக்கு அனுமதி வழங்குகின்றார் பெருஞ்சித்திரனார்.

சங்க காலத்தில் உடைமைச் சமூக அமைப்பு மெல்லத் துவங்கி இறுக்கம் பெற்ற நிலையில் இருப்பவன் - இல்லாதவன் இடையிலான வேறுபாடு பெரிதாகத் தெரியத் தொடங்குகின்றது. உடைமைச் சமூகத்தின் உடனடி விளைவான பசியும் பட்டினியும் சமூகச் சிக்கல்களாகின்றன. உடைமையாளர்களுக்குப் பிறர் பங்கைத் திருடிய குற்ற உணர்வு சிறிதுமில்லை. உடைமைச்சமூகத்தை நியாயப்படுத்தவும் இருக்கின்ற சமூக அமைப்பைக் கட்டிக்காக்கவும் உருவாக்கப்பட்ட ஆயுதங்கள், ஏற்றத்தாழ்வை நியாயப்படுத்தும் உள்நோக்கத்தோடு கொடையை, ஈகையை, விருந்தோம்பலை முன்மொழிகின்றன. 'செல்வத்துப் பயனே ஈதல்' என்கின்றபோது ஈகைக்குப் பயன்படுகின்ற செல்வம், ஈகைக்காகவே செல்வம் என நியாயப் படுத்தப்படுகின்றது.

**குடிமக்களைப் பாதுகாத்தல்**

சங்ககால வேந்தர் குடிமக்களைக் காப்பாற்றிய திறத்தைச் சங்கப் பாக்கள் சிறப்பிக்கின்றன. புலி, தன் குட்டிகளைப் பேணுவதைப் போல் அரசன் மக்களைப் பேணிக் காத்தான் (புறம். 42:10-11). தாய்ப்புலி உயிரோடு இருக்கும் வரை தன் குட்டிகளைப் பிறர் கொண்டு போக விடாதது போல தம் மக்களைப் பகையரசர் அடிமையாக்கி விடாமல் பாதுகாத்தனர் (வெற்றிபெற்ற வேந்தன் தோல்வியுற்ற பகை வேந்தனின் படை வீரர்களை அடிமைகளாக நடத்துதல் மரபு).

வேந்தன் எருதிற்கு ஒப்பானவனாகச் சுட்டப்பட்டான். சகடைகள் உப்பை முகந்து கொண்டு மலை நாட்டை நோக்கிச் செல்கின்றன. அச்சகடையின் ஆரைகள் மண்ணில் குழிபறித்துச் செல்வதால் எருதுகளின் செலவு

தடைபடுகின்றது. இருப்பினும் எருதுகள் வாளாயிராது தம் வலிமையைத் திரட்டி முன்னேறுகின்றன. இத்தகு, பகட்டை ஒத்தவன் சோழன் குராப்பள்ளித் துஞ்சிய பெருந்திருமாவளவன் என்கின்றார் புலவர் மருத்துவன் தாமோதரனார். வேந்தனுடைய அரசியலாகிய சகடை, மேல் நோக்கிச் செல்கையில், தன்னை அழுத்தி முன்னேறவிடாது நசுக்கினாலும், அஞ்சாது, சோராது, தன் குழு ஆற்றலுடன் முன்னேறும் தன்மையன் என்று இவ்வேந்தனின் இயல்பு சுட்டப்படுகின்றது என்ற கருத்தை,

"கழி உப்பு முகந்து கல்நாடு மடுக்கும்
ஆரைச் சாகாட்டு ஆழ்ச்சி போக்கும்
உரனுடை நோன் பகட்டு அன்ன எம் கோன்"[55]

மேற்கண்ட பாடல் அடிகளில் சங்ககால அரசர்கள் குடிகளுக்காக அரசாண்டமையைக் குறிக்கின்றன.

பாண்டியன் மக்களை முன்னிறுத்தி ஆட்சி புரிந்ததை,

"சிறுசொல் சொல்லிய சினம் கெழு வேந்தரை
அருஞ் சமம் சிதையத் தாக்கி, முரசமொடு
ஒருங்கு அகப்படேஎன் ஆயின் - பொருந்திய
என் நிழல் வாழ்நர் செல் நிழல் காணாது
'கொடியன் எம் இறை' எனக் கண்ணீர் பரப்பி
குடி பழி தூற்றும் கோலேன் ஆகுக"[56]

என்ற பாடலடிகளால் அறிய முடிகின்றது. "பண்டைத் தமிழ் வேந்தரின் ஆட்சிச் சிறப்பிற்கு இப்பாடல் தூண்டா விளக்கெனத் திகழ்வதாய்க் கூறுவார் சாமி சிதம்பரனார்."[57]

அக்கால வேந்தர் அறமல்லாதன நிகழின் அதனைப் பார்த்துக் கொண்டிராமல், முளையிலேயே கிள்ளியெறிந்து செங்கோலோச்சினர்.

"அல்லது கடிந்த அறம்புரி செங்கோல்
பல் வேல் திரையற் படர்குவிர் ஆயின்"[58]

என்று தொண்டைமான் இளந்திரையினைப் பாராட்டுகின்றார் கடியலூர் உருத்திரங்கண்ணனார். இத்தன்மையுடைய வேந்தர் நாட்டில் நல்லாட்சி நடத்தியமையால் தமக்கு நரை தோன்றவில்லை என்று கூறுகின்றார் பிசிராந்தையார்.

**நீதி வழங்கல்**

அரச நீதி, நாட்டு மக்களைத் துயரங்களினின்று காத்தலேயாகும். நீதி வழுவாமையே கொற்றம் எனக் கூறப்பட்டது. 'அறநெறி முதற்றே அரசின் கொற்றம்' என்னும் புறப்பாடலடி கொற்றச் சிறப்பிற்கு ஆதாரமாகின்ற அறத்தை வலியுறுத்தக் காணலாம். முறை செய்து காப்பாற்றும் மன்னவனாகிய தொண்டைமான் இளந்திரையன், கதிரவன் கதிர்களைச் சொரிவது போல நீதி தவறாது முறையிரந்தார்க்கும், குறையிரந்தார்க்கும் வேண்டியவற்றை, வேண்டினார்க்கு அருள் செய்த திறத்தைப் பெரும்பாணாற்றுப்படை,

"குணகடல் வரைப்பின் முந்நீர் நாப்பண்
பகல்செய் மண்டிலம் பாரித் தாங்கு,
முறைவேண்டு நர்க்கும், குறை வேண்டு நர்க்கும்
வேண்டுப வேண்டுப வேண்டினர்க்கு அருளி"[59]

என்ற வரிகளின் மூலம் விளக்கம் தருகின்றது.

வேந்தனின் வெண்கொற்றக் குடை வெயிலை மறைப்பதற்கன்று; வருந்தி நிற்கும் குடிகளின் வாட்டத்தைப் போக்கவே என்னும் கொள்கை நிலவிற்கு (புறம்.

35:19-21). பருவமழை பொய்த்தாலும், இயற்கையிகந்த செயல்கள் நிகழ்ந்து மக்கள் இன்னலுற்றாலும் அதற்குப் பொறுப்பானவன் மண்ணாள் வேந்தனேயாவான் (புறம். 35:27-29). இதனையுணர்ந்து அரசோச்சினர் சங்ககால வேந்தர். சோழன் கரிகாலன் தன்னிடம் நீதிகேட்டு வந்த இரு முதியவர்களுக்கு முதியவன் வேடத்தில் நீதி வழங்கியதை,

"இளையோர் வண்டல் அயரவும்; முதியோர்
அவை புகு பொழுதில் தம் பகை முரண் சொலவும்"[60]

என்னும் பாடலடிகளின் மூலம் அறியப்படுகின்றது. இதன் மூலம், தான் இளையவன் என்ற போதிலும் நடுவு நிலையான தீர்ப்பை வழங்க வேண்டும் என்னும் உணர்வு கரிகாலனிடம் மேலோங்கி நிற்பதை காணமுடிகின்றது.

பசுவிற்காக நீதி வழங்கிய சோழனைப் போலவே பறவைக்காக நீதி வழங்கிய பிசி என்னும் சோழனை இலக்கியங்கள் போற்றுகின்றன. தன்னிடம் அடைக்கலமாக வந்த புறாவிற்காகத் தன் ஊனையும், இறுதியில் தன்னையும் கொடுத்த அவனது அருஞ்செயலை,

"புள் உறு புன்கண் தீர்த்த, வெள் வேல்,
சினம் கெழு தானை, செம்பியன் மருக"[61]

என்ற பாடல் வரிகள் விளக்குகின்றது.

**படை - நிலவம் - பொருள் வழங்குதல்**

வேந்தர் வீரர்களுக்குப் படை வழங்குதலைத் தம் கடமையமாகக் கருதினர். இளம்பூரணர் படை வழங்குதலுக்குச் சான்றாகப் புறநானூற்றின் பதினான்காவது பாடலைக் காட்டுகின்றார். இப்பாடலில் யானையைப் பிடிக்கவும், குதிரையை

வேண்டுமளவிலே பிடிக்கவும், ஆயுதங்களையும், அம்புகளையும் அளித்த செய்தி அறிய முடிகின்றது. அடுத்து,

"நன்னடை நல்கல் வேந்தற்குக் கடனே"[62]

என்ற புறப்பாடலடி, நல்லொழுக்கத்தை நல்கல் வேந்தனின் கடமை எனச் சுட்டுகின்றது..

அக்காலத்தில் வெற்றி வீரர்க்கு நிலம் வழங்கியதைச் சங்க பாக்கள் (புறம். 287:9-10; 297:7-9; மலைபடு.க. 86;89) சுட்டுகின்றன. எனவே, வேந்தர் வீரர்க்கு நிலம் வழங்குதலைக் கடமையாகக் கொண்டிருந்தனர் என அறிந்து கொள்ளமுடிகின்றது.

மேலும், பொன் வழங்கியதற்கும் சான்று கிடைத்துள்ளது. வெற்றிபெற்ற அரசன் தோற்ற அரசனிடமிருந்து பெற்ற பொற்கலன்களை உருக்கி அவற்றை பொற்கட்டிகளாகச் செய்து, பின் அக்கட்டிகளை, வீரர் போரில் ஆற்றிய செயலுக்கேற்பப் பகிர்ந்து பரிசளித்த செய்தியினைப் பதிற்றுப்பத்தின் வழி (81:15-17) அறிய முடிகின்றது. இதிலிருந்து சங்ககால வேந்தர் தம் வீரர்க்கு நிலம், பொன், படை முதலியவற்றை வழங்குதலைக் கடமையாகக் கொண்டிருந்தமை புலனாகின்றது.

**ஆளுமைத்திறன்**

அரசன் ஆளுமைத் திறமுடைய தலைவனாகவும் தனக்குக் கீழ் உள்ளவர்களை அன்பால் தழுவிக் கொள்பவனாகவும் இருத்தல் வேண்டும். கடல் பிறக்கோட்டிய செங்குட்டுவன் போர் செய்த வீரர்களுக்கு வேறு உணவு, தனக்கு வேறு உணவு என்ற வேறுபாடின்றி நல் உணவு வழங்கினான் என்பதை,

"சோறு வேறு என்னா ஊன் துவை அடிசில்"[63]

என்பார் பாணர். இது அரவணைக்கும் பண்பாகும். மேலும் தகடூர் எறிந்த பெருஞ்சேரல் இரும்பொறை, அறிவுடையோர் எண்ணினாலும் அறிவற்றோர் எண்ணினாலும் பிறர்க்கு நீ உவமையாய் அமைவாய் அன்றி உனக்கு உவமையாய்ப் பிறர் இல்லை என்பதனை,

"உரவோர் எண்ணினும், மடவோர் எண்ணினும்
பிறர்க்கு நீ வாயின் அல்லது, நினக்குப்
பிறர் உவமம் ஆகா! ஒரு பெரு வேந்தே!"[64]

என்ற அடிகளின் மூலம் விளக்குவார். மேற்கண்ட கூற்றின் மூலம் ஆள்வோர்க்கு ஆளுமைத்திறன் மிக முக்கியமானதாகும் என்பதை அறிய இயலுகின்றது.

**வாய்மை**

சங்க இலக்கியத்தில் மன்னனுக்கு வாய்மை வலியுறுத்தப்பட்டதோடு, வாய்மையுற்றோர் பாராட்டப்பட்டுள்ளனர்.

"நிலம் பெயரினும், நின் சொல் பெயரல்"[65]

"தேற்றாய் பெரும பொய்யே"[66]

"நிலம் திறம் பெயரும் காலை ஆயினும்
கிளந்த சொல் நீ பொய்ப்பு அறியலையே"[67]

என்ற பாடல்கள் இதற்குச் சான்றுகளாய் நிற்கின்றன. மன்னன் வாய்மை தவறினால் புகழ் அவனை விட்டு நீங்கும் என்பார்.

"மாற்றம் மாறான்"[68]

என்ற புறநானூற்று அடியில் பாணர் மன்னனது வாய்மையைக் கூறுவார்.

பரிபாடலில் பாண்டியனது வாய்மை உள்ளவரை குற்றம் உண்டாகாது எனக் குறிக்கப்பட்டுள்ளது.

பதிற்றுப்பத்தில் வேந்தன் பகைவரது நாட்டிலும் பொய்கூறாதவன், கனவிலும் பொய்கூறாதவனாவான் என்பதைக் கீழ்க்கண்ட அடிகள் உணர்த்துகின்றதை,

"நண்ணார் தேஎத்தும் பொய்ப்பு அறியலனே
கனவினும்; ஒன்னார் தேய ஓங்கி நடந்து"[69]

என்னும் பாடல் நமக்கு உணர்த்துகின்றது.

**அருளுடைமை**

சங்க இலக்கியப் பாடல்களைப் பல்வேறு கொள்கைகள் கொண்ட புலவர் பெருமக்கள் பாடி உள்ளனர். சிலர் போரை ஏற்றியும், சிலர் போர் பேரழிவு என்று கூறியும் செல்கின்றனர். நாடாள்வோர்க்கு அருட்குணம் வேண்டும் என்பதனை,

"சிதைதல் உய்ந்தன்றோ, நின்வேல் செழிய!
.........................................................................
குவை இருங் கூந்தல் கொய்தல் கண்டே"[70]

என்ற வரிகளில் கல்லாடனார், நெடுஞ்செழியனிடம் போரினால் பெண்கள் அதிக அளவில் பாதிக்கப்படுகின்றனர். ஆதலால் போர் வேண்டாம் என்று கூறியதைப் பாண்டியன் ஏற்றுக் கொண்டதால் அவனை அருட்குணம் நிறைந்தவன் எனப் போற்றுகின்றார். மேலும்,

"வையம் காவலர் வழி மொழிந்து ஒழுக"[71]

என்ற வரிகளில் தெளிவுபடுத்துகின்றன.

தமிழும், கலையும் வளரவும் மன்னன் காரணமாக இருந்துள்ளான். தமிழ்ப் புலவர்கள், பாணர்கள், பாடினிகள், விறலிகள் ஆகியோர் மன்னரைச் சார்ந்து வாழ்ந்துள்ளனர். மன்னனும் புலவர்களை அன்புடன் அரவணைத்தான். "குமணன் தமிழ்ப்புலவருக்குத் தன் தலையைத் தரவும் முன்வந்தான். இதனை, 'மனித நேயப் பெருவீரம்"[72] என்பார் சாலினி இளந்திரையன்.

புலவர்கள் மன்னரைப் பரிசில் வேண்டினர். பழமரம் தேடும் பறவைகளாகப் பாணர் விளங்கினர். புலவர்களை மன்னன் ஆதரித்ததன் மூலம் அவர்களுக்குத் தமிழ் மொழியின் மீது இருந்த பற்று புலனாகின்றது.

**பொருளாதார மேம்பாட்டுச் சிந்தனை**

சங்ககாலம் முதல் இக்காலம் வரையிலும் பொருளாதார முன்னேற்றத்தில் முக்கியப் பங்கு வகிப்பது அரசாட்சித் திறனே என்றால் மிகையன்று. ஏனென்றால் நாட்டில் உற்பத்தியினை அதிகரித்தல், அதை சேமித்துவைத்தல், ஏற்றுமதி, இறக்குமதி போன்றவற்றில் சிறந்த முறையில் கையாளுதல் போன்ற எண்ணற்ற அறிவுசார்ந்த திறன் ஆளும் அரசனுக்குத் தேவையாகும். அத்தகைய திறனே ஒரு நாட்டின் பொருளாதாரத்தினை மேம்படுத்தும், பிறநாட்டைக் காட்டிலும் தன் நாடு சிறந்த நாடு, முன்னேற்றமடைந்த நாடு என்று பெருமையோடு கூறிக்கொள்ள முடியும்.

இயற்கையாலும், பகைவர்களாலும் நாட்டில் வறட்சிநிலை ஏற்படும் போது சிறந்த அரசாளுமைக் கொண்டவனால் மட்டுமே தன் குடிகளைக் காக்க இயலும். ஏனென்றால் சங்க காலத்திலேயே ஒரு நாட்டின் மீது மற்றொரு நாடு போர்தொடுத்தல், பொருளாதாரத்தைச் சுரண்டல் போன்ற செயல்கள் நடந்துள்ளன. இவை அனைத்துமே எதற்காக என்ற கேள்விக்கு 'பொருளாதாரம்' என்ற சொல்லே விடையாக வந்து கண்முன்னே நிற்கின்றது.

ஒரு நாடு விவசாயம், வணிகம், மற்றும் பிறதொழில்கள் தங்கு தடையின்றி நடத்தலும், அதனால் மக்கள் செல்வச் செழிப்போடு வாழ்தலுமே பிற நாடு போர் தொடுத்தலுக்குக் காரணமாகின்றது.

இத்தகைய முக்கியத்துவம் வாய்ந்த பொருளாதாரத்தின் மேம்பாட்டிற்காக அரசர்கள் பல்வேறு உத்திகளைக் கையாண்டுள்ளனர். குறிப்பாக, வேளாண்மைக்கு முக்கியத்துவம் அளித்தல், வரிவிதிப்பு, ஏற்றுமதி இறக்குமதிக்கு முக்கியத்துவம் அளித்தல், புலவர்கள் கற்றோரின் அறிவுரைக் கேட்டல், சேமித்துவைத்த பொருளை வறட்சிக் காலத்தில் மக்களுக்கு அளித்தல் போன்ற உத்திகளைக் கையாண்டுள்ளனர்.

**அரசன் நிதி பெற்ற முறை**

அரசு இயங்கப் பொருள் தேவை. அரசிற்கு வருவாய் பல வழிகளில் கிடைத்தது. பொருளின் இன்றியமையாமையை உணர்ந்த அரசர்கள் அதனைத் தம் குடிகளிடமிருந்து பெற்றனர். நிலவரி, சுங்கவரி முதலான வரிகளின் வாயிலாகப் பொருள் வசூலிக்கப்பட்டது. சங்கப் பாக்கள் அரசன் கொண்ட வரி குறித்துச் சான்று பகர்கின்றன. அவற்றை நோக்கும் போது அக்காலத்தில் வருவாய்க்கென்று தனித் துறையமைக்கப்பட்டு அது சிறப்பாகச் செயல்பட்டு வந்ததெனலாம். நிலத்திலிருந்து வரும் வரியே முதல் வருவாயாகக் கருதப்பட்டது. வருவாய்க்குரியது வரி என்று அழைக்கப்பெறும்.

"வரவுக்குரிய வழியாக 'நில வரி', 'சொத்து வரி', 'அலுவல் வரி', 'வணிக வரி', 'தொழில் வரி', 'படைக்குரிய வருமானம்', 'சமுதாய குழு வரிகள்', 'நீதிமன்றங்களிலிருந்து தண்டப்பணம், காட்டு வருமானம், சுரங்க வருமானம், உப்பள வருமானம், நாதியற்ற சொத்து"[73] என்பதைக் கூறுகின்றார் ராசமாணிக்கனார்.

"மன்னன் வசூலித்த வரியினை, 1. மக்கள் தரும் வரி, 2. திறை, 3. சுங்கவரி, 4. புரவு, 5. கொண்டி"[74] என்று இனம் பிரித்துக் காட்டுகின்றார் தமிழறிஞர் அ. ஆறுமுகம்.

**நில வருவாய் அல்லது வரி**

நில வருவாயினை 'இறை' அல்லது 'கறை' எனச் சிலப்பதிகாரம் (23:52) குறிப்பிடுகின்றது. சுங்கத்தின் மூலம் பெற்றவரி 'உல்கு' அல்லது சுங்கம் எனப்பட்டது. புறுநானூறு அரசன் பெற்ற வரியைப் 'படுவது' எனக் குறிக்கின்றது (17:6). நிலத்திலிருந்து பெறப்படும் வருவாய்க்கு எவ்வளவு வரி வதிக்கப்பட்டது என்பதை அறிய இயலவில்லை. அரசன் குடிமக்களின் நிலையைப் புரிந்து வரிகொள்ளுதல் வேண்டுமென அக்காலப் புலவர்கள் கருத்துரைத்துள்ளனர். வரி மிகுதியாகக் கொள்வதைத் தவறாகவும் கருதினர். முறைமைக்கு மேலாக வரிபெறும் வேந்தனை,

> "குடி புரவு இரக்கும் கூர் இல் ஆண்மைச்
> சிறியோன் பெறின், அது சிறந்தன்று மன்னே"[75]

என்று சோழன் நலங்கிள்ளி என்னும் வேந்தன் இகழ்கின்றான்.

வரிச்சுமையால் வருத்தமுற்ற சிலர் அரசனுக்கு அறிவுரை கூறத் தலைப்பட்டனர். பிசிராந்தையார் அறிவுடை நம்பி என்னும் அரசனிடம், நெல்லை அறுத்து அதனை முறைப்பட யானைக்கு இட்டால் வீண் ஆகாது; மாறாக யானையை நெல் வயலினுள் இறக்கிவிடின் அது தானும் உண்ணாமல், பயிரையும் வீணாக்கிவிடும். அதுபோல் அரசன் குடிமக்களிடம் வரிபெறும் போது நெறியறிந்து கொள்ள வேண்டும். அப்போதுதான் நாடு நன்மைபெறும் (புற.184) என அறிவுறுத்துகின்றார். கலித்தொகையில் (26:20) அரசன் வரியை வருத்திக்

கோடலால் அந்நாட்டு மக்கள் நாட்டை விட்டு விலகியிருந்ததை அறிய முடிகின்றது.

"இந்த அறக்கட்டுப்பாடுகள் அரசனின் அதிகாரத்துக்கு விதித்த கட்டுப்பாடுகள் அல்ல. அதிகாரத்தை விரிவாக்கி முறைப்படுத்துவன இவை. ஒழுங்குபடுத்துவன. சிதறிவிடாமல் நெறி படுத்துவன. ஒழுங்குபடுத்துகிற போது வீணாகாமல் ஒரு மரபாக ஆகிறது. அதிகாரத்திற்குக் கீழ்படிதல் என்பது இப்படி ஒருங்கமைத்தலின் காரணமாக இயல்பானதாக, சம்பிரதாயமாக, அனுசரிக்க வேண்டிய ஒரு கடமையாக ஆகிறது. அதனால் அரச அதிகாரத்துக்கு விதித்த அறக்கட்டுப்பாடுகள் அரச வன்முறைக்குச் சட்டத் தகுதியை ஏற்படுத்துகின்றன"[76] என்பார் ராஜ்கௌதமன்.

"புறநானூற்றில் 'வேல்' (394:21), 'மா' (184:2) என்ற நில அளவைகள் கூறப்பட்டுள்ளன. ஒரு வேலி 6.74 ஏக்கரும், ஒரு மா 1/200 வேலியும் கொண்டன என்று தமிழ்ப் பேரகராதி குறிப்பிடுகின்றது."[77] "நூறு குழி கொண்டது ஒரு மா என உ.வே. சாமிநாதையர் குறிப்பிடுகின்றார்."[78] இந்த நில அளவைகள் இருந்த போதிலும் அரசனுக்கு வரியாகக் கொடுக்கப்பட்ட விகிதம் எவ்வளவு என்பது பற்றியும் எந்தெந்தப் பொருள் வரியாகக் கொடுக்கப்பட்டது என்பது பற்றியும் சங்க இலக்கியங்களில் குறிப்புகள் காணப்படவில்லை. நிலவரி ஆறில் ஒரு பங்காக வசூலிக்கப்பட்டது எனப் பிற்கால இலக்கண நூலான புறப்பொருள் வெண்பாமாலை (179)-ஆம் பாடலில் குறிப்பிடுகின்றது.

பரிமேலழகர், 'ஒருவன் தன் வருவாயை ஆறாகப் பிரித்துக் கொண்டு, அவற்றில் ஐந்து பகுதியைப் பெற்றோர், தெய்வம், விருந்தினர், சுற்றத்தினர் தான் என்று ஒதுக்கிக் கொண்டு மீதமுள்ள ஒரு பகுதியை அரசனுக்கு வரியாகச் செலுத்துவான் என்று உரை எழுதியுள்ளார். வள்ளுவர் இதனை,

"தென் புலத்தார் தெய்வம் விருந்தோக்கல் தானென்றாங்கு
ஐம்புலத்தாறு ஓம்பல் தலை"[79]

என்ற குறளில் சுட்டப்படுகின்றது. அரசன் பெறும் வரி மக்களின் வளத்திற்கேற்ப அமைந்திருந்தது. கொடுக்கும் ஆற்றலுக்கேற்பவே வரி வாங்க வேண்டும் என்ற கருத்தினை,

"........................ வளங்கெடப்
பொன்னும் கொள்ளார் மன்னர்"[80]

என்று இப்பாடலில் கூறப்படுவதிலிருந்து நமக்குப் புலனாகின்றது. மேலும், அரசன் மக்களிடமிருந்து பெரும் வரியினைக் கொண்டு நடுவுநிலைமையுடன் செயல்படுவர் என்பதை,

"படுவதுண்டு பகல் ஆற்றி
இனிது உருண்ட சுடர் நேமி
முழுது ஆண்டோர் வழி காவல!"[81]

என்ற பாடலடிகளின் மூலம் மக்களிடமிருந்து வசூலிக்கப்பட்ட வரிகள் பொதுப்பணிக்கும், அறப்பணிக்கும், ஆலயப்பணிக்கும், பயன்படுத்தப்பட்டன. சாலைகள் அமைப்பது, குளங்கள், ஏரிகள், நீர்நிலைகள் முதலியனவைகளைப் பராமரிப்பது போன்ற பொதுப்பணிகளுக்காக அவை செலவிடப்பட்டுள்ளன என்று தெரிகின்றது.

**பிற வரிகள் (சுங்க  வரி, வணிக வரி)**

நிலவரி அல்லது பிற வரிகளையும் அரசர் வசூலித்தனர். அவற்றுள் சுங்கவரி, வணிகவரி என்பனவும் அடங்கும்.

ஒரு நாட்டிலிருந்து பிற நாட்டுக்கு ஏற்றுமதியாகும் பொருள் மீதும் இறக்குமதியாகும் பொருள் மீதும் விதிக்கப்படும் வரி சுங்க வரியாகும். இது 'உல்கு' எனவும் பெயர் பெறும். இவ்வாறு சுங்கம் வாங்கிய முறை பற்றிப் பட்டினப்பாலை கூறுகின்றது. கடற்கரைத் துறைமுகங்களும் நாட்டு எல்லைகளும் சுங்கம் வசூலிக்கக்கூடிய இடங்களாக இருக்கும். சுங்கங்கொள்வோர் நாடோறும் சோம்பல் இல்லாமல் சுங்கத்தைப் பிறர் பெறுவர். அரசனது பொருளைப் பிறர் கொள்ளாமல் காப்பாற்றுவர் என்ற கருத்தை,

"மாஅ காவிரி மணம் கூட்டும்
தூஉ எக்கர்த் துயில் மடிந்து
வால் இணர் மடல் தாழை
வேல் ஆழி வியன் தெருவில்,
நல் இறைவன் பொருள் காக்கும்
தொல் இசைத் தொழில் மாக்கள்,
காய் சினத்த கதிர்ச் செல்வன்
தேர் பூண்ட மாஅ போல
வைகல் தொறும் அசைவு இன்றி
உல்கு செயக் குறை படாது"[82]

பட்டினப்பாலை நூலில் வரி பற்றிய செய்தியினை விளக்குகின்றது.

மிளகு மூட்டைகளைச் சுமந்து கழுதைகள் செல்லும் வழியிலும் சுங்கம் வாங்குபவர். இவ் உல்குடைப் பெருவழியில் வில்வீரர்கள் காவல் காப்பர் என்ற கருத்தை,

"அணர்ச்செவிக் கழுதைச் சாத்தொடு, வழங்கும்
உல்குடைப் பெருவழிக் கவலை காக்கும்"[83]

என்ற பாடல் வரிகளால் அறியமுடிகின்றது. திருவள்ளுவர்,

"உறுபொருளும் உல்கு பொருளுந்தன் ஒன்னார்த்
தெறுபொருளும் வேந்தன் பொருள்"[84]

என்ற குறட்பாவிற்கு ஏற்ப அரசனின் பொருள்களாக மேற்குறிப்பிட்ட மூன்றையும் குறிப்பிடுகிறார். "வள்ளுவர் கூறும் உறுபொருள், உல்குபொருள், தெறுபொருள் மூன்றுக்கும் 1. உடையாரின்மையின் தானே வந்துற்ற பொருளும், 2. சுங்கமாகிய பொருளும், 3. தன்பகைவரை திறையாகக் கொள்ளும் பொருளும் என்று வரிமேலழகர் விளக்கம் தருகின்றார்." [85]

தொல்காப்பியர் குறிப்பிடும் 'ஐவகை மரபின் அரசர் பக்கமும்' என்பதற்கு, உரை எழுதிய நச்சினார்க்கினியர் அரசர் கொள்ளும் பொருளைச் சுட்டுகின்றார். அவை 'களவு செய்தோர் கையிற் பொருள் கோடலும் ஆறிலொன்று கோடலுஞ், சுங்கங்கோடலும், அந்தணர்க்கு இறையிலியான் கொள்வலெனக் கூறிக் கொண்டு அது கோடலும், மறம் பொருளாகப் பகைவர் நாடு கோடலும், தமரும் அந்தணரும் இல்வழிப் பிறன்றாயங் கோடலும், பொருளில் வழி வாணிகஞ் செய்து கோடலும் அறத்திற்றிரிந்தாரைத் தண்டத்திற்குமாறு பொருள் கோடலும் என்று கூறுகின்றார். ஆயினும், இவையனைத்தும் சங்க இலக்கிய அரசரால் கொள்ளப்பட்டமைக்குச் சான்றுகள் இல்லை. 'உறுபொருள்' என்பது புதையல் என்றும் குறிக்கப்படுகின்றது. சிலப்பதிகாரம் உறுபொருளை இடுபொருள், படுபொருள் (23) எனக் குறிப்பிடுகிறது. இவ்வாறு பிறர்க்கு உரியதல்லாத பொருள்களை அரசர் தமது வருவாயாகக் கருதினர்.

சுங்கவரி ஒரு வருவாயாக அமைந்தது. இது உல்கு என்றும் அழைக்கப்பட்டது. ஓர் இடத்திலிருந்து மற்றோர் இடத்திற்குப் பொருட்களைக் கொண்டு செல்லவும், வெளிநாட்டு, உள்நாட்டுப் பொருட்களை எடுத்து வரவும்,

கொண்டு செல்லவும் இவ்வரி விதிக்கப்பட்டதாகத் தெரிகின்றது. மிளகு மூட்டைகளை ஏற்றி செல்ல உல்கு தண்டப்பட்டதை,

"அணர்ச்செவிக் கழுதைச் சாத்தொடு, வழங்கும்
உல்குடைப் பெருவழிக் கவலை காக்கும்"[86]

என்னும் பாடலடிகள் குறிப்பிடுகின்றன. மடல் கொண்ட தாழைகள் நிறைந்த கடற்கரையின் கண் அரசனால் அமர்த்தப்பட்ட காவலர், ஞாயிற்றின் தேர் பூண்ட குதிரைகள் போல் சிறிதும் சோர்வின்றி நாடோறும் சுங்கம் கொண்டனர். குடிமக்களுக்குப் பாதுகாப்பளிப்பது அரசனின் கடமையாகும். பாதுகாப்பு என்றால் குடிமக்களின் உயிருக்கும், தனி உடைமைக்கும், சமூக அமைப்பு, ஒழுங்கு, பொருளாதாரம், பண்பாடு, அற அமைப்பு ஆகிய அனைத்திற்கும் பாதுகாப்பு என்று பொருள். இந்தப் பாதுகாப்பைப் பெற்ற குடிகள் அரசனுக்கு விளைச்சலில் பாகத்தையும், வணிகத்தில் சுங்கத்தையும் வழங்குவது கடமையாகின்றது.

"பாதுகாப்பது அரசு கடமை. பாகம் பெறுவது அரச உரிமை. இந்த உரிமை கடமை என்பவை இனக்குழு வாழ்வில் தோன்றியவை. இறைச்சி, பெண், பரிசு முதலானவற்றைக் கடமை - உரிமை என்ற தளத்தில் குழுக்கள் பரிவர்த்தனை செய்து கொண்டன. இந்தப் பரிவர்த்தனை, பிற்கால வியாபாரத்திற்கும், அரசாட்சிக்கும் அடிப்படையாக இருந்தது. இனக்குழுக்களின் எளிய கடமை - உரிமை என்கிற பரிவர்த்தனை, பல்வேறு வேலைப்பிரிவினைகளால் வண்ண வண்ணமாகித் திடப்பட்டு போன பெரும் மக்கள் தொகை கொண்ட சமுதாயத்தில் இந்த கடமை - உரிமை பரிவர்த்தனை வர்க்கங்களுக்கு இடையிலும், நபர்களுக்கு இடையிலும், ஆண் பெண்ணுக்கு இடையிலும் மிக விரிந்த அடுக்குகளைப் பெற்றன. செல்வமும், அதிகாரமும் உருவாவது எல்லோரையும் கட்டுப்படுத்துகிற, முறைப்படுத்தப்பட்ட பரிவர்த்தனைகளின் மூலம் என்பது தெரிகின்றது என்பார் ராஜ்கௌதமன்."[87]

"நிலவரிக்கு அடுத்தபடியாக மொத்த வருவாய் ஈந்தது சுங்கங்களாகவே இருக்கும். அக்காலத்தில் தமிழர் யவனரான ரோமானியர், எகிப்தியர் என்பாரோடு மேற்கிலும், கடாரம், ஜாவா முதலியவற்றுடன் கிழக்கிலும் பெருத்த வாணிபம் நடத்தி வந்தனர். இறக்குமதி, ஏற்றுமதிப் பொருள்கள் மிகப் பெருவாரியாயிருந்தமையால், மிகச்சிறு அளவில் சுங்கவரி விதிக்கப்பட்டிருந்தாலும் இவ்வினத்தில் மொத்த வருவாய் அதிகமாகவே இருந்திருக்கும். புகாரில் சுங்கவரி வசூலிக்கும் அதிகாரிகள் பலர் இருந்தனர் என்றும், அவர்கள் தங்கள் அலுவல்களைக் களைப்பின்றியும், தீவிரமாகவும் கவனித்தனர்"[88] என்றும் தெளிவாகக் கூறப்பட்டுள்ளது.

**திறை**

தோற்ற அரசரும், குறுநில மன்னரும் வெற்றி வேந்தருக்குத் திறை செலுத்தினர். இப்பொருட்கள் அரசுக்கருவூலத்தில் சேர்க்கப்பட்டன. செங்குட்டுவனுக்குப் பிறநாட்டு வேந்தர் நாட்காலையில் முரசறைந்து திறை செலுத்தியதாகச் சிலப்பதிகாரம் (26:52-53) கூறுகின்றது. இவ்வாறு வேந்தர் திறை கொண்டதற்குச்சங்க இலக்கியத்தில் சான்றுகள் காணப்படுகின்றது.

போரில் ஈடுபட்டு அதனால் இழப்பு ஏற்படுவதை விரும்பாத மன்னர்கள், தங்களிடமுள்ள பொன்னும், மணியும் கொடுத்துத் தம் பகையைக் குறைத்துக் கொள்வர். இவ்வாறு பெறப்படுவது திறை என்று கூறப்பட்டது.

பெருவேந்தனிடம் புதிய மன்னர்கள் அருங்கலங்களைத் தந்து தம் பகையைத் தணித்துக் கொள்வர் என்னும் செய்தியினை,

"விருந்தின் மன்னர் அருங்கலம் தெறுப்ப
வேந்தனும் வெம்பகை தணிந்தனன்"[89]

என்ற அடிகளின் மூலம் அறிய முடிகின்றது.

அரசர் சில சமயங்களில் வரியிலிருந்து விலக்கு அளித்தனர். 'காவிதி'ப் பட்டம் பெற்றோர்க்கு 'வரியிலார்' என்று பொருள் உரைப்பாற் அடியார்க்கு நல்லார். வெள்ளைக்குடி நாகனார், சோழன் குளமுற்றத்துத் துஞ்சிய கிள்ளிவளவனை வேண்டி வரி நீக்கம் பெற்றார் என்று தெரிகின்றது. 'அவனை (சோழன் குளமுற்றத்துத் துஞ்சிய கிள்ளிவளவனை) வெள்ளைக்குடி நாகனார் பாடிப் பழஞ்செய்க் கடன் வீடு கொண்டது' (புறம். 35) என்னும் புறப்பாடலின் குறிப்பிலிருந்து அறியமுடியும். இதற்கு வெள்ளைக்குடி நாகனார் வளவனிடம் முறையிட்டு அவரது பழஞ்செய்க் கடனிலிருந்து அதாவது வரியிலிருந்து விடுபெற்றது என்று பொருள் கொள்ளலாம். எனவே சங்ககால அரசர் சில நேரங்களில் சிலருக்கு வரியிலிருந்து விலக்கு அளித்தனர் எனலாம்.

இங்கு, அரச காவலும் குடிமக்கள் செல்வமும் பரிவர்த்தனையாவது ஒருவித அறச்செயல் போலக் கூறப்படுகின்றது. இந்தப் பரிவர்த்தனை சமமான தளத்தில் நடக்கவில்லை என்பதற்கு ராஜ்கௌதமன், "இந்த அரச குடிமக்களுக்கு இடையிலான பரிவர்த்தனை அரச செல்வ அதிகார வளர்ச்சிக்குக் காரணமாக அமைகிறது. பசித்த போதெல்லாம் வேட்டையாடுவது, மொத்த வாழ்க்கையைப் பசிகளைத் தீர்த்துக்கொள்வதற்காக எளிதில் அகப்படாத உணவைத் தேடிக் கொண்டிருப்பது என்கிற கச்சாத்தனம் அரச காவல் குடிமக்கள் செல்வம் ஆகியவற்றின் பரிவர்த்தனைகளால் மேவப்பட்டது (Over Coming)"[90] என்று கூறும் கருத்தின் வழி அறியபெறலாம்.

**புரவு**

ஔவை சு. துரைசாமிப்பிள்ளை "புரவு, இறையிலி முற்றூட்டு என்பன பண்டை வேந்தர் இரந்தோர்க்கு அளிக்கும் நிலக் கொடை வகை. புரவாவது விளைநிலம்; இதற்கு அரசிறையுண்டேயன்றிப் புரவு வரி கிடையாது.

இறையிலியாவது அரசிறையன்றியேனைப் புரவுவரி முதலிய உளப்பட வழங்கும் நிலம். முற்றூட்டாவது, அரசிறை, புரவுவரி, படிகாவல் முதலிய வரியன்றி முழுவதும் உரிமையாக வழங்கும் நிலம்"[91] என உரை கூறியுள்ளார்.

இம்மூன்றில் புரவு என்பது மட்டுமே சங்க இலக்கியத்தில் ஆட்சி பெற்றுள்ளது. 'புரவிற்கு ஆற்றாச் சீறூர்த்' (புறம். 330) என்பதில் வரும் புரவிற்கு 'இறையிலி நிலம்' எனப் பழைய உரை பொருள் கூறியுள்ளது. 'குடி புரவு இரக்கும் கூரில் ஆண்மை' (புறம். 75:4) என்னும் தொடரில் வரும் 'புரவு' என்பதற்கும் வரி (அரசிறை) என்பதைப் பொருளாய்க் கூறப்பட்டுள்ளது. பிசிராந்தையாரும்,

"அறிவுடை வேந்தன் நெறி அறிந்து கொளினே,
கோடி யாத்து, நாடு பெரிது நந்தும்"[92]

என அரசன் வரி திரட்ட வேண்டிய நெறியை அறிவுறுத்தியுள்ளார். இங்கும், 'அன்பு கெடக் கொள்ளும் பொருள் தொகுதியை விரும்பினால் யானை புகுந்த வயல் போலத் தானும் உண்ணப் பெறான்' என வயலின் மேல்வைத்தே வருவாய் திரட்டல் கூறப்பட்டுள்ளது.

புறநானூற்றின் 35-ஆம் பாடலின் அடிக்குறிப்பில் இடம்பெற்றுள்ள 'பழஞ்செய் கடன் வீடு கொண்டது' எனும் தொடர் நிலவரித் தள்ளுபடியைக் குறிப்பிடுகின்றது. இவை எல்லாம் மிகவும் சாதாரணமான மிகுதியான ஒரு வரி இனம். 'நிலவரி' யேயாம் எனும் கருத்தை நிறுவும் சான்றுகளாக உள்ளன. இவ்வாறு, நிலம் அரசுக்கான வருவாய் ஆதாரமாய் முக்கிய இடத்தைப் பெற்றிருந்தது எனலாம்.

**கொண்டி**

கடற் போரில் வென்ற அரசன் தோற்றவனிடமிருந்து பெற்ற பொருள் 'கொண்டி' எனப் பெற்றது. 'கொண்டி வேண்டுவனாயின்' என்ற கருத்தை,

"நீர் மிகின், சிறையும் இல்லை; தீ மிகின்,
மன் உயிர் நிழற்றும் நிழலும் இல்லை;
வளி மிகின், வலியும் இல்லை; ஒளி மிக்கு
அவற்று ஓர் அன்ன சினப் போர் வழுதி,
'தண் தமிழ் பொது' எனப் பொறா அன், போர் எதிர்ந்து,
கொண்டி வேண்டுவான் ஆயின், 'கொள்க' எனக்
கொடுத்த மன்னர் நடுக்கு அற்றனரே;
அளியரோ அளியர், அவன் அளி இழந்தோரே
நுண் பல சிதலை அரிது முயன்று எடுத்த
செம்புற்று ஈயல் போல,
ஒரு பகல் வாழ்க்கைக்கு உலமருவோரே!"[93]

என்னும் புறநானூற்றுத் தொடரில் வருவாய் பற்றித் தெரிவிக்கின்றது.

பல்வேறு வகையிலும் மக்களிடமிருந்து பெற்ற பொருள்களைத் தங்களது நலனுக்காகவும், குடிகள் நலனுக்காகவும் செலவழித்திருப்பர். இவ்வாறு அவர்கள் வருவாய் பயன்பட்ட வழி அடுத்து விளக்கப் பெறுகின்றது.

**நிதியை ஆட்சிக்காகச் செலவிடுதல்**

மக்களிடமிருந்து பெற்ற வரிப்பொருளை அவர்களின் நலன்களுக்காகவே அரசர் செலவிட்டனர். கரிகால் வளவன் குளம் தொட்டு வளம் பெருக்கி, காடு கொன்று நாடாக்கிய செய்தி பட்டினப்பாலையில்,

"காடு கொன்று நாடு ஆக்கி,

குளம் தொட்டு வளம் பெருக்கி"[94]

என்ற வரிகள் தெரிவிக்கின்றது. கரிகாலன் காவிரியின் குறுக்கே கல்லணைக் கட்டி நீர்ப்பாசன வசதியை மேம்படுத்தினான். இச்செய்தியினைச் சங்க இலக்கியம் குறிப்பிடவில்லை என்றாலும் கலிங்கத்துப்பரணி (197)-ஆம் பாடலில் குறிப்பிடுகின்றது.

உயிர் வாழ்விற்கு வேண்டிய உணவைக் கொடுப்பவை நிலமும் நீருமாகும். இவ்விரண்டையும் ஒன்றாக இணைத்திருக்கும்படிச் செய்வதே மன்னர்களின் கடமை, நிலத்திற்கு வேண்டிய நீர் வசதிகளைச் செய்து தர வேண்டியது அரசின் கடமைகளுள் ஒன்றாகப் பண்டைத் தமிழகம் எண்ணியது. ஒரு அரசன் சிறந்த நல்லிசை நிறுத்தல் வேண்டின்,

"நீர் இன்று அமையா யாக்கைக்கு எல்லாம்

உண்டி கொடுத்தோர் உயிர் கொடுத்தோரே;

உண்டி முதற்றே உணவின் பிண்டம்;

உணவு எனப்படுவது நிலத்தொடு நீரே;

நீரும் நிலனும் புணரியோர் ஈண்டு

உடம்பும் உயிரும் படைத்திசினோரே"[95]

என்னும் பாடலின் ஏற்ப தகுதியைப் பெற்றிருக்க வேண்டும் என்பார் குடபுலவியனார். உணவுப் பொருள் பெருக நீர்வளம் இன்றியமையாததாகிறது. சோழன் நலங்கிள்ளி, காவிரியின் நீர் பல கால்வாய்களாக ஓடி நிலத்தில் பாய்ந்து பயிர் செழிக்க வழி வகுத்தான்.

"புனிறு தீர் குழவிக்கு இலிற்று முலை போலச்

சுரந்த காவிரி மரம் கொல் மலி நீர்

மன்பதை புரக்கும் நல் நாட்டுப் பொருநன்"[96]

என்னும் புறப்பாடலில் கோவூர்கிழார் காவிரியின் வளம் பெற்ற காவலனை வாழ்த்துகின்றார். இவற்றிலிருந்து சங்ககால அரசர் நீர்பாய்ச்சல் வசதிக்காகத் தாம் பெற்ற வருவாயைச் செலவழித்தனர் என்பது புலனாகின்றது.

பாணர், விறலியர், பொருநர் முதலான கலைஞர்க்குப் பரிசில்கள் வழங்கினர் அக்கால அரசர். மக்களிடமிருந்து பெறப்பட்ட வருவாயை இதற்கெனவும் பயன்படுத்தினர். அவர்கள் வரவு செலவுகளை ஒழுங்குபடுத்தும் அமைப்பினைத் தமது அரச உறுப்புகளில் ஒன்றாகக் கொண்டிருந்தனர் என்றும் அது சிறப்பாகச் செயல்பட்டது என்றும் கூறலாம்.

**தொழில்கள்**

மனிதன் தோன்றிய காலத்திலிருந்து அவன் தன்னால் இயன்ற, தன் திறமைக்கு ஏற்ற வகையில் பல ஆக்கச் செயல்களைப் புரிகின்றான். அவ்வாக்கச் செயல்கள் பின்னாளில் தொழிலாக வளர்கின்றது. அவற்றில் முதன்மைத் தொழிலாக அச்சாணியாக விளங்குவது 'உழவுத் தொழில்' என்பதில் அதில் சிறிதும் ஐயமில்லை. இதனை வள்ளுவனாரும்,

"உழுவார் உலகத்தார்க் காணிய தாற்றா
தெழுவாரை எல்லாம் பொறுத்து"[97]

பிறத் தொழிலுக்கும் சென்றோரையும் பொறுத்து காத்து நிற்றலின் உலகத்தார்க்கு அச்சாணியாக உழவு திகழ்கின்றதை எடுத்துக்காட்டுகிறார்.

ஒரு பெண் யானை படுத்திருக்கும் சிறு இடத்தில் ஏழு ஆண் யானைகளைப் பாதுகாக்கும் உணவு வளமுடைய நாட்டை உடையவனே என்று கூறியதை,

"ஒரு பிடி படியும் சீறிடம்

ஏழு களிறு புரக்கும் நாடு கிழவோயே"[98]

கிள்ளி வளவனை பாடுதலில் உழுவு நிலத்தின் பரந்த பரப்பை காணமுடிகின்றது. ஆனால் இன்று வளர்ந்து வரும் மக்கள் தொகையினால் சாகுபடி நிலத்தின் அளவை பெருக்க இயலாமை, ஆரோக்கிய உணவு என்பது குறைந்து வருகிறது என்பதை கண்கூடக் காணமுடிகின்றது.

எனவே, இருக்கும் குறைந்த நிலத்தினையாவது காலத்தே பயிர் செய்வதனை தலைவன் வினை மேற்கொண்டுச் செல்கிறான். குறித்த பருவத்தில் வர இயலவில்லை. எனவே தலைவி வருந்துவதை மழைக்கால ஈரப்பதத்தில் நிலத்தினை ஆழ உழுவதினால் நிறைந்த விளைவைப் பெறலாம் என்பதை,

"ஈரம் பட்ட செவ்விப் பைம் புனத்து

ஓர் ஏர் உழவன் போலப்

பெருவிதுப்பு உற்றன்றால் நோகோ யானே"[99]

என்னும் குறுந்தொகைப் பாடல் ஆழ உழுவதை எடுத்துக் காட்டுவதோடு, ஏர் கொண்டு நிலத்தை உழுவதற்குள் நிலத்தின் ஈரப்பதம் உலர்ந்துவிடும். எனவே நில அளவுக்கு ஏற்ற ஏர்களைக் கொண்டு விரைவாக ஆழ உழவேண்டிய விதத்தினை உணர்த்துகின்றது.

உழவுத் தொழிலுக்கு என கால்நடைகளைப் பல விதங்களில் பயன்படுத்தியுள்ளனர். எருமை மாடுகளைச் செல்வமாகவே கருதியதை

"நெடுங்கடை நின்று பகடுபல வாழ்த்தி"[100]

"புலரி விடியற் பகடுபல வாழ்த்தி"[101]

புறப்பாடல்கள் வாயிலாக உழவுக்கு பயன்படும் எருமை மாடுகளை வாழ்த்தியதைக் கண்டுணர முடிகின்றது. உழுத்தொழிலையும் போர்த் தொழிலையும் ஒன்றாக உருவகித்த நிலையை,

"விளைந்த செழுங்குரல் அரிந்துகால் குவித்து,
படுபிணப் பல் போர்பு அழிய வாங்கி,
எருதுகளிது ஆக வாள் மடல் ஓச்சி,
அதரி திரித்த ஆள் உகு கடாவின்,
அகன் கண் தடாரி தெளிர்ப்ப ஒற்றி,
வெந்திறல் வன்களம் பொலிக என்று ஏத்தி"[102]

செழுமையான கதிர்களை அறுத்து எருமை கடாவினைக் கொண்டு மிதிப்பித்து கிடந்த நெற்போர் போன்று வீரர்களை அழித்த போர்க்களம் விளக்கமுறுக என்பதால் உழவுத் தொழிலில் அறுவடை நிகழ்வினையும் களம் அடித்த நிகழ்வினையும் உணர்த்தி நின்றதை காணமுடிகின்றது.

"கால்நடைகளுக்கு தேவையான புல் வளர்ப்பதும் தானியங்கள் பயிரிடுவதும் பெண்களின் பணியாகவே இருந்தது. மாடுகளால் இழுக்கப்படும் ஏர் கண்டுபிடிக்கப்படும் வரை ஆரம்ப கால வேளாண்மையால் பெண்கள் நிலைமை உயர்ந்து காணப்பட்டது"[103] ஆண்கள் புரியும் வேட்டை, கால்நடை தொழில் ஆகியவற்றை விட பெண்கள் செய்த வேளாண்மைத் தொழிலால் சமூக பொருளாதார நிலை உயர்ந்து காணப்பட்டது. இதனால் கால்நடைகளை கவர்வதற்காக போர்கள் நடைப்பெற்றன எனலாம்.

தலைவன் போரில் ஆநிரைகளைக் கவர்ந்து வந்ததொடு அவற்றை பிறருக்கு விரைவாக பகர்ந்தளித்ததை,

"புல்லார் இன நிரை செல் புறம் நோக்கி
கையின் சுட்டிப் பையென எண்ணி,
சிலையின் மாற்றியோனே"[104]

புறப்பாடல் போர்த் தொழிலில் ஒன்றான ஆநிரைக் கவர்தலை உணாத்துகின்றது.

**அறுவடை**

உழவுத் தொழிலில் அறுவடை நிகழ்வினை,

"செந்நெல் அரிநர் கூர் வாட் புண்ணுறக்
காணார் முதலொடு போந்தென"[105]

என்றும்,

"தண்ணுறு நெய்தல் தளையவிழ் வான்பூ
வெண்ணெல் அரிநர் மாற்றினர் அறுக்கும்"[106]

என்ற வரிகளில் அறிய முடிகின்றது.

"அறாஅ யாணர் அகன் கண் செறுவின்
அருவி ஆம்பல் நெய்தலொடு அரிந்து
செறு வினை மகளிர் மலிந்த வெக்கை,
பருஉப் பகடு உதிர்த்த மென் செந் நெல்லின்
அம்பண அளவை உறை குவித்தார்க்கு,"[107]

பதிற்றுப்பத்து பாடலில், அறுவடை செய்த நெல்லை எருமை கடாவினால் போரடித்து குவித்து மரக்காலால் அளந்த உழவர்கள் செய்யும் பணியினை முழுமையாக படம் பிடித்துக் காட்டி உள்ளது.

**வேட்டையாடுதல்**

வேட்டையாடுதல் மனிதனின் ஆதிதொழில் எனலாம். வேட்டைக்குச் செல்வோர் வேங்கை மலரைச் சூடியும் தேன் அருந்தியும் சென்றனர். இனிய பலாப்பழத்தின் சுளையிலிருந்து விளைந்த தேனை, அம்பினைச் செலுத்தும் இளையரொடு பருகியதை,

"வாங்கு அமை நோன்சிலை எருத்தத்து இரிஇ
நீம்பழுப் பலவின் சுளைவினை தேறல்
வீனை அம்பின் இளையரொடு மாந்தி"[108]

என்னும் பாடலில் வேட்டைக்கு சென்ற விதத்தைக் கூறுகின்றது. வேட்டைக்குச் செல்லும் தலைவனோடு நாயும் பின் தொடர்ந்து சென்றதை,

"ஒட்டு இயல் பிழையா வயநாய் பிற்பட
வட்டம் போகிய குறவன்"[109]

என்றும்,

"சினவுகொள் ஞமலி செயிர்ந்துப் படை"[110]

மேற்கண்ட அடிகளில் வேட்டைக்கு நாயினைப் பயன்படுத்தியதை அறிய முடிகின்றது.

**குயவர் தொழில்**

தலைவன் போரில் இறந்ததினால் தலைவி தானும் தலைவனோடு இறக்க விரும்பி, ஊர்க் குயவனை நோக்கி 'இருவரையும் அடக்கத்தக்க அகன்ற தாழியை செய்து தருக' என்பதின் வாயிலாக

"கலம் செய் கோவே! கலம் செய் கோவே!"[111]

என்றும்,

"கலம் செய் கோவே கலம் செய் கோவே!
இருள் திணிந்தன்ன குரூஉத் திரள் பரூஉப் புகை
அகல் இரு விசும்பின் ஊன்றும் சூளை,
நனந்தலை மூதூர்க் கலம் செய் கோவே!"[112]

என்ற பாடல்களில் சூளை புகை வானை எட்டி நின்றது போல, சோழ மன்னனின் புகழ் பரவி உள்ளது. அவனுக்கு ஏற்ப (கலம்) முதுமக்கள் தாழி செய்வாயாக என்பதின் வாயிலாக மட்கலம் செய்யும் குயத்தொழிலை கண்டுணரமுடிகின்றது.

**கட்டில் பின்னுதல்**

கட்டில் பின்னுவோர் குடியைப் பற்றிய செய்தியினை,

"கட்டில் நிணக்கும் இழிசினன் கையது
போழ் தூண்டு ஊசியின் விரைந்தன்று மாதோ"[113]

என்னும் புறப்பாடலில் கட்டில் பின்னுவோர் ஊசிக் கொண்டு விரைந்து செய்யும் செயலை விட பெருநற்கிள்ளி செய்த போர் ஊசியின் வேகத்தை விட விரைவாக அமைந்ததின் வாயிலாக கட்டில் பின்னும் தொழிலை அறிய முடிகின்றது.

**ஆடை வெளுத்தல்**

மகளிர் ஆடை வெளுத்தல் தொழிலைச் செய்தமையை சங்க இலக்கியம் சுட்டுகின்றது. புலைத்தி ஆடைகளை ஆராய்ந்து கழுவுந்தன்மையால் கை ஓழியாத தன்மையை,

"ஆடு இயல் விழவின் அழுங்கல் மூதூர்,
உடையோர் பான்மையின் பெருங்கை தூவா,
வறன் இல் புலைத்தி எல்லித் தோய்ந்த
புகா புக் கொண்ட புன் பூங் ஆடை கலிங்கமொடு"[114]

என்னும் நற்றிணைப் பாடலில் பூப்போட்ட வடிவத்தினைக் கொண்ட ஆடையினையும், புலத்தியர் அயராது ஊர்மக்களின் ஆடைகளை துவைக்கும் பணியினையும் விளக்குகிறது. அழுக்கினை அகற்றி தூயதாக்கும் ஆடைவெளுப்பவள், ஆடையை கஞ்சியில் தோய்ந்து எடுத்து, முதலில் நீளப் புடைத்துப்பின் முறுக்கி இவ்வாடையைக் குளிர்ந்த நீரில் இடுவதை,

"நலத்தகைப் புலத்தி பசைதோய்த்து எடுத்துத்
தலைப்புடைப் போக்கித் தண் கயந்து கிட்ட"[115]

மேற்கண்ட குறுந்தொகை பாடலில் ஆடைகளுக்கு கஞ்சி இட்டு உலாத்தும் புலத்தியின் பணியினைக் குறிப்பிடுகின்றது. கஞ்சிப்பகை கொண்ட விரல்களையும் உடைய வண்ணாத்தி பற்றிய நிலையை,

"பசைவிரல் புலைத்தி நெடிது பிசைந்து ஊட்டிய
பூந்துகில் இமைக்கும், பொலன்காழ் அல்குல்"[116]

என்ற அகப்பாடல் வழி அறிய பெற்றாலும் மேலும் சில கருத்தினை,

"பசை கொல் மெல் விரல், பெருந் தோள், புலைத்தி
துறை விட்டன்ன தாமயிர் எகினம்"[117]

என்ற வரிகளில் ஆடைகளிலே ஊட்டப் பெற்ற கஞ்சிப் பசையினைக் கரைத்து விடும் மெல்லிய விரல்களை உடைய ஆடை வெளுப்பவரின் பணி நிலையினை எடுத்துரைக்கின்றது.

**நெசவுத்தொழில்**

நாகரிகம்மிக்க சமூகத்தின் சிறந்த அடையாளமாக நெசவுத்தொழில் உள்ளதை மிகச் சிறப்புடன் எடுத்துரைக்கின்றதை,

"போதுவரி பகன்றை புதுமலரன்ன

அகன்று மடிகலிங்கம் உடீஇ"[118]

என்றும், மேலும்,

"வேர்புரை சிதாஅர் நீக்கி, நேர்கரை

நுண்நூல் கலிங்கம் உடஇ, 'உண்' எனத்"[119]

மேலே கூறும் புறப்பாடலில் சிதாஅர் என்பது கிழிந்த ஆடையை களைந்து விட்டு நெருக்கி இழைத்த நூலால் ஆன ஆடையை உடுத்தி உண்க என்று ஔவையார், பொகுட்டு எழினி இடத்து குறிப்பிடுவதன் வாயிலாக நுண்ணிய வேலைப்பாடு அமைந்த நெசவுத் தொழில் இன்றியமையாததாக உள்ளது.

இவ்விதம், மக்கள் தங்கள் வாழும் இடத்திற்கேற்ப வாழ்க்கைச் சூழலுக்கு ஏற்ப உழவு, நெசவு போன்ற தொழில்களை செய்து நாட்டின் பொருளாதார நிலை வளர்ச்சி பெற்று இருக்கின்றது.

**தினை புனம் காத்தல் (காவல் தொழில்)**

குறிஞ்சிநிலப் பெண்கள் திணைக் கதிர்களை கிளி, குருவி பறவைகள் கவரா வண்ணம் காவல் காத்த செய்தியினை 'களிறு அணந்து எய்தாக் கல்முகை இதனத்து சிறுதினைப் படுகிளி எம்மொடு ஓப்பி மல்லல் அறைய மலிர்சுனைக் குவளை' என்பதினால் மலைக்குகையின் மேல் அமைக்கப்பட்ட பரணியில் அமர்ந்து கிளிகளை ஓட்டிய நிகழ்வினால் தினைப்புனம் காத்த பெண் புரியும் தொழி அறிய முடிகின்றதை,

"பெருவரை அடுக்கத்துக் குரிஇ ஓப்பி"[120]

மேற்காணும் அகநானூற்றில் திணையை உண்ண வரும் பறவைகளை ஓட்டும் மென்மையான தொழிலைச் செய்த போதும், உயரமான பரண் அமைத்து செயல்பட்டதன் மூலம், பானை போன்ற பெரு விலங்குகளின் நடமாட்டத்தின் காரணமாக பரண் அமைத்திருந்தாலும், அஞ்சாது பணி புரிந்த மங்கையரின் மன உறுதி நிலையை அறிய முடிகின்றது.

**இரவுக் காவல்**

சங்ககாலத்தில் இரவுக் காவலர்கள் இரவில் அரண்மனையில் முன்புற வாயில்களைக் காவல் காத்து வந்துள்ளனர். இரவில் மக்கள் காவல் காக்கும் பழக்கம் இருந்தது என்பதை,

"................................... நன்னிருங்
மாந்தர் கடி கொண்ட கங்குல்.........."[121]

எனும் கலித்தொகைப் பாடல் வழி அறிய முடிகின்றது.

**மீன் பிடித்தல்**

கடல் சார்ந்த நிலப்பகுதி மக்கள் மீன் பிடித்தலை தொழிலாகக் கொண்டனர். பரதவர் பிடித்த மீன்களைப் பெண்கள் அருகில் உள்ள ஊருக்குள் எடுத்துச் சென்று வாணிகம் செய்து விட்டு அதற்கு ஈடாக தமக்குத் தேவையான பிறப் பொருள்களைப் பெற்று வருவதை,

"திமிலோன் தந்த கடுங்கண் வயமீன்
தழையணி அல்குல் செல்வத் தங்கையர்
விழவி அயர் மறுகின் விலையெனப் பகரும்"[122]

என்ற பாடலில் தன் பேச்சுத்திறனால் கூவி விற்பதனை அறிய முடிகின்றது. மேலும், மீன் பிடிக்கும் தொழிலில் பெண்களும் ஈடுப்பட்டுள்ளதை,

"நாண் கொள் நுண் கோலின் மீன்கொள் பாண்மகள்

தான்புனல் அடைகரைப் படுத்த வராஅல்"[123]

என்னும் பாடலில் மீனை விற்கும் திறன் மட்டுமன்று மீனைப் பிடிக்கும் நுணுக்கமும் பெற்றிருப்பதைக் காட்டுகின்றது. இது மட்டும் அல்லாமல் பெண்கள் மலர் விற்பவளை பற்றி கூறும் செய்தியினை,

"புதுமலர் தெருவுதொறு நுவலும்

நொதுமலாட்டிக்கு நோம் என் நெஞ்சே!"[124]

என்ற பாடலில் தெருத்தோறும் விலைக் கூறிச் சென்று பூ விற்ற பெண்ணின் வாயிலாக பெண்களின் விற்பனைத் திறனும் தமக்குத் தேவையான பிறப் பொருளைப் பெற்று தன் வாழ்க்கைத் தேவையைப் பூர்த்தி செய்து கொண்ட பாங்கையும் அறிய முடிகின்றது.

வணிகப் பெருமக்களை தொல்காப்பியர் "வைசியன் பெறுமே வணிக வாழ்க்கை"[125] என்று வைசிகன் வாணிகத்தினாலே வாழ்க்கைப் பெறுவான் எனக் குறிப்பிடுகிறார்.

'வாணிக்' என்ற வடச்சொல்லின் விரிவுதான் 'வணிகம்' என்றானது. 'வாணிஜ்யம்' என்பது வாணிகம் என்றும், பின்னர் வாணிபம், வணிகம் என்றும் ஆயிற்று. மேலும் வணிகார்க்கு ஆறுவகைத் தொழில் உரியது என்கிறார். ஓதல், வேட்டல் (வேள்வி செய்தல்), ஈதல், உழவு, பசு காத்தல், வாணிகம் என்று உரைக்கிறார். அரசர் போல வணிகரும் வில்லும். வேலும், கோலும், வாளும் போன்ற ஆயுதங்களைத் தாங்கும் உரிமை பெற்றிருந்தமையை,

"வில்லும் வேலும் கழலும் கண்ணியும்
தாரும் ஆரமும் தேரும் மாவும்
மன்பெறு மரபின் ஏனோர்க்கு முறிய"[126]

என்று தொல்காப்பியர் எடுத்துரைக்கின்றார்.

சங்ககால வணிகரது வாழ்க்கையைப் பட்டினப்பாலை படம்பிடித்துக் காட்டுகிறது. கலப்பையின் நுகத்தடியிலே தைத்த ஆணிபோல, நடுநிலை தவறாதவர், பழிக்கு அஞ்சி வாய்மையே பேசும் சத்தியவான்கள். பொருள் வாங்குவோர் நலனையே தங்கள் நலனாக கருதுவதை,

"கொடுமேழி நசை உழவர்
நெடுநுகத்துப் பகல்போல்
நடுவு நின்ற நல் நெஞ்சினோர்"[127]

என்று பட்டினப்பாலை நூலில் தகம் பொருளாயின் உயர்வாகவும் பிறர் பொருளாயின் தாழ்வாகவும் மதிப்பிடாமல் தம் பொருள்களையும் அத்தகுதிக்கேற்ப மதித்தல் வேண்டும் என்ற வணிகரின் நடுநிலைமையை எடுத்துரைக்கிறது.

"வாணிகம் செய்வார்க்கு வாணிகம் பேணிப்
பிறவும் தமபோல் செயின்"[128]

என்று வள்ளுவரின் குறளிர்கேற்ப நடுநிலை என்ற அதிகாரத்தால் வள்ளுவர் உணர்த்திய கருத்து ஒப்புநோக்கத்தக்கது. ஆக வணிகர்கள் நடுநிலைத் தவறாத உள்ளத்திண்மையும் குறையாது கொடுத்து அளவொடுப் பெறும் நேர்மைப் போக்கும் உடையவர் வணிகர் என்று எடுத்துரைத்திருப்பதைக் காணமுடிகின்றது.

**சங்ககால வணிகர் நிலை**

கூல வாணிகம், உப்பு வாணிகம், பொன்வணிகம், அறுவை வாணிகம், கடல் வாணிகம், என பல பிரிவுகளில் வாணிகத் தொழில்கள் இருந்தன. அவற்றை செய்தோர் கூல வாணிகர், உமணார், மாநாய்கர் எனப்பட்டனர். உள்நாட்டில் வாணிகம் செய்தவர்களை சாத்துவர் என அழைத்தனர். மாசாத்துவன், கூல வணிகன் என்ற பெயர்களில் புலவர்களும் இருப்பதை, 'மாநாய்கன் குலக் கொம்பர் ' இலக்கியத்தின் வாயிலாக காணலாம். பொருள்களின் விலையைக் கூறி பண்டமாற்றமாகவோ பணமாகவோ, பொருள்களை விற்றவர் வணிகர் எனபட்டனர். அவர்கள் எண்வகையான கூலங்களை விற்றதனை,

"மெய்திரி வகையின் எண்வகை உணவின்
செய்தி வரையார் அப்பாலான"[129]

என்ற தொல்காப்பிய நூற்பாவில் நெல், காணம், வரகு, சிறுங்கு, தினை, சாமை, புல்லு, கோதுமை என்ற எட்டு வகை கூலமும் வணிகர்கள் செய்தனர் என்பதை இலக்கண நூல் குறிப்பிடுகின்றது.

**பண்டமாற்று முறை**

ஒரு பண்டத்தைக் கொடுத்து அதற்கு மாறாக மற்றொரு பண்டத்தை வாங்கிக் கொள்வது பண்டைக்கால வணிகமுறை ஆகும். அன்றாட வாழ்விற்குத் தேவையான நெல், உப்பு, பால், தயிர், மீன் போன்ற பொருட்களை பண்டமாற்றம் செய்தனர். பண்டமாற்று முறையில் நெல் முக்கிய தானியமாக கருதப்பட்டது.

"நெல்லும் உப்பும் நேரே ஊரீர்"[130]

நெல் உப்பின் மதிப்பிற்கு இணையாக இருந்ததைத் தெரிவிக்கின்றது.

"மான் தசை சொரிந்த வட்டியும், ஆய்மகள்
தயிர் கொடு வந்த தசும்பும், நிறை
ஏரின் வாழ்நர் பேர் இல் அரிவையர்
குளக் கீழ் விளைந்த களக் கொள் வெண்ணெல்"[131]

மலைநாட்டு வேட்டுவன் மான் தசையும், இடைச்சி தயிரும், மோரும் கொடுத்து நெல்லைப் பெற்றதனை,

"மீன் கொடுத்து நெல் குவைஇ
மிசையம்பியின் மனை மறுக்குந்து
மனக்குவை இய கறிமுடையால்
கலிச்சுமைய கரைக்கலக்குறுந்து
கலம் தந்த பொற்பரிசம்
கழித்தோணியான் கரை சோரக்குந்து"[132]

புறப்பாடலில் மீனை விற்று நெல் வாங்கி குவித்து வைக்கப்பட்டதையும் மிளகு மூட்டைகள், விற்று யவனர் பொற்காசுகள் பெற்றதையும் வாணிப பண்ட மாற்று முறையையும் அறியமுடிகிறது, மேலும், உள்நாட்டு வாணிகமன்றி, கடல் வாணிபத்தினையும் கலம் தந்த பொற்பரிசம் என்பதின் மூலம் அறியமுடிகின்றது.

இன்றைய வணிக நிலவரப்படி தனி நபரின் வருமான உயர்வால் மக்கள் பயன்படுத்தக்கூடிய அன்றாட அத்தியாவசியப் பொருட்களின் விலை அதிகமாகிறது. இதன் காரணமாக வருவாய் குறைந்த வறுமை கோட்டிற்கு கீழ் உள்ளோர் அப்பொருளை வாங்கக்கூடிய வசதிகளை பெறமுடியவில்லை.

அன்றைய பண்டமாற்று முறை என்பது மறைந்து இயற்கை மூலமாக மனிதனால் உற்பத்தி செய்யப்படுகின்ற பொருட்களுக்கு நிகராக விலை நிர்ணயிக்கப்பட்டு பணம் என்ற ஒன்றை மட்டுமே பறிமாறிக் கொள்ளுகின்றனர். இதனால் பணத்தின் அளவு அதிகரித்தல் (Quality of Money) பொருள்களின்

அளவு குறைதல் காரணமாகப் பணத்தின் மதிப்பும் குறைகிறது. அதாவது பொருட்களின் விலைகள் உயருகிறது.

**சுங்கம் வழங்கும் முறை**

ஒரு அரசினது வருவாய்க்குரிய வழிகள் பல. அதில் முதன்மையானது வரி ஆகும். தமிழ் நூல்களில் வரிகள் பற்றி பல்வேறு கலைச் சொற்கள் உள்ளன. வரி, இறை, திறை, இரவு, கடமை, குடிமை, ஆயம், கொண்டி, உறுபொருள், உல்குபொருள் முதலியன மக்கள் அரசுக்கு வழங்கப்பட்ட வரிகளை குறிப்பனவாகும்.

**இறை:** இது அரசனுக்கு மக்களால் வழங்கப்படுவது

**திறை:** போரில் அமைதியை விரும்புபவர் தன்னிடம் உள்ள பொருள்களை திறையாகத் தருவதும், அந்த திறைப்பணம் மக்களுக்கு ஒரு பெரும் உதவியாகவும் அமையும் என்பதை,

"போர் முனையில் வேந்தன் வெற்றியுடன்
வினைமுடிக்க பகைவர் திறை தந்து
தமராகி விடுவர்"[133]

என்ற அகப்பாடல் வழி தோற்ற மன்னர்கள் வென்ற மன்னருக்கு திறை தருவது உண்டு என்பதை எடுத்துக்காட்டுகிறது.

"பணிந்தோர் தேஎந் தம்வழி நட்ப்பப்
பணியார் தேஎம் பணித்துறை கொண்டார்"[134]

மதுரைகாஞ்சி பாடல் நமக்கு வலியுறுத்துகிறது.

**இரவு:** தேவையற்ற ஒன்று. மக்கள் விருப்பம், விருப்பமற்ற நிலையில் ஓரளவு அச்சுறுத்தலின் போது கொள்ளப்படுவது இரவு,

"வேலொடு நின்றான் இடுவென் றதுபோலும்
கோலொடு நின்றான் இரவு"[135]

வள்ளுவர் குறளில் சூழ்நிலைக் காரணமாக அரசு செலுத்துபவர்கள் வேண்டிப்பெறும் அல்லது இரந்து பெறும் சிறப்புப் பொருள் என்பர்.. இஃது இக்கால வழக்கில் நன்கொடை எனச் சொல்லலாம்.

"கொண்டி வேண்டுவ னாயிற் கொள்கெனக்
கொடுத்த மன்னர் நடுக்கற்றனரே"[136]

என்ற புறப்பாடலால் அரசர்களுக்கு இடையே நடந்த கடற்போரில் வென்ற அரசன் தோற்றவனிடமிருந்து கொண்ட பொருள் கொண்டி எனப்பட்டதை அறியமுடிகிறது.

திறையை முதலில் செலுத்தி விட்டு, பொருளைக் கொள்ளுதல் என்று கொள்க என்று முன்னே கொடுத்த மன்னர் என்று உரைக்கிறார் ஐயூர் முடவனார். கள்வர்களுக்கு பயந்து வணிகர்கள் கூட்டமாகவே செல்வ அத்தகைய பயணம் 'வணிகச் சாத்து' எனப்பட்டது. வணிகச்சாத்துகள் சென்று வரும் பெருவழிகளில் அரசர்களது ஆணைக்கிணங்க வில் வீரர்கள் காவல் புரிந்து வந்தனர்.

இத்தகைய வணிகப் பெருவழிகள் கூடும் இடங்களில் சுங்கச்சாலைகள் அமைக்கப்பட்டிருந்தன. இவ்வழிகளில் வணிகர்கள் ஒருவரையொருவர் எதிர்ப்பட்ட போது மலையில் கிடைத்த பொருள்களையும், கடலில் எடுத்த பொருள்களையும் தங்களுக்குள் பரிமாறிக்கொண்டனார்.

குடிமக்கள் தம் வருமானத்தில் ஆறில் ஒரு பங்கினை வரியாகச் செலுத்த வேண்டும் என்பது அக்கால பொது விதி. ஆனால் அக்கால அரசர்கள் அனைவருமே முறைப்படி வரி வாங்கினர் எனக் கூற இயலாது அரசனோ அல்லது அரசனுக்கு அறியாமல் அதிகாரிகளோ தவறுக்கு ஆளாவது உண்டு. பாண்டியன் அறிவுடை நம்பி என்ற அரசன் அறநெறி தவறாமல் நடத்திய அவன் புரிந்த ஆட்சியில் தரமறிந்து பளுவைக் கணக்கிட்டு வரிவிதித்து வாங்காத அதிகாரிகளால் தான் அந்த தவறு நேர்ந்திருந்தது. இதனால் மக்களிடத்தில் கசப்பு ஏற்பட்டு மனம் வருந்தினர். இதனை மன்னனுக்கு எடுத்துரைக்கிறார் பிசிராந்தையார் என்ற புலவர்.

அரிசி முதலியவற்றைக் கலந்து கொடுக்கும் 'நொய்மிதி கவளமே' யானைக்கு உணவாகும். ஒரு வேலி நிலத்தில் விளைந்த நெல்லை அறுத்துக் கொண்டு வந்து கவள உணவாக ஆக்கி யானைக்கு ஊட்டினால், அதுவே, பல நாட்களுக்குப் பயன்படும் ஆனால் வயலில் புகுந்து உண்டால் யானையின் வாயில் நுழைவதை விட காலில் மிதிப்பிட்டு அழிவது பலவாகும் என்பதை,

"காய்நெல் அறுத்துக்கவளம் கொளினே
மாநிறை வில்லறும் பன்னாட் காகும்
நூறுசெறு வாயினும் தமித்துப்புக்கு உணினே
வாய்புகு வதனினும் கால்பெரிது கெடுக்கும்"[137]

புறுப்பாடலில் அறிவுற்ற அரசன் அறநெறித்தவறாமல் வரி வழங்குவானாயின் அவன் பால் செல்வம் கோடி பெருகும், நாடும் செல்வச் செழிப்புடன் காணப்படும் என்கிறது. அதோடு மட்டுமல்லாமல்,

"பரிதப எடுக்கும் பிண்டம் நச்சின்
யானை புக்க புலம் போல
தானும் உண்ணான் உலகமும் கெடுமே"[138]

இன்னாரிடம் இவ்வளவு வாங்கவேண்டும் என்ற வரிசை அறியார் மக்களிடம் சென்ற அன்பும் ஈரமும் கெடப் பொருளைத் தாமே எடுத்துக் கொள்பவர் என்பதைச் சுட்டவே 'பரிதப எடுக்கும்' என்கிறது.

நல்விளைவுடைய காலத்திற்கு ஏற்ப வரி வழங்கினால் நன்மை பயக்கும் என்றும், அதிகம் வாங்குவதால் ஒருமுறை தந்ததுடன் மீண்டும் தர இயலாத நிலை ஏற்பட்டு குடிகள் அழியும் என்றும் அறிவுறுத்தி வரிமுறையை கவள உணவோடு உவமையில் வைத்துக் காட்டிய பெருமை போற்றுதற்குரியதாகும்.

வணிகத்தில் பெரும்பங்கு வகித்தது மிளகு, ஏலம், கருவாப்பட்டை, கிராம்பு ஆகும், நல்லமிளகு சேர நாட்டில் தான் கிடைத்தது.

மேலை நாடுகளில் இறைச்சியைப் பதப்படுத்த, சுவையைப் பெருக்க, மருந்தாக மிளகு பயன்படுத்தப்பட்டது. கோயிலுக்கு மிளகே கொடுக்கப்பட்டது. இதன் மூலம் ரோமின் செல்வம் தமிழகத்துக்கு நிறைய வந்து குவிந்தது. அகஸ்டஸ் முதலான பேரரசர்களின் நாணயங்கள் குவியலாக வந்தது.

"யவனர் தந்த வினை மாண் நன்கலன்
பொன்னோடு வந்து கறியொடு பெயரும்
விளங்கும் முசிறி"[139]

என்ற வரிகளால் பொன் கொடுத்து மிளகைப் பெற்றனர் என்று கூறுவதின் மூலம் தமிழகத்தின் வளமையை உய்த்துணரலாம். இவற்றிலிருந்து விதி விலக்காக வணிகத்துக்கு இடையூறாக இருந்த சுங்கத்தை நீக்கியதால் முதற்குலோத்துங்கன் 'சுங்கம் தவிர்த்த சோழன்' என்ற புகழ்ச்சிக்கு உரியவன் ஆனான்.

பொது நிதித்துறையில் 'வரிமுறை' (Taxation) சிறப்பிடம் பெறுகிறது. இது பற்றி பொருளியல் பேரறிஞர்கள் எத்தனையோ விதிமுறைகளை வகுத்துள்ளனர்.

வரி வாங்குவது என்பது வாத்தினுடைய சிறகுகளைப் பறிப்பது போல செயற்பட வேண்டும் என்கிறார். மக்களை வருத்திக் கூக்குரலிடா வண்ணம் வரி வாங்க வேண்டும் எனவும், வரி வாங்குவது பொதுநல வளர்ச்சிக்கு உதவியாக இருக்க வேண்டும் எனவும் மக்களின் வாழ்வு பாதிக்கபடாமல் அதே நேரத்தில் நாட்டுப் பொதுநலம் பன்மடங்காகப் பெருகும் வகையிலும் வரிமுறை அமைவதே சிறப்பு என்றனர்.

தமிழ்நாட்டில் இயற்கை அமைப்பும், மனித முயற்சியுடனும் இயற்கையாகவே விளைந்த சிலபொருள்களும் தமிழ் நாட்டின் கடலோர எல்லைகளின் மூலமாக வாணிகம் தொடர்பு ஏற்பட்டது. அதன் காரணமாக கரையோரமாகத் தொடங்கிய வாணிப முறைகள் நடுக்கடலிலும் சென்று செய்யத் தொடங்கியுள்ளனர். ஆனால் வாணிகம் என்பது பெரும்பாலும் பண்டமாற்று முறையை அடிப்படையாகக் கொண்டு நடைப்பெற்றது. வழிப்பறிகளிலிருந்து காத்துக் கொள்ள காவல், போர்படை வைத்திருந்ததையும் காவல் காப்போர் பொருளுக்கு ஏற்ற வரி விதித்து வழங்கியதையும் சங்க இலக்கியத்தின் வாயிலாக காணமுடிந்தது.

**தொகுப்புரை**

மன்னர்கள் தலைமையில் நடைபெறும் அரசினை முடியரசு என்கிறார்கள். இதுவே சங்கச் சமுதாயத்தில் நிலவிய ஆட்சி. சீறூர் மன்னன் தான் மக்களுள் ஒருவர் என்ற நிலையில் ஆட்சி புரிந்தான். குறுநில மன்னர்கள் - மக்கள் பிரதிநிதிகளாகவும், வள்ளல்களாகவும் இருந்துள்ளனர். வேந்தர்கள் - அரசர்க்காகத்தான் மக்கள் என்ற நிலையில் ஆண்டனர்.

அரசர்கள் வேளாண்மைக்கு முக்கியத்துவம் அளித்தல், வரி விதிப்பு, ஏற்றுமதி இறக்குமதிக்கு முக்கியத்துவம், புலவர்கள் கற்றோரின் அறிவுரைக்

கேட்டல், சேமித்துவைத்த பொருளை வறட்சிக் காலத்தில் மக்களுக்கு அளித்தல் போன்ற உத்திகளைக் கையாண்டுள்ளனர் என்பதை அறிய முடிகின்றது.

அரசு இயங்க பொருள் தேவை, அரசிற்கு வருவாய் பல வழிகளில் கிடைத்ததை அறியமுடிகின்றது. நிலவரி, சொத்துவரி, வணிகவரி, தொழில்வரி, சுங்கவரி, தண்டப்பணம், உப்பள வருமானம் போன்ற பல வழிகளில் அரசு வரியைப் பெற்றதை அறியமுடிகின்றது. மேலும், புரவு, திரை, கொண்டி போன்றவையும் இருந்துள்ளது.

அரசு பெறும் வரி மக்களின் வளத்திற்கேற்ப அமைந்திருந்தது. கொடுக்கும் ஆற்றலுக்கேற்ற வரியினைப் பெற்றான். அந்த வரிகள் முழுவதும் மக்கள் நலன் சார்ந்த பணிகளுக்கே பயன்படுத்தப்பட்டன.

சங்க காலத்தில் குடி மக்களின் நலன்கருதி அரசனே விசாரித்துத் தீர்ப்பு வழங்கினான். அந்நிலையில் அவனுடைய அரசவையே அறங்கூறு அவையமாகத் திகழ்ந்தது.

குடிமக்களுக்குப் பாதுகாப்பளிப்பது அரசின் கடமையாகும். இந்தப் பாதுகாப்பைப் பெற்ற குடிகள் அரசனுக்கு விளைச்சலில் பாகத்தையும், வணிகத்தில் சுங்கத்தையும் வழங்கியதை அறிய முடிகின்றது.

வேந்தர்கள் தன் வாழ்வின் தலையாய கடமையாகத் திறனைக் கொண்டிருந்தனர். எளியவர் முதல் புலவர்கள் வரை வேண்டிய நேரத்தில் மன்னனைச் சந்தித்துப் பரிசில் பெற்றனர்.

சங்க சமூகத்தில் வேந்தன் அறநெறி தவறாமலும், கருணையோடும், வேறுபாடின்றியும், மக்களின் மனதறிந்து ஆட்சி செலுத்தியதால் மக்கள் செல்வச் செழிப்புடன் வாழ்ந்தனர் என்பது புலனாகின்றது.

# சான்றெண் விளக்கம்

1. தமிழ்நாடு, சங்ககாலம் (வாழ்வியல், ப. 65.
2. பொகுலாங்ஸ்கி (மொ.பெ), இயக்கவியல் பொருள் முதல் வாதமும் வரலாற்றுப் பொருள் முதல் வாதமும், ப. 387.
3. தமிழ்ப் பேரகராதி, ப. 107.
4. லெனின், வி.இ., அரசு, ப. 10.
5. P. Sharan, Political Organization and Comparative Government, p. 4.
6. ஆறுமுகம், அ., சங்க இலக்கியத்தில் குடும்பம், உடைமை, அரசு, ப. 195.
7. P. Sharan, Political Organization and Comparative Government, p. 4.
8. புறம். பா. 72.
9. நற். பா. 146:1-7.
10. பட்டினம், பா. 285-286.
11. மலைபடுகடாம், பா. 478-487.
12. குருநாதன், வ., சங்ககால அரச வரலாறு, ப. 3.
13. புறம். பா. 42:10-11.
14. இராசமாணிக்கனார், மா., தமிழக ஆட்சி, ப. 11.
15. மேலது., ப. 29.
16. செல்வம், வே.தி., தமிழக வரலாறும் பண்பாடும், ப. 75.
17. புறம். பா. 2:17-19.
18. தேவநேயப்பாவாணர், ஞா., பழந்தமிழ் ஆட்சி, ப. 174.
19. சரவணன், சங்ககாலம் (தமிழ் பேப்பர் மின்னிதழ்), ப. 1.
20. மேலது., ப. 2.

21. புறம். பா. 123:1-6.
22. மேலது., பா. 125:6.
23. அகம். பா. 61:1.
24. குறுந். பா. 288:2.
25. பதிற்றுப். பா. 13:17-18.
26. புறம். பா. 336:1-12.
27. மேலது., பா. 337:1.
28. மேலது., பா. 91:1-3.
29. மேலது., பா. 109:1-18.
30. மேலது., பா. 152:12-13.
31. மேலது., பா. 17:1-40.
32. மேலது., பா. 49:1-6.
33. தொல்.புறம். நூ. 20:2.
34. தொல்.இளம்பூரணம், புறம். நூ. 20.
35. புறம். பா. 186.
36. மேலது., பா. 55.
37. அகம். பா. 109.
38. மதுரை. பா. 191-194.
39. தொல். நூ. 1363
40. மேலது.கள. நூ. 1.
41. புறம். பா. 31:1-2.
42. கலி. பா. 141:3.

43. புறம். பா. 390:12-23.

44. புறம். பா. 150:18-23.

45. பதிற்று. பா. 54:6-8.

46. மேலது., பா. 59:1-8.

47. புறம். பா. 6:14-16.

48. மேலது., பா. 200:9-12.

49. பெரும்பாண். பா. 253-255.

50. பதிற்று. பா. 44:4-6.

51. குறள். 72.

52. மேலது., 322.

53. புறம். பா. 163:1-7.

54. மேலது., பா. 60:7-9.

55. மேலது., பா. 72:7-12.

56. சாமி.சிதம்பரனார், பழந்தமிழர் அரசியல், ப. 32.

57. பெரும்பாண், பா. 36-37.

58. மேலது., பா. 441:444.

59. பொ.ஆ., பா. 187-188.

60. புறம். பா. 37:5-6.

61. மேலது., பா. 312:4.

62. பதிற்று. பா. 45:13.

63. மேலது., பா. 73:1-3.

64. புறம். பா. 3:14.

65. மேலது., பா. 59:4.

66. பதிற்று. பா. 63:6-7.

67. புறம். பா. 341:8.

68. பதிற்று. பா. 20:9-10.

69. புறம். பா. 25:9-14.

70. மேலது., பா. 8:1.

71. சாலினி இளந்திரையன், சங்கத்தமிழகம் மனித நேய மனநெறிகள், ப. 95-97.

72. இராசமாணிக்கனார், மா., தமிழக ஆட்சி, ப. 65.

73. அ. ஆறுமுகம், சங்க இலக்கியத்தில் குடும்பம், உடைமை, அரசு, ப. 232.

74. புறம். பா. 75:4-5.

75. ராஜ்கௌதமன், அறம்/அதிகாரம், ப. 200.

76. தமிழ் லெக்சிகன், தொகுதி-VI, ப. 382.

77. பத்துப்பாட்டு நச்சி-உரை, ப. 121.

78. குறள். 43.

79. நற்றிணை, பா. 226:2-3.

80. புறம். பா. 17:6-9.

81. பட்டினம், பா. 116-125.

82. பெரும்பாண், பா. 80-81.

83. குறள். 756.

84. குறள். பரி.உரை. ப. 285.

85. தொல்.பொருள்.நச்சி.உரை. ப. 212.

86. பெரும்பாண், பா. 80-81.

87. ராஜ்கௌதமன், அறம்/அதிகாரம், ப. 222.

88. ந. சுப்பிரமணியன், மு. நூ. ப. 253.

89. அகநானூறு, பா. 54:1-2.

90. ராஜ்கௌதமன், அறம்/அதிகாரம், ப. 201.

91. ஔவை. சு. துரைசாமிப்பிள்ளை, பண்டைய நாளைச் சேரமன்னர், ப. 195.

92. புறம். பா. 184:5-6.

93. ஞா. தேவநேயப் பாவாணர், மு.நூ. ப. 83.

94. பட்டி. பா. 283-284.

95. புறம். பா. 18:18-23.

96. மேலது., பா. 68:8-10.

97. குறள்., 1032: அதிகாரம் - 104.

98. புறம். 40:10-11.

99. குறுந். பா. 131.

100. புறம். பா. 383:4.

101. மேலது., பா. 385:2.

102. மேலது., பா. 370:14-19.

103. முனைவர் கோ. கேசவன், மண்ணும் மனித உறவுகளும், ப. 23.

104. புறம். பா. 257:8-10.

105. நற். பா. 275:1-2.

106. ஐங்குறு. பா. 190:1-2.

107. பதிற். பா. 71:1-5.

108. அகம். பா. 182:2-4.

109. மேலது., பா. 182:5-6.

110. மேலது., பா. 388:14.

111. புறம். பா. 256.

112. மேலது., பா. 228:1-4.

113. மேலது., பா. 82:3-4.

114. நற். பா. 90:1-4.

115. குறுந். பா. 330:1-2.

116. அகம். பா. 387:6-7.

117. மேலது., பா. 34:11-12.

118. புறம். பா. 393: 17-18.

119. மேலது., பா.392:14-15.

120. அகம். பா. 308:8-10.

121. மேலது., பா.388:5.

122. கலி. பா. 142:32-33.

123. அகம். பா. 320:2-4.

124. மேலது., பா.216:1-2.

125. நற். பா. 118:10-11.

126. தொல்.மரபு. நூ. 78.

127. மேலது., நூ. 84.

128. பட்டினம். பா. 205-207.

129. குறள். 120 அதி - 12.

130. தொல்.மரபு. நூ. 79.

131. அகம். பா. 390.

132. புறம். பா. 33.

133. மேலது., பா. 343.

134. அகம். பா. 44.

135. பத்துப்பாட்டு மதுரை. பா. 229.

136. குறள். 552, அதி - 56.

137. புறம். பா. 51.

138. மேலது., பா. 184.

139. மேலது., பா. 184.

# துணைநூற்பட்டியல்


**முதன்மை ஆதாரங்கள்**

1. சாமிநாதையர், உ.வே. (ப.ஆ.), : **புறநானூறு மூலமும் உரையும்**
தமிழ்ப் பல்கலைக்கழகம்
தஞ்சாவூர்
ஆறாம் பதிப்பு-1963

2. சுப்பிரமணியன், ச.வே., : **சங்க இலக்கியம் எட்டுத்தொகை பத்துப்பாட்டு முழுவதும்**
மணிவாசகர் பதிப்பகம்
56/7, சிங்கர் தெரு,
பாரி முனை, சென்னை-108
பதிப்பு-1999

**துணைமை ஆதாரங்கள்**

1. அடிகளாசிரியர். (பதி.), : **தொல்காப்பியம் சொல்லதிகாரம் இளம்பூரணர் உரை,**
தமிழ்ப் பல்கலைக்கழகம்,
தஞ்சாவூர்.
பதிப்பு-1988.

2. ஆலிஸ், அ. (உ.ஆ.), : **பதிற்றுப்பத்து**
நியூ செஞ்சுரி புக் ஹவுஸ்
பதிப்பு-2004

3. ஆறுமுகம், அ., : **சங்க இலக்கியத்தில் குடும்பம், உடைமை, அரசு**
பாவேந்தர் பதிப்பகம்
அறியலூர்-51
பதிப்பு-1994

4. இராமலிங்கம், அரங்க., : **சங்க இலக்கியத்தில் வேந்தர்**
பாரதி புத்தகாலயம்
சென்னை-17
முதற்பதிப்பு-1982

5. இராசரெத்தினம், கு., : **சங்க இலக்கியத்தில் பொதுமக்கள்**
குகன் பதிப்பகம்
மன்னார்குடி
பதிப்பு-2004

6. இராசமாணிக்கனார். : **தமிழக வரலாறும் ஆட்சியும்**
பூம்புகார் பதிப்பகம்
சென்னை-108
பதிப்பு-2009

7. இளம்பூரணர். (உரை.), : **தொல்காப்பியம் பொருளதிகாரம் (மூலமும் உரையும்)**
கழக வெளியீடு
75, டி.டி.கே. சாலை
சென்னை-18
பதிப்பு-2004

8. இராகவையங்கார். ர., : **தமிழ் வரலாறு**
அண்ணாமலைப்பல்கலைக்கழகம்
அண்ணாமலைநகர்
பதிப்பு-1952

9. இராமநாதன் செட்டியார் லெ.ப.கரு., : **சங்ககாலத் தமிழர் வாழ்வு**
அண்ணாமலை நகர்
சீவகன் அச்சகம்
சிதம்பரம்
பதிப்பு-1964

10. கந்தசாமி சோ.ந., : **புறத்திணை வாழ்வியல்**
எட்டாவது உலகத்தமிழ் மாநாடு
பதிப்புச் சுழல் நிதி வெளியீடு
தமிழ்ப்பல்பலைக்கழகம், தஞ்சாவூர்
பதிப்பு-1994

11. குருநாதன், வ., : **சங்க கால அரச வரலாறு**
தமிழ்ச் சாரல் பதிப்பகம்
சென்னை
பதிப்பு-2004

12. கேசவன், கே., : **மண்ணும் மனித உறவுகளும்**
சென்னை புக் ஹவுஸ்
சென்னை
பதிப்பு-1979

13. கோவிந்தன் . கா., : **பண்டைத் தமிழர் போர்நெறி**
வள்ளுவர் பண்ணை
சி.ஐ.டி நகர், சென்னை
முதற் பதிப்பு,1965

14. சண்முகம்பிள்ளை. மு (ப.ஆ.),, : **குறுந்தொகை மூலமும் உரையும்**
ஓலைச்சுவடித்துறை
தமிழ்ப் பல்கலைக்கழகம்
தஞ்சாவூர்
பதிப்பு-1999

15. சதாசிவ ஐயர். தி., : **ஐங்குறுநூறு மூலமும் உரையும்**
உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம்
தரமணி, சென்னை
பதிப்பு-1999

16. சிதம்பரனார் . சாமி., : **பத்துப்பாட்டும் பண்டைத் தமிழரும்**
அறிவுப் பதிப்பகம்
இராயப்பேட்டை, சென்னை
இரண்டாம் பதிப்பு-2008

17. சிவப்பிரகாசம், கு., : **புறநானூற்றில் வாழ்வியல் விழுமியங்கள்**
திருக்குறள் பதிப்பகம்
சென்னை
பதிப்பு-2007

18. சிதம்பரனார், சாமி., : **பழந்தமிழர் அரசியல்**
தையல் வெளியீடு
சென்னை-12
பதிப்பு-2007

19. சின்னசாமி, தே.ப., : **அவ்வையாரின் நீதிநூல்கள்**
சரசு பதிப்பகம்
சென்னை
பதிப்பு-1989

20. சுப்பிரமணியன். பெ. (உரை.), : **பரிபாடல் மூலமும் உரையும்**
நியூ செஞ்சுரி புக் ஹவுஸ் (பி) லிட்.
41-பி, சிட்கோ இண்டஸ்டிரியல் எஸ்டேட்
அம்பத்தூர், சென்னை - 98
பதிப்பு - 2004

21. சுப்பிரமணியன். ச.வே., : **தொல்காப்பியம் தெளிவுரை**
மணிவாசகர் பதிப்பகம்
56/7, சிங்கர் தெரு
பாரிமுனை, சென்னை-108
பதிப்பு-1999

22. செல்வம், வே.தி., : **தமிழக வரலாறும் பண்பாடும்**
மணிவாசகர் பதிப்பகம்
சென்னை
இரண்டாம் பதிப்பு-2003

23. சோமசுந்தரனார்.பொ.வே., (உ.ஆ) : **புறப்பொருள் வெண்பாமாலை**
சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகம்
திருநெல்வேலி
பதிப்பு-1996

24. ஞானசம்பந்தன். : **இலக்கியக்கலை**
பாவை பப்ளிகேஷன்ஸ் வெளியீடு
சென்னை
முதற்பதிப்பு-மே 2020

25. தமிழண்ணல்., : **பரிசில் வாழ்க்கை**
மீனாட்சி புத்தக நிலையம்
மதுரை
ஐந்தாம் பதிப்பு-1999

26. தேவநேயப் பாவாணர். ஞா., : **பண்டைத் தமிழர் நாகரிகமும் பண்பாடும்**
பூம்புகார் பதிப்பகம்
சென்னை
முதற் பதிப்பு-2009

27. தேவநேயன். ஞா., : **பண்டைத்தமிழர் நாகரிகமும் பண்பாடும்**
நேசமணி பதிப்பகம்
சென்னை - 3
இரண்டாம் பதிப்பு-2000

28. பதிப்பாசிரியர் குழு. : **கம்பராமாயணம் (அயோத்தியா காண்டம்)**
மர்ரே அண்டு கம்பெனி
சென்னை
பதிப்பு-1958

29. பாலசுப்பிமணியன், கு.வெ. (உ.ஆ.),: **சங்க இலக்கியத்தில் புறப்பொருள்**
மெய்யப்பன் பதிப்பகம்
சிதம்பரம்-608 001
முதற்பதிப்பு-2017

30. பாலுசாமி, ந. (உ.ஆ.), : **வாழ்வியற் களஞ்சியம், தொகுதி-1**
சிவகாமி அச்சக வெளியீடு
சிதம்பரம்
பதிப்பு-1983

31. பாலுசாமி . ந., (ப.ஆ) : **வாழ்வியற் களஞ்சியம், தொகுதி - 8**
தமிழ்ப் பல்கலைக்கழகம்
தஞ்சாவூர்
பதிப்பு-1987

32. பிள்ளை . கே.கே., : **தமிழக வரலாறும் பண்பாடும்**
தமிழ்நாட்டுப் பாடநூல் நிறுவனம்
சென்னை
பதிப்பு-1981

33. மாணிக்கம். வ.சுப., : **திருக்குறள் தெளிவுரை**
மணிவாசகர் பதிப்பகம்
8/7, சிங்கர் தெரு
பாரிமுனை
சென்னை - 108
பதிப்பு-1998

34. மாணிக்கம் வ.சுப., : **தமிழ்க்காதல்**
மெய்யப்பன் பதிப்பகம்
53,புதுத்தெரு, சிதம்பரம்
பதிப்பு-2002

35. மோகன், இரா. (உ.ஆ.) : **பொருநராற்றுப்படை**
நியூ செஞ்சுரி புக் ஹவுஸ் (பி.) லிட்.
சென்னை
ஆறாம் பதிப்பு-2017

36. மோகன், இரா. (உ.ஆ.) : **சிறுபாணாற்றுப்படை**
நியூ செஞ்சுரி புக் ஹவுஸ் (பி.) லிட்.
சென்னை
ஆறாம் பதிப்பு-2017

37. மோகன், இரா. (உ.ஆ.) : **பெரும்பாணாற்றுப்படை**
நியூ செஞ்சுரி புக் ஹவுஸ் (பி.) லிட்.
சென்னை
ஆறாம் பதிப்பு-2017

38. ராஜ்கௌதமன், : **அறம் அதிகாரம்**
விடியல் பதிப்பகம்
முதற்பதிப்பு-2009

39. ராஜ்கௌதமன். : **தமிழ்ச் சமூகத்தில் அறமும் ஆற்றலும்**
விடியல் பதிப்பகம்
கோவை
பதிப்பு-2008

40. வரதராசன். மு., : **இலக்கியத்திறன்**
பாரி நிலையம்
சென்னை
முதற்பதிப்பு-1959

41. வரதராசனார் . மு., : **தமிழ் இலக்கிய வரலாறு**
சாகித்திய அகாதெமி
புது தில்லி
பதினோராம் பதிப்பு-2001

42. வையாபுரிப்பிள்ளை. எஸ்., : **இலக்கியச் சிந்தனை**
பாரி நிலையம்
சென்னை
பதிப்பு-1956

**அகராதிகள்**

1. அவினாசிலிங்கம். தி.சு. (பதி.), : **கலைக்களஞ்சியம்**
தமிழ்வளர்ச்சிக்கழகம்
சென்னை
பதிப்பு-1936

2. சாரங்கபாணி. இரா., : **சங்க இலக்கியப் பொருட்களஞ்சியம்**
தமிழ்ப்பல்கலைக்கழகம்
தஞ்சாவூர்
பதிப்பு-1986

3. சிங்காரவேலு முதலியார். : **அபிதான சிந்தாமணி**
குமாரசாமி நாயடு சன்ஸ்
சென்னை
பதிப்பு-1934

4. சுந்தரம். வீ.ப.கா., : **தமிழிசைக் கலைக்களஞ்சியம்**
**இரண்டாம் தொகுதி (க.ஞ.)**
பாரதிதாசன் பல்கலைக்கழகம்
பல்கலை பேரூர்
திருச்சி
பதிப்பு-1994

5. மெய்யப்பன். ச. (பதி.), : **வெற்றித்தமிழ் அகராதி**
மணிவாசகர் பதிப்பகம்
8/7, சிங்கர் தெரு
பாரிமுனை
சென்னை - 108
பதிப்பு-1997

6. ........................, : **மதுரைத் தமிழ்ப் பேரகராதி**
**முதல் பாகம்**
தியாகராஜநிலையம்
திருவட்டீஸ்வரன்பேட்டை
திருவல்லிக்கேணி
சென்னை

# சங்க இலக்கியப் புற நூல்களில் அரசர்களின் ஆளுமை

அண்ணாமலைப் பல்கலைக்கழகத் தமிழியல்துறையில்
முனைவர்ப் பட்டத்திற்காகப் பணிக்கப்பெறும் ஆய்வேடு

ஆய்வாளர்
**கோ. சரண்ராஜ்**
சுழல் எண்: 172506005

நெறியாளர்
முனைவர் **வ. கணபதிராமன்**
இணைப் பேராசிரியர்

தமிழியல்துறை
அண்ணாமலைப்  பல்கலைக்கழகம்
அண்ணாமலை நகர் – 608 002

2021

# முடிவுரை

**"சங்க இலக்கியப் புறநூல்களில் அரசர்களின் ஆளுமை"** என்னும் தலைப்பில் ஒவ்வொரு இயலிலும் இறுதியில் கண்ட மெய்மைகள் ஆய்வு முடிவுரையாக தரப்பட்டுள்ளது.

புறவாழ்க்கை என்ற முதல் இயலில் அகவாழ்வில் பெறப்படக்கூடிய இன்பத்திற்கு காரணம் புறத்தே நிகழும் புறச்செயல்களே ஆகும் என்பதை எடுத்துக்காட்டுகிறது.

புறநால்கள் மக்களின் வீரம், புலமை அவற்றை வெளிப்படுத்தும் திறனை தெளிவுப்படுத்தி புலவர்கள் பாடியுள்ளதை கண்டறிந்துள்ளது.

அரசனது ஒழுக்கம், கடைப்பிடிக்கப்படும் செங்கோல் ஆட்சிமுறை, பாரம்பரிய ஆட்சி செம்மை போன்றவற்றை புறநால்கள் வாயிலாக ஆராயந்துள்ளது.

அரசரின் கடனாக மக்களின் குடி ஓம்புதல், நீர் வளத்தினை மேம்படுத்தி, துன்பமின்றி செல்வ நிலையில் நாட்டைக் காத்த விதத்தினை எடுத்துக்காட்டியுள்ளது.

வீரம் என்பது அனைவருக்கும் வேண்டும். சங்ககாலத்தில் நாட்டுக்காக பெண் செய்த வீரச் செயல்களை எடுத்துக்காட்டியுள்ளது.

'உழவுக்கும் தொழிலுக்கும் வந்தனை செய்வோம்' என்பது போல உழவுத்தொழிலின் மேன்மையினையும், பிறத் தொழில்களையும் புறப்பாடல்கள் வழி ஆராய்ந்துள்ளது. வாணிபம் செய்த நிலையினையும் அரசு வரிப்பெற்ற முறைப் பற்றியும் அறிந்துகொள்ள முடிகின்றது.

கலைகள் பல உண்டு. மக்களின் நாகரிக பண்பாட்டினை எடுத்துரைக்கும் வகைகளில் அமைந்த கலை நுட்பத்திறன்களை இவ் இரண்டாம் இயல் உரைத்துள்ளது.

அரசர்கள் மட்டுமின்றி உழைக்கும் மக்கள் யாவரும் தான் உழைத்த உழைப்பில் பெற்ற ஊதியத்திலிருந்து தம்மால் இயன்ற பொருளை இரவலருக்கு வழங்கியதையும் கொடைத் தன்மை யாவரும் செயல்படுத்திடும் முறையையும் விளக்கியுள்ளது.

தனி மனித வாழ்வைப் பொது வாழ்வில் மேம்படச் செய்வது புறவாழ்க்கை எனலாம். மனிதனின் வீரம், கொடை, புகழ், தொழில், வணிகம், கலை போன்றவற்றின் சிறப்புகளை பிறருக்கும், உலகத்தார்க்கும் புலப்படுத்தும் விதமாக அமைந்துள்ளது.

தன்னை விட வலிமை குறைந்தவரோடு போரிடுதல் அக்காலத்தில் அறமாகப் போற்றப்படவில்லை. தன்னை ஒத்த வலிமை உடையவரோடு போரிடுவதே அறமாக இருந்தது. மனிதனாய்ப் பிறந்த ஆண்மகன் தன் புகழை வீரத்தினால் நிறுவவேண்டும் என்று ஆண்மகனுக்கு இலக்கணம் கூறுவதாய் பாடல் அமைந்துள்ளது. மன்னர் நால்வகைப் படையுடன் பொலிந்தனர். கடற்படை கொண்டு கடலிலும் தம் ஆணையைச் செலுத்தினர் என்பதும் விளங்குகின்றது.

பாரியின் மகளை வேண்டி பெண்கேட்டபொழுது பாரி மன்னன் பெண் கொடுக்க மறுக்கின்றான். ஆகையால் மகள் மறுத்தல் என்னும் துறையாகின்றது. வலிமையான அம்பு செலுத்தும் வில்லாற்றல் பெற்றதால் ஓரி வல்வில் ஓரி என்னும் சிறப்பினைப் பெற்றான் என்பதனை அறியமுடிகின்றது.

ஆண்களுக்குக் குழந்தைப் பருவத்திலேயே அணிவிக்கப்படும் ஐம்படைத்தாலி போன்ற வீரக்குறியீடுகள் வீரத்தை உணர்த்துகின்றது. தமிழகத்தை ஆண்ட முடியுடை மூவேந்தரும் தம் ஒப்புயர்வற்ற வீரச் செயல்களால் உலகப் புகழ் பெற்று வாழ்ந்தனர். வீரத்தின் திருவுருவங்களாகவே விளங்கினர்.

கரிகாற்சோழன் உலகத்தை ஒரு குடையின் கீழ் வைத்து ஆண்டவன். குடி மக்களின்பால் குறையாத அன்பு கொண்டவன். அறங்கூறும் நூல்களை அறிந்து அம்முறையைப் பின்பற்றி ஆட்சி செய்தவன். கரிகாற் சோழன் வெண்ணி என்ற இடத்திலே சேரனையும், பாண்டியனையும் போரிலே தோற்கடித்து வெற்றிமாலை சூடினான்.

பாண்டியன் நெடுஞ்செழியன் சேரன், சோழன், திதியன், எழினி, எருமையூரன், இருங்கோவேண்மான், பொருநன் என்னும் ஏழு மன்னர்களையும் போரிலே புறமுதுகிட்டோடும்படி செய்தவன். தலையாலங்கானம் என்ற இடத்திலே இந்த எழுவருடன் போர் புரிந்து வெற்றி பெற்றான்.

பெரும்பாணாற்றுப்படையின் பாட்டுடைத் தலைவன் தொண்டைமான் இளந்திரையன் ஆவான். இவன் காஞ்சியைத் தலைநகராகக் கொண்டு ஆண்டான். பதிற்றுப்பத்தின் இரண்டாம் பத்தில் குமட்டுர் கண்ணனாரால் பாடப்பெற்ற சிறப்புமிக்கவன் இமயவரம்பன். இவ்வரசரது பெயரே இவனது வீரத்தை, வெற்றியைப் பறைசாற்றுகிறது.

தகரூர் போரில் பெற்ற வெற்றியால் 'தகரூர் எறிந்த பெருஞ்சேரல் இரும்பொறை' என்று போற்றப்பட்ட இரும்பொறை கல்வி, கேள்வி, கொடை தன்மையிலே சிறந்தவன். போர்க் கோலத்துடன் குழந்தையைப் பார்த்தால் குழந்தையும் வீரம் மிகுந்ததாகக் காணப்படும் என்ற நம்பிக்கை சங்ககால மன்னர்களிடையே இருந்துள்ளது. ஆடவர் மட்டுமல்லாது மகளிரும் மறமேம்பாடு மிக்கவராய் திகழ்ந்து வந்திருக்கின்றனர் என்பதை புறநூல்கள் நன்கு விளக்கி இருக்கிறது.

உழிஞை, நொச்சிப் போர்கள் மதிலினை அடிப்படையாகக் கொண்டு நிகழ்வன. பகைவருடைய மதிலைக் கைப்பற்றக் கருதி அதனை வளைத்தல் உழிஞைத்திணை. பகைவருடைய தாக்குதலினின்றும் தம்முடைய மதிலைக்

காத்தல் நொச்சித்திணை. தமிழர் தொல்காப்பிய காலந்தொட்டே போர்க்கருவிகளைக் கையாள்வதிலும், அவற்றை வடிவமைத்துக் கொள்வதிலும் பழக்கமுடையவராக இருந்துள்ளனர்.

சங்ககாலத் தமிழர் போர்க்கருவிகளைப் பெரும்பாலும் இரும்பால் ஆக்கி கொண்டனர். அவற்றைப் புதிதாக உருவாக்கிட, சீர் செய்ய உலைக்கூடங்களை அவர்கள் அமைத்துக் கொண்டனர். தொல்காப்பியர், புறத்திணையியலில் கூறியுள்ள சூத்திரங்களில் 20 சூத்திரங்கள் போர் முறையைப் பற்றியே விவரித்துக் கூறுகிறார்.

தமிழ் மன்னர்கள் ஒருவருக்கொருவர் போர் தொடுக்கின்றபோது அவர்கள் மக்களுக்குச் செய்கின்ற அழிவை தொல்காப்பியர் "எரிபரந்தெடுத்தல்" என்ற ஒரு துறையாகக் காட்டிச் சொல்கிறார். சங்ககாலப் பெண்கள் மனத்திண்மையுடையவராய் விளங்கினர். தம் புதல்வரின் விழுப்புண் கண்டு மகிழ்ந்த வீரத்தாயார் பலர் தமிழ்நாட்டில் இருந்தனர்.

சங்க கால மக்கள் பிறர்க்கென வாழ்தலும், நன்றி மறவாமையுடன் இருந்துள்ளனர். போரிலும், அரசாட்சியிலும் அறமானது சிறப்பாகக் கையாளப்பட்டுள்ளது. சங்க காலத்தில் மக்கள் மனிதநேயத்தோடும், அறநெறியோடும் வாழ்ந்துள்ளனர். மறப்போரிலே மகளிரும் பங்கு கொண்டனர்.

சங்ககாலத்தில் விருந்தோம்பல் பண்பு சிறப்பாக விளங்கியுள்ளது. சங்ககாலத்தில் வாழ்ந்த காவலரும், பாவலராகத் திகழ்ந்து நிலைபேறு உடைய பாடல்களைப் புனைந்துள்ளனர்.

சங்ககால மக்கள் பலவகையான கலைகளில் தேர்ச்சி பெற்றவர்களாகத் திகழ்ந்துள்ளனர். சங்க எட்டுத்தொகை இலக்கியங்களில் புறஇலக்கியங்களாகிய

பதிற்றுப்பத்து, புறநானூறு ஆகிய நூல்களில் அரசர்களின் மாண்புகளை அறியமுடிகிறது.

மன்னர்கள் தலைமையில் நடைபெறும் அரசினை முடியரசு என்கிறார்கள். இதுவே சங்கச் சமுதாயத்தில் நிலவிய ஆட்சி. சீறூர் மன்னன் தான் மக்களுள் ஒருவர் என்ற நிலையில் ஆட்சி புரிந்தான். குறுநில மன்னர்கள் - மக்கள் பிரதிநிதிகளாகவும், வள்ளல்களாகவும் இருந்துள்ளனர். வேந்தர்கள் - அரசர்க்காகத்தான் மக்கள் என்ற நிலையில் ஆண்டனர்.

அரசர்கள் வேளாண்மைக்கு முக்கியத்துவம் அளித்தல், வரி விதிப்பு, ஏற்றுமதி இறக்குமதிக்கு முக்கியத்துவம், புலவர்கள் கற்றோரின் அறிவுரைக் கேட்டல், சேமித்துவைத்த பொருளை வறட்சிக் காலத்தில் மக்களுக்கு அளித்தல் போன்ற உத்திகளைக் கையாண்டுள்ளனர் என்பதை அறிய முடிகின்றது.

அரசு இயங்க பொருள் தேவை, அரசிற்கு வருவாய் பல வழிகளில் கிடைத்ததை அறியமுடிகின்றது. நிலவரி, சொத்துவரி, வணிகவரி, தொழில்வரி, சுங்கவரி, தண்டப்பணம், உப்பள வருமானம் போன்ற பல வழிகளில் அரசு வரியைப் பெற்றதை அறியமுடிகின்றது. மேலும், புரவு, திரை, கொண்டி போன்றவையும் இருந்துள்ளது.

அரசு பெறும் வரி மக்களின் வளத்திற்கேற்ப அமைந்திருந்தது. கொடுக்கும் ஆற்றலுக்கேற்ற வரியினைப் பெற்றான். அந்த வரிகள் முழுவதும் மக்கள் நலன் சார்ந்த பணிகளுக்கே பயன்படுத்தப்பட்டன.

சங்க காலத்தில் குடி மக்களின் நலன்கருதி அரசனே விசாரித்துத் தீர்ப்பு வழங்கினான். அந்நிலையில் அவனுடைய அரசவையே அறங்கூறு அவையமாகத் திகழ்ந்தது.

குடிமக்களுக்குப் பாதுகாப்பளிப்பது அரசின் கடமையாகும். இந்தப் பாதுகாப்பைப் பெற்ற குடிகள் அரசனுக்கு விளைச்சலில் பாகத்தையும், வணிகத்தில் சுங்கத்தையும் வழங்கியதை அறிய முடிகின்றது.

வேந்தர்கள் தன் வாழ்வின் தலையாய கடமையாகத் திறனைக் கொண்டிருந்தனர். எளியவர் முதல் புலவர்கள் வரை வேண்டிய நேரத்தில் மன்னனைச் சந்தித்துப் பரிசில் பெற்றனர்.

சங்க சமூகத்தில் வேந்தன் அறநெறி தவறாமலும், கருணையோடும், வேறுபாடின்றியும், மக்களின் மனதறிந்து ஆட்சி செலுத்தியதால் மக்கள் செல்வச் செழிப்புடன் வாழ்ந்தனர் என்பது புலனாகின்றது.